# குசலவர் சுவாமி கதை

பதிப்பாசிரியர்

இரா. வசுமதி



# குசலவர் சுவாமி கதை

பதிப்பாசிரியர்

**இரா. வசுமதி**



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி
சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | **Kucalavar Cuvāmi Katai** |
| Editor | : | **R. Vasumathy** |
| Published by | : | **International Institute of Tamil Studies,**<br>C.I.T. Campus, Tharamani<br>Madras-600 113 |
| Price | : | Rs. 36.00 |
| Publication No. | : | 203 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | March, 1995 |
| Number of Pages | : | vi + 170 |
| Paper used | : | 16 kg. S.S. Map Litho |
| Size of the book | : | Demy 1/8 octav |
| Printing types used | : | 10 point. |
| Number of copies | : | 1000 |
| Photo-typesetting and Offset Printing by | : | **Pavai Printers Pvt. Ltd.,**<br>142, Jani Jan Khan Road, Royapettah,<br>Madras-600 014. Phone: 83 24 41 |

Published with the financial assistance from the Directorate of Tamil Development, Govt. of Tamil Nadu.

# அணிந்துரை

**ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

நமக்கினிமை தரும்படியாக வாய்த்த நல் அமுதாகிய தமிழ் தொன்மையது. முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழையதாக விளங்குகின்ற அதே வேளையில் பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியதாக இலங்குகிறது.

இவ்வாறு சீரிளமைத் திறத்துடன் தமிழ் இலங்குவதற்குக் காரணம் காலந்தோறும் பல்வேறு சங்கங்களும், இயக்கங்களும் நிறுவனங்களும் ஆற்றி வருகின்ற பணிகளே.

இவ்வகையில் தற்காலத்தில் தமிழுக்குத் தொண்டுசெய்யும் பல்வேறு அமைப்புகளில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பங்கு கணிசமானது. நுட்பமான புலமைமிக்க பல்வேறு ஆய்வுகளில் ஈடுபட்டு பல்வேறு நூல்களை வெளியிட்டு இந்நிறுவனம் தமிழ்ப்பணியாற்றி வருகிறது.

குறிப்பாக இந்நிறுவனத்தின், தொன்மை வாய்ந்த ஆயிரக்கணக்கான ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து வரும் சுவடியியல் துறையின் செயல்பாடு பாராட்டத்தக்க ஒன்று. இத்துறையின்வழி அச்சில் வெளிவராத அழியும் நிலையிலுள்ள பல சுவடிகள் வெளியிடப் பட்டு வருகின்றன. 1979-ஆம் ஆண்டிலிருந்து இத்துறை சுவடியியல் பட்டய வகுப்பினைத் தொடர்ந்து நடத்தி வருகின்றது. ஆண்டுதோறும் ஐந்து மாணாக்கர்களுக்கு மாதம் 300 ரூபாய் உதவித்தொகையும் வழங்கி, சுவடியியலில் பயிற்சியளித்து வருகின்றது. வெறும் ஏட்டுக்கல்வியாகப் பயிலாமல் செயல் முறையிலும் சிறந்து விளங்கும் இப்பயிற்சியில் பங்குபெறுகின்ற ஒவ்வொரு வரும் ஆண்டிறுதியில் நிறுவனத்திலுள்ள யாதானுமோர் சுவடியினைப் பதிப்பிக்கின்ற ஆற்றலினைப் பெறுகின்றனர். அவர்களுள் பலர் நல்ல வேலை வாய்ப்புகளைப் பெற்றுள்ளனர். எதிர் காலத்தில் இத்தகு சுவடியியல் அறிவு படைத்தோர் பலர் பல்வேறு பகுதிகளிலும் பரந்து தமிழுக்குத் தொண்டு செய்வார்கள் எனில் அந்தப் பெருமை முழுவதும் இந்நிறுவனத்தையே சாரும். இத்தகு சுவடியியல் பட்டயவகுப்பினை இந்நிறுவனம் ஒன்றே இதுகாறும் நடத்தி வருகின்றது.

மேலும் இந்நிறுவனம் இதுவரை இரு சுவடியியல் குறுங்காலப் பயிலரங்கினை நடத்தியுள்ளது. அவ்வகையில் அண்மையில் நடைபெற்ற பயிலரங்கில் எண்பது மாணவர்கள் கலந்து சுவடியியல் பயிற்சியை முடித்துச் சென்றனர். இன்னும் இதுபோன்ற பல பயிலரங்குகளை இந்நிறுவனம் நடத்தவுள்ளது.

இங்ஙனம் சுவடியியல் துறை தமிழுக்குத் தொண்டாற்றிவரும் இவ்வேளையில் சுவடிகளில் புதைந்துள்ள மாணிக்கங்களை தமி ழன்னையின் முடியில் பதித்து அழகு பார்க்கும் முகமாகப் பல்வேறு சுவடிகள் நூல்வடிவம் பெற்றுள்ளன.

சித்தமருத்துவம் பெருவழக்காகி வரும் இந்நாளில், கணக் கின்றிக் காணப்படும் சித்த மருத்துவச் சுவடிகளில் சிலவற்றையும், அம்மானை, சதகம் போன்ற சிற்றிலக்கியங்களையும், கதைப்பாடல் கள் சிலவற்றையும் பதிப்பிக்க வேண்டுமென்ற வேணவாவோடு தெரிந்தெடுத்த சில நூல்கள் தற்போது அச்சேறுகின்றன.

இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகிய உத்தர காண்டத்தின் ஒரு பகுதியே குசலவர் சுவாமி கதை என்ற இந்நூலின் கருவாகிறது. லவன், குசன் என்ற இரு பாத்திரங்களின் சிறப்பைக் கூறும் கதைப் பாடலமைப்பிலான இந்நூல் சமுதாயத்தில் நடைபெறும் சீர்கேடுகளைச் சுட்டி மக்கள் நெறிப்பட வாழும் வழிமுறைகளை எடுத்தோதுகின்றது.

இந்நூல் வாயிலாக ஏற்படும் தமிழ்ச் சிறப்பினை எண்ணி இறும்பூதெய்துகின்ற இவ்வேளையில், நிறுவன மேம்பாட்டிற்கு உறுதுணை புரிகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி யமைச்சர் க. பொன்னுசாமி அவர்களுக்கு நன்றிகூற இந்நிறுவனம் கடமைப்பட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சித் துறையின் நிதி உதவி பெற்று வெளிவரும் ஆறு நூல்களுள் இதுவுமொன்று. எங்கள் நிறுவனத்தின்பால் பேரன்பு காட்டுகின்ற தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைச் செயலாளர் திரு. சா. பா. இளங்கோவன், இ.ஆ.ப. அவர்களை யும், இச்சுவடி வெளியீட்டுக்கு நிதிவுதவி நல்கிய தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் சி. செல்வராசு அவர்களையும் இவ்வேளையில் நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

நூல்களின் அச்சேற்றும் பணிகளை முனைப்புடன் செய்த முனைவர் டி. மகாலட்சுமி அவர்களையும், தமிழுலகம் பயன் பெறும் வகையில் இந்நூலைச் சிறப்பாகப் பதிப்பித்துத் தந்த இரா. வசுமதி அவர்களையும் பாராட்டுகின்றேன். குறித்த காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த பாவை பிரிண்டர்ஸ் நிறுவனத் தார்க்கும் நன்றி.

சுவடிகளை வைத்திருப்போர் எங்களது நிறுவன நூலகத்திற்கு அதனை நல்கினால் தமிழில் பல அரிய நூல்கள் வெளிவர உறுதுணை புரிந்த பெருமைக்கும் சிறப்புக்கும் உரியவர்களாவர்.

**இயக்குநர்**

# பதிப்புரை

பழமை வாய்ந்த ஓலைச் சுவடிகளும், தாள் சுவடிகளும் நம்முடைய பாரம்பரியப் பொருள்களாகும். இத்தகைய சுவடிகளைப் பதிப்பித்து வெளியிட வேண்டுமென்பதில் சில நிறுவனங்கள் அக்கறை செலுத்து கின்றன. இதில், 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும்' ஒன்றாகும்.

## நூல்

சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பலவகையான, பல காலத்துச் சுவடிகள் திரட்டி வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் '315' என்ற எண்ணுடைய 'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடி இங்கே பதிப்பிக்கப்பெற்று நூலாக வெளியிடப்பெறுகிறது.

## நூல் — பெயர்க் காரணம்

'குசலவர் சுவாமி கதை' என ஏட்டின் முதற்பகுதியில் நூலுக்குரிய தலைப்பினைத் தந்துள்ளார் ஆசிரியர். மற்ற சில சுவடிகளில் 'குசலவர் கதை', 'குசலவர் கதை இருநூறு', 'ஸ்ரீராமர் அசுவமேத யாகம்' என்று தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

'குசலவர் சுவாமி கதை' என்பது இராமாயணத்தில் வருகின்ற இராமருடைய பிள்ளைகள் இருவரைப் பற்றியது. இறைவனைப் பொது வாக நாட்டுப்புற மக்கள் சாமி, கடவுள் என்று கூறுவதுண்டு. அவ் வகையில் குசலவரை இறைவன் என்று குறிக்கவே இச்சொல் ஆசிரிய ரால் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தெரியவருகிறது.

## நூலாசிரியர் வரலாறு

'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடியின் முதல் ஏட்டில் "இவை கன்னங்குளத்திலிருக்கும் பொன்னையா நாடார் குமாரர் இராம நாடார் படித்து வருகின்ற குசலவர் சுவாமி கதை நன்றாக நீடுழி காலம் வாழ்க" என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் இந்தக் 'குசலவர் சுவாமி கதை'யைப் பாடியவர் யார்? சுவடியில் எழுதியவர் யார் எனத் தெரிந்து கொள்ள இயலவில்லை.

சுவடியில் எழுதப்பட்டுள்ள எழுத்து அமைப்பை நோக்கும்போது சுவடி எழுதியவர் திருநெல்வேலி அல்லது குமரி மாவட்டத்தைச்

சேர்ந்தவராக இருக்கக் கூடுமென்பது புலனாகும். ஏனெனில் 'ழ'கரம் வர வேண்டிய இடங்களில் 'ள'கரத்தையும் 'ய'கரத்தையுமே பயன் படுத்தியுள்ளார். உதாரணமாக,

"எளுபது வெள்ளம் சேனைகளை" (177)

"விரலினாலே நான் எளுதித்தானே
படலமானதில் எளுதித் தாரேன்" (160)

"ஏந்திளை கைகேசி கையில்க் கொடுத்தாள்"

என்று எழுதப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி, நூலாசிரியர் தாம் வாழ்ந்த வட்டாரத்து நாட்டுப்புற மக்களிடையே வழக்கில் இருந்த வழக்காற்றுச் சொற்களையும் ஏட்டில் பயன்படுத்தியுள்ளார். அதாவது, 'சமுசாரி', 'நாடோலம்', 'பத்துத் தலை அரக்கன்' போன்ற சொற்களாகும்.

## நூலின் சிறப்பு

சமுதாயத்தில் இடத்திற்கேற்ப, மக்கள் வாழ்கின்ற சூழ்நிலைக்கேற்ப நாட்டுப்புறக் கதைகள் வேறுபடும். ஏதேனும் ஒரு கருத்தை உள்ளடக்கிய தாயினும், கதை கூறும் பாங்கில் பல வேறுபாடுகள் காணப்படுவது இயல்பு. ஏனெனில், மக்களின் செவிவழிச் செய்தியாய் அமைதல்தான் காரணம்.

'குசலவர் சுவாமி கதை' என்ற இந்தப் பதிப்பு நூலிலும் நாட்டுப் புறக் கதை இயல்பு வெளிப்பட்டு நிற்பதுதான் இந்நூலின் தனிச்சிறப்பு.

லவன், குசன் என்ற இரு பாத்திரங்களின் சிறப்பை விளக்குகின்ற இராமாயணத்தின் ஏழாவது காண்டமாகிய 'உத்தர காண்ட'ப் பகுதியை 'குசலவர் சுவாமி கதை' என்று பெயரிட்டு ஆசிரியர் நூலை அமைத்துள்ளார். இந்தக் கதையை மக்களிடம் பரப்புவதற்கு 'வில்லுப் பாட்டு'க் கலையைத் தேர்ந்தெடுத்து அதன் மூலம் பரப்புகின்றார்.

இந்த வில்லுப்பாட்டின் இடையிடையே மக்களுக்கு அறிவுறுத்தும் வகையில் ஆசிரியர் மூலக்கதையிலிருந்து சிறிது வேறுபட்டு, மக்களுக்கு ஏற்றாற்போல் கதையை அமைத்துள்ளார். அதாவது, இராமாயணத்தின் ஒரு சிறு பகுதியைக் கதைக் கருவாக்கி, இதனுடன் தொடர்புபடுத்தி கிராமங்களில் நடந்த சீர்கேடுகளை வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர்.

மக்களுக்குத் தேவையான பல அரிய கருத்துகளை அறிவுறுத்தக் கருதிய ஆசிரியர், இறையுணர்வோடு கூறுமிடத்து, மக்கள் எளிதில் ஏற்பர் என்பதற்கேற்ப இறையுணர்வுக் கதையோடு, பல நல்ல அறிவுரை

களைக் கூறிச் செல்லுகின்றார். இப்படிக் கையாண்டுள்ள இந்த உத்தியே கதைப்போக்கிற்கு மேலும் சிறப்பூட்டுகின்றது.

## புற அமைப்பு

சுவடியின் அமைப்பைப் புற அமைப்பு, அக அமைப்பு என்ற இரு வகைகளில் நோக்க வேண்டும். புற அமைப்பென்பது சுவடியின் வெளித்தோற்றப் பகுதி.

'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடி 72 ஏடுகளைக் கொண்டுள்ளது. இதன் நீளம் 45 செ.மீ. அகலம் 3.5 செ.மீ. ஆகும். நூலின் துவக்கத்திலும், இறுதியிலும் ஆசிரியர் இரண்டிரண்டு வெற்று ஏடுகளை வைத்துக் கயிற்றால் கட்டியிருக்கின்றார். இருபுறமும் தற்பொழுது சட்டம் எதுவுமின்றியே கட்டப்பட்டுள்ளது.

## அக அமைப்பு

ஏட்டின் அக அமைப்பில் தொடக்கம், நூல் பகுதி, முடிவு என்ற மூன்று பகுதிகள் அடங்கியிருக்கும். இந்தப் பகுப்பே இக்கதையிலும் காணப்படுகின்றது.

நூலைத் தொடங்கும்போது இறைவணக்கத்துடன் தொடங்குவது பொதுவாக அமைகின்ற ஒரு செயல். இந்த அமைப்பிலேயே இக் குசலவர் சுவாமி கதையின் ஆசிரியரும் 'சுவாமி துணை' என்று எழுதி விட்டு அடுத்த ஏட்டில்,

''அரகரா சிவசிவா சிவனே சரணம்
அரனுமை பார்வதி சிவசத்தி சரணம்'' (1)

என்று இறைவணக்கத்துடன் தொடங்குகின்றார்.

## நூல் பகுதி

நூல் பகுதியில் ஆசிரியர் ஏட்டினை நான்கு பகுப்பாக்கி, ஒரு பகுப்பிற்கு 6-லிருந்து 8 வரை வரிகளை அமைத்துக் கதையைப் பாடல் வடிவில் அமைத்துள்ளார். உரை எதுவுமின்றி 'கதைப்பாடல்' போக்கிலேயே சுவடி முழுவதும் பாடல்கள் அமைந்துள்ளன. ஏட்டின் உட்புறத்தில் உட்தலைப்புகள் ஏதுமின்றி, இருபக்கமும் எழுதியிருப்பினும் ஏட்டின் எண்ணை மட்டும் ஆசிரியர் கொடுத்துள்ளார்.

ஆசிரியர் பாடல்களை எழுதும்போது மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளி வைத்தே எழுதியுள்ளார். அதுமட்டுமின்றிப் பாடல்களில் சீர்,

அடி பிரித்தே எழுதப்பட்டுள்ளன. இவற்றை நோக்கும்போது இச்சுவடி பிற்காலச் சுவடியாக இருத்தல் வேண்டும் என்று எண்ணுவதற்கு இடம் தருகிறது. அதாவது,

''துடைக்குச் சரியாக மணல் குவித்து
தோகை மயிலாளை அதில்க் கிடத்தி
ஆடாமல்ச் சற்றும் அசையாமல்
அன்ன லச்சுமியை அதில்க் கிடத்தி
அளகனிளையோனும் தானெளுந்து''

என்று ஏட்டில் அமைந்துள்ளது.

ஏட்டின் இறுதிப் பகுதியில் கதை கேட்டதன் பலனையும் கூறி, வாழ்த்தும் சொல்லி,

''குசலவர் சுவாமி கதை முற்றிற்று
அரிஓம் நன்றாகக் குருவே துணை'' (250)

என்று ஆசிரியர் நூலை முடித்துள்ளார்.

## பதிப்பு முறை

குசலவர் சுவாமி கதைப் பாடல்களில் காணப்பட்ட எழுத்துப் பிழை களை மட்டும் திருத்தி, ஆசிரியரின் போக்கிற்கேற்ப இந்தப் பதிப்பாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. சான்றிற்குச் சில தொடர்களை இங்கு நோக்குவோம்.

1. திருவேள்வியில்த்தான் பிரந்த
   தெய்வக் குதிரைதான் தளைத்து வாள்க
2. புட்டுக்குச் சரியாய் மண்சுமந்து
3. என்றபடி தொளுதானே விபூசணன்
4. ஆள்ப்பாடி றாமா சரணம்மையா
5. எந்தன் கர்ப்பது அளியாவிட்டால்
6. பாலர் இருபேரையும் கையில்ப் பிடித்து

## திருத்தம்பெற்ற பகுதி

1. திருவேள்வியில் தான் பிறந்த
   தெய்வக் குதிரைதான் தழைத்து வாழ்க
2. பிட்டுக்குச் சரியாய் மண்சுமந்து

3. என்றடி தொழுதானே வீடணன்

4. ஆய்ப்பாடி ராமா சரணம்மையா

5. எந்தன் கற்பது அழியாவிட்டால்

6. பாலர் இருபேரையும் கையில் பிடித்து

என்று திருத்திப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. செய்திகள் தொடங்குகின்ற ஒவ்வொரு பாடலின் இடையேயும் உட்தலைப்புகள் கதைக்கேற்றாற் போல் தரப்பட்டுள்ளன. அதாவது 'குரு வணக்கம்', 'தாய், தகப்பன் வணக்கம்', 'இராமர் அரசு' என 250 உட்தலைப்புகள் கொடுக்கப் பெற்றுள்ளன.

## பா அமைப்பு

பாடல்கள் சீர், தளை, தொடை அமைப்பு பொருந்திச் செய்யுள் நடைக்கேற்ப பயின்றுவரல் இயல்பு. எனவே, பாடல்களின் ஓசை நயத் திற்கேற்பச் சீர் பிரித்து, அடிகளைப் பிரித்துப் பதிப்பித்தல் இன்றியமை யாதது.

குசலவர் சுவாமி கதையின் பாடலமைப்பில் சீரும், அடிகளும் தனித் தனியே பிரித்தேயமைந்துள்ளன. எதுகை, மோனை, அமைப்பிற்கேற்ப ஒவ்வொரு சீரும் அமைந்திருத்தல் பாடலுக்கு மேலும் நயம் சேர்க் கின்றது.

ஏட்டில் உள்ளதை உள்ளவாறு பதிப்பிக்க முனைவதைவிட, தவறு களைத் திருத்திப் பதிப்பிக்கும்போதே அப்பதிப்பு சிறப்புடையதாக அமையும். அதன்படியே இப்பதிப்பு மேற்கொள்ளப்பட்டுள்ளது. எனினும்,

> "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
> பொன்னேபோற் போற்றுவர்...."

என்ற நன்னூல் நூற்பாவின்படி, சுவடியாசிரியரின் போக்கினை யொட்டியே பதிப்பு முறை அமைக்கப்பட்டுள்ளது.

## கதைச்சுருக்கம்

குசலவர் சுவாமி கதையின் கதைச்சுருக்கம் வருமாறு:

பதினான்கு ஆண்டுகள் வனவாசம் கழித்து — இராமர் ஆடி கழிந்து ஆவணி முதல் நாள் அயோத்திமா நகருக்கு வருகிறார். மக்கள் ஆரவா ரத்தோடு வரவேற்கிறார்கள். அரசாட்சியை ஏற்றுக்கொண்ட இராமர் வரிப்பணம் பற்றிப் பரதனிடம் வினவுகிறார். விவசாயிகள் வரி கட் டாமல் என்னை ஏமாற்றிவிட்டார்கள் என்கிறார் பரதன்.

இராமர் விவசாயிகளை வரவழைத்து ஆளுக்கொரு பூசணி விதை கொடுக்கிறார். இதை நட்டுப் பயிர்செய்து ஆளுக்கொரு பூசணிக்காய் அரசுக் கடமையாகக் கொடுக்குமாறு ஆணையிடுகிறார். அனுமனுக்கும் அவ்வாறே பூசணி விதை அளிக்கிறார். அனுமனின் பூசேணிச் செடி நன்கு வளர்ந்து காய்க்கிறது. பிற உழவர்களின் செடிகள் பூத்துக் காய்த்து முற்றும்போது அழுகிவிடுமாறு செய்கிறார். உழவர்கள் சொன்ன படி அரசுக்கடமை கொடுக்க இயலாமல் ஒரு காயின் எடைக் குப் பணம் அளிக்க ஒத்துக்கொண்டு தங்கள் பொருளையெல்லாம் இழக்கிறார்கள்.

அரசு புரிந்துவரும் இராமர் ஒருநாள் இரவு இலக்குவனுடன் நகர சோதனை போகிறார். வண்ணான் ஒருவன் ஒழுக்கம் தவறிய தன் மனைவியை அடிக்க, அவள் இராமரிடத்திலே சொன்னால் உன்னிடம் அபராதம் வாங்கிடுவார் என்கிறாள். இராவணன் கூட்டிப்போன சீதையைக் கூட்டி வந்து வைத்திருக்கிற இராமரைப்போல நான் உன்னை வைத்திருப்பேனோ என்கிறான் வண்ணான். இவ்வுரையாடலை இராம இலக்குமணர் கேட்கிறார்கள். இருவரும் அரண்மனை அடைகிறார்கள். அரண்மனையில் கைகேயி சீதையிடம் சென்று இராவணனைப் பற்றி வினவ, சீதை அவனுடைய படத்தை எழுதிக் காட்டிவிடுகிறாள், அப் போது இராமர் வர அப்படத்தைப் படுக்கையின்கீழ் வைத்துவிடுகிறாள். அதனை இராமர் பார்க்க நேருகிறது. கைகேயி தன்னை மிரட்டி வற் புறுத்தியதனால் தானே எழுதியதாக உண்மையைக் கூறுகிறாள் சீதை.

இராவணன் ஆசையின்னும் ஒழியவில்லை என்று பழி கூறிய இராமர் காட்டில் கொண்டுபோய்ச் சீதையை வெட்டி வருமாறு இலக்கு வனுக்கு ஆணையிடுகிறார். செய்தி அறிந்த கோசலை, அயோத்தி மக்கள் ஆகியோர் வருந்துகிறார்கள். ஆயினும் இலக்குவன் சீதையை கானகத் திற்கு அழைத்துச் செல்லுகிறான்; களைப்பால் சீதை தூங்கும்போது விட்டுப் பிரிகின்றான்; வெட்டி வந்ததாக இராமரிடம் கூறிவிடுகிறான். வனத்தில் சீதை வால்மீகி முனிவரின் பாதுகாப்பில் இருக்கிறாள்.

கர்ப்பிணியாக இருந்த சீதைக்கு ஆண் மகவு பிறந்தது. குசலவன் என்று பெயரிடுகிறார்கள். தண்ணீருக்குப் போன சீதை குழந்தையை உடன் கொண்டு செல்கிறாள். வால்மீகி வந்து பார்க்கத் தொட்டிலில் குழந்தை யில்லை. பயந்துபோன வால்மீகி ஒரு தருப்பைப் புல்லைக் கிள்ளித் தொட்டிலில் போட அது ஒரு குழந்தை வடிவாகியது. உண்மையை சீதையறிகிறாள். அசலவர் என்று பெயர் சூட்ட இருவரும் வளர்ந்து வில் வித்தை முதலியன கற்றுத் தேர்கின்றனர்

வேள்வியில் பிறந்த குதிரை ஒன்றை இராமர் அனுமனிடம் ஒப்படைக்கிறார். அது கட்டறுத்துக்கொண்டு கானகத்தில் செல்ல அதைக்கண்ட குசலவர்கள் குதிரையை அடக்கிப் பிடித்துச் செல்லு கின்றனர், அனுமன் உதவியால் குதிரை இருக்கும் இடம் அறிந்து வந்து இராம இலக்குமணர் சிறுவர்களுடன் போர் செய்து மயக்கம் அடைகி றார்கள். உண்மை அறிந்த சீதை வருந்தி இராமரை உயிர்ப்பிக்கச் செய் கிறாள். பின் இராமரின் ஆணைக்கு ஏற்ப சீதை தீக்குளித்து எழு கிறாள். அனைவரும் அயோத்தி அடைகின்றனர். குசலவர்க்கு முடி சூட்டி இராமரும் சீதையும் விண்ணுலகு அடைகின்றனர்.

## நடை

இந்தக்'குசலவர் சுவாமிக் கதை'யில் ஆசிரியர் சில நடைகளைக் கையாண்டு பாடல்களை அமைத்துள்ளார்.

### அந்தாதி நடை

'அந்தம்', 'ஆதி' என்ற இரு சொற்களை உள்ளடக்கியது. 'அந்தம்' என்றால் 'முடிவு' என்றும், 'ஆதி' என்றால் 'தொடக்கம்' என்றும் பொருள். இந்த நடையமைப்பு, பாட்டில், ஓரடியின் ஈற்றில் உள்ள எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்த அடியின் தொடக்கமாக அமைவது. இதனை,

''எழுத்தந்தாதி, அசையந்தாதி, சீரந்தாதி, அடியந்தாதி'' எனத் தொல்காப்பியமும்,

''அந்தாதியாவது ஓரடியின் அல்லது ஒரு செய்யுளின் ஈற்றில் வருஞ் சொல் அடுத்த அடியின் அல்லது செய்யுளின் முதலில் வருவது'' எனத் தண்டியலங்காரமும் அந்தாதி நடைக்குரிய விளக்கத்தைச் சுட்டிச் செல்கின்றன.

''துடியிடையாள் வயிற்றில் கெர்ப்பம் தோன்றித் தரித்ததுவே
தரிக்க கருவுதன்னை....'' (2)

என்றும்,

''சோலைக்கிளி மொழியாள் சரஸ்வதி மாதாவை யான்மறவேன்
மறவேன் குருபாதம் மாட நாடார்குடி யில்வாழும்'' (45)

என்றும்,

''சமுசாரி மார்களும் போனபோது சுவாமி நாயகர் ஏது
சொல்வார்
வாரும் பிள்ளாயடா வாளனுமான்....'' (22)

எனக் குசலவர் சுவாமி கதையில் சீர் அந்தாதியமைப்பும், அசையந்தாதி அமைப்பும் பயின்று வரல் அறியமுடிகிறது. சிற்சில இடங்களில் ஆசிரியர் எழுத்தந்தாதியையும் அமைத்து இந்தக் கதைப் பாடலை வெளிப்படுத்துகின்றார். ஆசிரியர் தன்னுடைய நினைவாற்றலுக்காக வும் ஈற்றுச் சொற்களைத் திரும்பவும் அடுத்த அடியின் முதற் சொல் லாகக் கூறுவதுண்டு. இந்த உத்தி எல்லாக் கதைப்பாடல்களிலும் காணப்படும். இந்த அமைப்பு அந்தாதி நடைக்கும் பொருந்தி வருவ தாகும்

அதுமட்டுமின்றி 'தாலாட்டு' நடையையும் கதைப்பாடலில் அமைத் துள்ளார்.

## தாலாட்டு

தால் - நாக்கு, ஆட்டு - அசைத்தல். எனவே நாவினையசைத்துப் பாடுதல் என்று பொருள். இந்தத் தாலாட்டுப் பாங்கில் பாடலையமைத் தல் என்பது நாட்டுப்புற மக்களுக்கே உரிய முறையாகும். நாட்டுப்புறப் பெண், குழந்தையைத் தூங்க வைப்பதற்குத் தாலாட்டுப் பாடலைப் பாடித் தூங்கவைப்பாள். இந்தப் பாடலில் பொருளைப் புலப்படுத்தும் விதமாகச் சொற்கள் இடம்பெறுவதுடன், பொருளைப் புலப்படுத்தாத ஒலிக்குறிப்புச் சொற்கள் பெரும்பான்மை இடம் வகிப்பதே இதன் சிறப்பாகும்.

சீதை, குசலவரைத் தங்கத் தொட்டிலில் கிடத்தி தாலாட்டுப் பாடித் தூங்க வைக்கிறாள். இந்தத் தாயின் துயரங்கள் அவள் பாடும் பாட்டின் வழி வெளிப்படுகின்றன. அதாவது, நீ காட்டில் பிறந்ததால் யாரும் உன்னைப் பார்க்க வரவில்லையென்றும்; அயோத்தியில் பிறந்திருந்தால் பலரும் வந்து உன்னைப் பார்த்துப் பூரித்துப் போயிருப்பர் என்றும்

கூறித் தன்னுடைய ஆதங்கத்தை வெளிப்படுத்துகின்றாள். என்னுடைய இன்னல்களையெல்லாம் தீர்க்க வந்த மழலைச் செல்வமாகிய நீ உறங்க வேண்டும் என்று கூறி,

''... .... பள்ளிகொண் டோன்தேவி தாலாட்ட
ராரிராரி ராராரோ அரும்பொருளே ராரிராரோ'' (108)

என்றும்,

''கண்மணியே உறங்குறங்கு கண்ணே ராரிராரி ராராரோ''(109)

என்றும் தாலாட்டுப் பாடுகின்றாள்.

தாலாட்டு நடையிலே, சீதை தன் துயரத்தை வெளிப்படுத்தும்போது ஆசிரியர் சில அழகிய தொடர்களை அமைத்துள்ளார். அத்தகைய தொடர்கள் வருமாறு:-

''அம்பு பட்டதோர் மான்போலே
அலறி அழுதாளே லச்சுமியும்
குண்டு பட்டதோர் மான்போலே
குழறி அழுதாளே லச்சுமியாள்'' (79)

என வரும் தொடர்கள் சீதை இராமரைப் பிரிந்த நிலையில் பாடுவதாக அமைவனவாகும். அதேபோல் சீதையின் பிரிவால் இராமர் வருந்தும் போதும் பாடல்கள் வெளிப்படுகின்றன. அதாவது,

''அம்பு பட்டதோர் மான்போலே
அலறி அழுதாரே கோபாலர்
குண்டு பட்டதோர் மான்போலே
குமுறி அழுதாரே கோபாலர்'' (92)

என்று இராமரும் பாடுவதாக அமைந்துளளது. இது மட்டுமின்றி,

''கடுவாய் புலியது கொண்டு போச்சோ
காட்டானை சிங்கம் கொண்டு போச்சோ'' (144)

என்றும்

''மாண்டிறந்து போன இராவணனை
மறுத்துப் படத்திலே எழுதலாமோ
செத்திறந்து போன இராவணனைத்
திரும்பப் படத்திலே எழதலாமோ
பட்டிறந்து போன இராவணனைப்
படல மானதில் எழுதுவானேன்'' (67)

எனவும் அமைந்துள்ள தொடர்கள், கதையில் கதாபாத்திரங்களுக் கேற்பப் பலமுறை இடம்பெறுகின்றன. எதுகை, மோனை யமைப் புடன, ஓசை நயத்துடன் அமைந்துள்ள இந்தத் தொடர்களை மீண்டும் கையாளுகின்ற ஓர் உத்தியைக் கொண்டு நடையமைப்பை அழகுற அமைத்துள்ளார்.

வில்லின் இசைக்கேற்ப, அழகிய சொற்கள்ள உள்ளடக்கி, எளிமை யான நடையில் செவிநுகர்வோருக்கு ஈடுபாட்டை அமைத்துள்ளார்.

## உவமை

எந்த ஒரு பொருளையும் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளோடு ஒப்புமைப்படுத்திப் பேசுவது நடைமுறை வழக்கிலும் உண்டு; ஏட்டு வழக்கிலும் உண்டு.

கவிஞர்கள், செய்யுள் இயற்றும் ஆசிரியர்கள் பாடல்களைப் பாடும் போது பாட்டின் நடைக்கு அழகு சேர்க்கப் பலவகை அணி நலன்களைக் கையாள்வர். பெரும்பாலும் உவமையணி அதிகமாகக் கையாளப்படுவ தாகும். சில இடங்களில் உருவக அணியும் இடம்பெற்றிருக்கும்.

செய்யுளுக்கு அழகூட்ட வருகின்ற அணிகளில் உவமையணிக்குத் தொல்காப்பியர் ஓர் இயலையே வகுத்துள்ளார். அதுவே, தொல் காப்பியப் பொருளதிகாரத்தில் அமைந்துள்ள 'உவமையியல்'.

''வினை பயன் ,மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்''

என்று தொல்காப்பியமும்,

''பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை''

என்று தண்டியலங்காரமும் உவமையின் இயல்பை எடுத்துரைக்கின்றன.

''உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை''

என்று கூறுவதன்மூலம் உவமையின் பொதுப் பண்பு உயர்ந்த பொரு ளைச் சிறப்பிக்கும் பொருட்டு கையாளப்படுகிறது. எனினும் சிறு பான்மை இழிந்த தன்மையிடத்தும் உவமை அமைதல் உண்டு என்ப தாகும்.

குசலவர் சுவாமி கதையிலும் ஆசிரியர் சில இடங்களில் பாத்திரங்களின் சிறப்பை உயர்த்திக் கூறுகின்றபொழுது உவமைப்படுத்தி விளக்குகின்றார். அதாவது சீதையின் துயரத்தை வெளிப்படுத்துகின்ற பொழுது,

''அம்பு பட்டதோர் மான்போலே
அலறி அழுதாளே லச்சுமியாள்
குண்டு பட்டதோர் மான்போலே
குமுறி அழுதாளே லச்சுமியாள்'' (79)

என்று உவமைப்படுத்தி அந்தத் தொழிலின் தன்மையை மிகைப்படுத்திக் கூறுகின்றார். அம்பு பட்டவுடன் துடிதுடிக்கும் மானைப் போலவும், குண்டு பட்டவுடன் துடித்துப் போகும் மானைப் போலவும் லச்சுமியானவள் இராமரின் சொல்லைக் கேட்டவுடனே துடிதுடித்துக் கதறுகின்றாள். மற்றுமொரு இடத்தில்,

''மானைவிட்டுக் கலை பிரிந்ததுபோல்
மாயவ ராமரும் பிரிந்தாரோ
தேனைவிட்டு யீ பிரிந்ததுபோல்
தெய்வப் பெருமாளும் பிரிந்தாரோ
மயிலும் குயிலும்போல் வைத்திருந்தார்
இதுவரைக்கும் எங்கள் கோபாலர்
மயிலைவிட்டுக் குயில் பிரிந்ததுபோல்
மாயவ ராமரும் பிரிந்தாரோ''

என்று ஆற்றாமையை வெளிப்படுத்துகிறார் ஆசிரியர். உவமைப்படுத்தியிருக்கும் பொருள்கள் சிறியதாக இருந்தாலும் அதன் தன்மையை இங்கு ஒப்புநோக்க வேண்டும்.

தேனிருக்கும் இடத்தை நாடி நிச்சயமாக ஈக்கள் சென்றுகொண்டே இருக்கும். வண்டுகளை ஆசிரியர் உவமிக்காது ஈக்களை உவமித்துள்ளார். ஏனெனில் வண்டு தேனைக் குடித்துவிட்டுப் பறந்துவிடும். ஆனால் ஈக்கள் அப்படியில்லை. தேன் இருந்தாலும் இல்லையெனினும் அந்த நறுமணத்திற்காகவே மலரைச் சுற்றிக் கொண்டேயிருக்கும். அதுபோல இராமரை விட்டுப் பிரியாதிருந்த சீதையானவள் தற்பொழுது தன்னை விட்டு இராமர் பிரிந்துவிட்டாரே என்று ஏங்கிப் பாடுவதாக அமைத்துள்ளார்.

உவமை கையாளப்பட்டுள்ள இந்தப்பாடலில் 'போல' என்ற உருபு வெளிப்பட்டு நிற்பதாலும், தொழிலைச் சிறப்பிக்கும் பொருட்டு உவமை அமைந்ததாலும் தொழிலுவமையணியாக அமைகின்றது.

இவ்வாறு உவமையணியைப் பாடல்களில் அமைத்து அலங்கார மாக்கிப் பாத்திரங்களின் தன்மையை, சிறப்பை எடுத்துரைக்கின்றார்.

## உருவகம்

அணிவகைகளுள் ஒன்றான உருவகமும் செய்யுளுக்கு நயம் சேர்ப்ப தாகும்.

உவமைக்கும் உருவகத்திற்கும் உள்ள வேறுபாடென்பது இந்தப் பொருள் மற்றதைப்போல் உள்ளது என்று எடுத்துக் கூறாது இந்தப் பொருளே அது என்று ஒன்றாகவே நினைத்துக் கூறுவது. இதைத்தான் உருவகம் என்பர். இதனை,

''உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றென மாட்டினஃ துருவகமாகும்''

எனத் தண்டியலங்காரம் எடுத்துரைக்கின்றது.

எடுத்துக்காட்டாக, 'மதிமுகம்' என்ற சொல் மதி போன்ற முகம் என்பதால் இச்சொல் உவமையாகிறது. இதையே 'முகமதி' என்று கூறினால் உருவகமாகிறது. ஏனெனில் முகத்தையே மதியாகக் கூறுதல் தான் உருவகத்தின் இலக்கணம்.

இக்கதைப் பாடலிலும் ஆயிழை சீதை தன் குழந்தையைத் தாலாட் டுப் பாடித் தூங்க வைக்கிறாள். அப்போது, ஆசிரியர் உருவகச் சொற் களைக் கையாண்டு நடையமைப்பை மேலும் சிறப்பாக்குகின்றார். சீதை பின்வருமாறு பாடலைப் பாடுகின்றாள்:

''வாழைக் குருத்தோ நீ
வருக்கைப் பிலாச்சுளையோ நீ
தென்ன மரக்கனியோ நீ
தெய்வச் சூடாமணியோனீ''

என்ற அடிகள் குழந்தையைப் பார்த்து வாழைக்குருத்துப் போல் என்று சொல்லாமல் வாழைக்குருத்து, வருக்கைப் பலாச்சுளை, தென்னமரக் கனி, தெய்வச் சூடாமணி எல்லாமே நீயாக இருக்கிறாய் மன்று பாச வுணர்ச்சியில் உருவகமாக்கிப் பாடுகின்றாள்.

இவ்வாறு ஆசிரியர் அணியமைப்பில் உவமையணியையும், உருவக அணியையும் பயன்படுத்திக் கதைப்பாடலின் நடையமைப்பை அழ கூட்டிக் கதைப்பாங்கினைச் சிறப்பாக்கியுள்ளார்.

## மரபுத்தொடர்கள் (பழமொழி)

மரபுத் தொடர்கள் என்பது பழமொழியின் அமைப்பிலிருந்து சிறிது வேறுபட்டுக் காணப்படுவதாகும். முதலில் 'பழமொழி' என்றால் என்னவென்பதை அறிதல் இன்றியமையாதது.

### பழமொழி

''பழமொழி ஒரு முதிர்ச்சியுள்ள; வாழ்க்கைத்
தத்துவத்தை, அல்லது ஒரு பேருண்மையைச்
செறிந்த சொற்களால் விளக்குவதாகும்'''

என்று பழமொழிக்கு விளக்கம் தருகின்றாா புலவர் இரா. சுரேந்திரன் அவர்கள்.

பழமொழியின் அமைப்பு குறுகிய சொற்களால் ஆனது. இதன் நோக்கம், எளிதில் பொருளைப் புரிய வைத்தல், புரிந்ததை மனதில் பதிய வைத்தல் என்பதாகும்.

பழமொழிகளை இந்தக் குசலவர் கதைப்பாடலில் ஆசிரியர் கையாண்டுள்ளார். அதை அப்படியே கையாளாது, சிறிது தொடரை மாற்றிக் கையாண்டுள்ளதால் மரபுத் தொடராக இதில் கொள்ளப்படுகிறது.

''பழமொழிகளை அப்படியே பயன்படுத்தாமல்
பாட்டு மொழியில் சிறிது மாற்றிக்
கொள்ளவதுமுண்டு''

என்று சு. சண்முகசுந்தரம் கூறுவதற்கேற்ப இக்கதைப்பாடலில் ஆசிரியர் மாற்றிப் பயன்படுத்தியுள்ளார். அந்தத் தொடர்கள் பின்வருமாறு:

''குளங்களை வெட்டி முறிப்பதிலும்
கொடிய பாவமல்லோ பெண்பாவம்
அந்தணரை வெட்டிக் கொல்வதிலும்
அதிக பாவமல்லோ பெண்பாவம்
காராம் பசுவைவெட்டிக் கொல்வதிலும்
கன்னியர் பாவம் அதிகமல்லோ'' (45)

என்றும்;

"தார மிழந்த மனைதனிலே
சாத்திரங் கள்சொல் லலாமோ
மனையாட் டியில்லா மனைதனிலே
மறையோ ரமுது புசிக்கலாமோ" (132)

என அமைந்திருப்பதை நோக்கும்போது ஆசிரியர் பழமொழியின் அமைப்பைச் சிறிது மாற்றிக் கையாண்டிருக்கின்றாரென்பதை அறியலாம்.

'மனைக்கொடியில்லா வீடு பாழ்' என்ற பழமொழித் தொடருக் கேற்ப மனைவியில்லாத மனையில் சாத்திரங்கள் சொல்லக்கூடாது என் பதும், அந்த வீடு பாழாகிப் போனதற்குச் சமம் என்பதை எடுத்துரைக் கின்றார் ஆசிரியர்.

## மூலக்கதை

'குசலவர் சுவாமி கதை' என்பது உத்தர காண்டத்தில் அமைந்துள்ள ஒரு பகுதியாகும்.

### உத்திரகாண்டம்

இராமாயணத்தில் காண்டங்களைப் பொதுவாக ஆறு காண்டங்கள் என்றே கூறுவர். ஆனால் ஏழாவது காண்டமாக 'உத்திர காண்டம்' என்ற ஒன்று உள்ளது. இந்தக் காண்டத்தைப் பொதுவாக அறிஞர்கள் கணக்கில் கொள்ளமாட்டார்கள். ஏனெனில் பிற்காலத்தில் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்று எண்ணுவதுதான் காரணம்.

"உத்திரகாண்டம் - The Seventh book of the Ramayana, so called because it relates to events after the coronation of Rama; prob. also because it is a later work that has been appended to Valmiki's Ramayana; இராமயணத்தின் இறுதிக் காண்டம்"[1]

என்று தமிழ்ப்பேரகராதி விளக்கம் தருகிறது. இந்தக் காண்டத்தை இடைச்செருகலாக இராமயணத்தில் சேர்த்திருக்கிறார்கள் என்று பலரும் கூறுகின்ற காரணத்தால் இந்தக் காண்டத்தைப் பற்றிய ஆராய்ச்சிக் கருத்துகள், ஆராய்ச்சி நூல்கள் எதுவும் அதிகமாகக் காணப்படவில்லை. ஒரு சில நூல்களே காணப்படுகின்றன.

## ஆசிரியர்

'வால்மீகி' முனிவர் எழுதியருளிய வால்மீகி இராமாயணத்தில் 'உத்தரகாண்டம்' ஏழாவது பகுதியாகும். தமிழில் இக்காண்டத்தைக் 'கம்பரே' எழுதியருளினார் என்றும், 'ஒட்டக்கூத்தர்' எழுதியருளினார் என்றும் கருத்துகள் நிலவுகின்றன.

ஆயினும், தமிழைப் பொறுத்தவரையில் போதிய சான்றுகள் கிடைக்கப் பெறாமையால் ஆசிரியர் யாரெனத் துணிவதற்கில்லை. எனினும், வடமொழியிலும் தமிழிலும் இப்பகுதி இடம்பெற்றிருத்தலை அறிய முடிகின்றது.

## இடைச்செருகல்

இடைச்செருகல் என்பது ஒரு நூல் எழுதி முடித்தபின், சில பாடல்களையோ, சில செய்திகளையோ நூல் எழுதி முடித்த காலத்திற்குப் பிறகு வேறு ஒருவர் எழுதி இடையில் சேர்ப்பதுதான்.

கம்ப இராமாயணத்திலும் இந்த இடைச்செருகல் என்பதைப் பற்றிப் பின்வருமாறு கலைக்களஞ்சியம் எடுத்துரைக்கின்றது.

> ''முக்கியமாக பல காண்டத்தில் பல பாகங்களும், உத்தரகாண்டத்தின் பெரும்பாகமும் இடைச்செருகல்கள் என்றும் சொல்லப்படுகின்றன.''[2]

உத்த்ரகாண்டத்தின் வழிதான் வால்மீகி முனிவர் 'இராம காதை'யை உலகிற்கு அளிக்கின்றார். எனவே, இக்காண்டம் வால்மீகி இராமாயணத்தில் இறுதிக் காண்டமாக அமைந்திருப்பினும், இந்தக் காண்டத்தின் மூலம்தான் இராமாயணம் அறியப்பெற்றதாகும். இதனை,

> ''சக்கரவர்த்தித் திருமகன் சந்நிதானத்தில்
> குசலவர்கள் கானம் பண்ணினபடி இருபத்து
> நாலாயிரம் கிரந்தங்களடங்கிய ஆதி
> காவியமான ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்கு...''[3]

என்று அண்ணங்கராசார்ய சுவாமிகள் கூறுவதன் மூலமும் அறிய முடிகிறது.

**கதை**

இராமர், இராவணனை வென்று பட்டாபிஷேகம் நடந்தவுடன் அயோத்தியை அரசாண்டிருக்கின்றார். பல நாள் இராவணன் வீட்டில் தங்கியிருந்த சீதையை உடன் வைத்திருப்பது குறித்து ஊர்மக்கள் அவதூறு பேச, இராமர், கருத்தரித்திருக்கின்ற சீதையை மீண்டும் வனத்தில் விட்டுவிடச் சொல்லுகின்றார். அதன்படி இலக்குமணன் வனத்தில் விட்டுவிட, அங்கு வால்மீகி முனியின் உதவியுடன் சீதை இரண்டு குமாரர்களைப் பெற்றெடுக்கின்றாள். மூத்தவன் 'குசன்' எனவும், இளையவன் 'லவன்' எனவும் பெயர் பெற்றுச் சிறந்த முறையில் வளர்ந்து பல வில் வித்தைகளைக் கற்கின்றனர். வால்மீகி முனிவர் உரிய காலத்தில் இவ்விருவருக்கும் 'இராமருடைய சரித'த்தைக் கற்பிக்கின்றார்.

குசலவர்கள் இராம காதையைப் பாடி வருகையில், இராமர் அசுவமேத யாகம் செய்தது தெரிந்து வால்மீகர், தன் சீடர்களுடன் அந்த இடத்திற்குச் செல்கின்றார். குசலவர்கள், இராம காதையைப் பாடுகின்றனர். அப்பொழுது இராமபிரான் குசலவர்களிடம்,

> *சிறுவர்காள்: நீங்கள் பாடும் இக்காவியம் எவ்வளவு பெரியது? எதுவரையில் இயற்றப்பட்டுள்ளது? இம்மகா காவியத்தை இயற்றியவர் யார்? அவர் இப்போழுது எங்கே எழுந்தருளியிருக்கின்றனர்?''[4]*

என்று கேட்டவுடன், அவர்கள்

> *''மகாப் பிரபுவே: இக்காவியத்தை இயற்றியது வால்மீகி பகவான்; அவர் இப்போழுது இந்த யாகத்திற்கு இவ்விடமெழுந்தருளி யிருக்கின்றனர். இப்பிரபந்தம் இருபத்தினாலாயிரம் சுலோகங்களும் நூறு உபாக்கியானங்களுமடங்கியது. இதனை ஆதிமுதல் ஐந்நூறு ஸர்க்கங்களாகவும் ஆறு காண்டங்களாகவும் வகுத்து அவற்றுடன் உத்தர காண்டமும் சேர்த்துச் செய்தருளியிருக்கின்றனர்''[5]*

என்று கூறியதைக் கேட்டவுடன் மகிழ்ந்த இராமன் வால்மீகி வாயிலாகச் சீதையின் புதல்வர்கள் இவர்கள் என்பதையறிகின்றார்.

சீதை, தான் தூய்மையானவள் என்பதை உலகிற்கு இராமன் நிரூபிக்கச் சொல்ல, சீதை உடனே, தான் பதிவிரதை என்பது உண்மையானால்

''என்னைப்பெற்ற பூமாதேவி எனக்குத்
தன்னுள் இடங்கொடுக்கக்கடவள்''[6]

என்று மூன்று தரம் சபதம் செய்தவுடன் மண்ணைப் பிளந்து கொண்டு பூமாதேவி வெளிப்பட்டுச் சீதையை அணைத்துக் கொண்டு மறைந்துவிடுகின்றாள். இந்நிலையைக் கண்ட இராமர் தன்னுடைய நிலைமையினை உணர்ந்து, சிலகாலம் ஆட்சி புரிந்து பின்னர் பரம பதத்தை அடைவதாக, வால்மீகியின் உத்தரகாண்டக் கதை அமைந்துள்ளது.

## ஒப்பிடல்

'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடியில் உள்ள கதையமைப்பை, மூலக்கதையான வால்மீகி உத்தரகாண்டத்துடனும், குசலவர் கதை என்ற மற்றொரு சுவடியிலுள்ள கதையுடனும் ஒப்பிட்டுக் கூற முனைவதே இந்தப் பகுதி. கதையின் முக்கியமான சில இடங்களை மட்டும் ஒப்புமைப்படுத்தி இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

### குசலவர் கதை

வண்ணான் ஒருவனின் பழிச்சொல்லைக் கேட்டு இராமர் சீதையை மறுமுறை காட்டிற்கு அனுப்புகின்றார். இலக்குவன் சீதையைக் காட்டில் விட்டுவிட, காட்டில் இயற்கை சீதைக்குத் துணையிருக்கிறது.

''கதலியும் பசை மாவுங் காவினங் கனிகள் சிந்த
மதுமலைச் சோலைதோறும் வானரந் தாவியாட
யிதமுடன் புள்ளி மானும் யிரலையும் விரும்பி நிற்க
புதுமையாய் வீற்றிருந்தாள் பூமகள் காவினோடே''

இப்படி இயற்கை புடைசூழ வீற்றிருக்கும் இப்பூமகள் வால்மீகி முனிவரின் ஆசிரமத்தில் தங்கியிருக்கப் புத்திரன் தன்னைப் பெற்றெடுக்கின்றாள். இந்தப் பிள்ளைக்கு 'லவன்' என்றும் தெர்ப்பையால் உருவான பிள்ளைக்குக் குசன் என்றும் பெயரிடுகின்றனர். இதைத்தான்,

''மாலையங் குழலாள் பெத்த மைந்தமா லயனு மென்றுஞ்
சீலமாய் முனிவன் வைத்த தொர்ப்பையால் வந்த பிள்ளை
சாலவே குசனு மென்று சாத்தினார் நாமந் தன்னை
வேலைசூழ் பூத லங்கள் மெச்சவே வீற்றி ருந்தார்'' (45)

என்ற பாடல் தெரிவிக்கின்றது.

லவன், குசன் இருவரும் வளர்ந்து கல்வி, வித்தைகள் பல கற்று வருகின்ற காலத்தில், இராமரின் அசுவமேத யாகக் குதிரையைக் கட்டி வைத்துவிட, உரியவர்கள் கேட்கும்போது தர மறுக்கின்றனர். அப்பொழுது அவ்விருவரும் எதிரிகளிடம் போர் புரிகின்றனர். சீதை பாலகர்களுக்குச் சூடாமணியைத் தர, அதன் உதவியால் இராமருடன் போர் புரிகின்றனர். இறுதியில் இராமர், தன்னுடைய பிள்ளைகள் என்பதையறிந்து மகிழ்ச்சியடைகிறார்.

''தாதைய ரிவரேயென்று தனயர்கள் உணர்ந்துகொண்டு
பாதமே வீழ்ந்து போற்றிப் பணிமணி மகுடம் போற்றி''

என்பதற்கேற்பப் பெற்றோர்களைத் தெரிந்துகொண்ட இருவரும் பாதத்தை வணங்கி மகிழ்கின்றனர்.

இக்கதை பாமர மக்களிடம் வில்லுப்பாட்டுக் கலையின் மூலமாக எடுத்துச் சொல்லப்பட்ட ஒன்றாகும். சீதைக்குப் பிறக்கும் குழந்தைகளில் ஒன்று தெர்ப்பையால் உருவானதாக அமைகின்ற செய்தி மூலக் கதையிலிருந்து மாறுபட்ட ஒன்றாகும். தெர்ப்பையால் உருவாக்கப்பட்ட குழந்தை என்ற செய்தி 'குசலவர் சுவாமி கதை'யிலும் கூறப்படுகிறது. இதை நோக்கும்போது நாட்டுப்புற மக்களிடம் இந்தக் கருத்து பரவியிருந்த காரணத்தினால் ஏட்டில் இடம் பெற்றிருத்தல் வேண்டும்.

அதாவது மூலக்கதையில்,

''இரவில் சீதாதேவி இரண்டு குமாரர்களை ஈன்றனள். இதனைச் செவியுற்ற வால்மீகி முனிவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் எழுந்து சென்று பாலசந்திரன் உதயமானது போல் மிக்க ஒளி பெற்று விளங்குகின்ற ராஜகுமாரர்களைக் கண்டு களிப்புற்று துஷ்ட தேவதைகளும், கொடிய ராக்ஷசுகளும் குழந்தைகளை யணுகாதபடி அவைகளுக்கு ரக்ஷை செய்யலாயினர். எங்ஙனமெனில், குசம் என்கிற தருப்பைப்புல் ஒரு பிடி எடுத்து அதை இரண்டாக இடையே தரித்து அவையிரண்டிலும் ரக்ஷா மந்திரம் ஜபித்து அதன் நுனியாகிய குசத்தினால் மூத்த குமாரனையும், அடியாகிய லவத்தினால் இளைய குமாரனையும் துடைத்துப் புனிதராக்குமாறு.... தவ்சிகளிடம் அவற்றைக் கொடுத்தனர்''[7]

இந்த ரக்ஷயை இருவருக்கும் கட்டினர். குசத்தினால் செய்த ரக்ஷை யால் தடவப்பட்டவன் 'குசன்' என்றும், லவத்தினால் செய்த ரக்ஷை யால் தடவப்பட்டவன் 'லவன்' என்றும் அழைத்தனர். இதே கருத்து.

> ''இராமனுக்கும் சீதா பிராட்டிக்கும் பிறந்தவன், வான்மீகரால் காவல் காரணமாகத் தருப்பையின் அடிப்புறத்தால் தடவப் பெற் றதால் இப்பெயர் பெற்றவன்[8]''

என்பதாலும் உறுதிப்படுகிறது.

இந்தக் கருத்தினை முழுவதுமாக அறியாததால், தெர்ப்பையால் ஒரு குழந்தையை உருவாக்குவதும், 'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடியில் அந்தக் குழந்தைக்கு 'அசலவன்' என்று பெயரிட்டழைத்தலுமாகியதொரு மாற்று வடிவம் நாட்டுப்புற மக்களிடம் வழங்கியிருக்கிறது என்பதாகும்.

அடுத்து, வால்மீகி உத்தரகாண்டத்தில் அமைந்துள்ள, சீதை தன் கற்பை மீண்டும் நிலைநாட்டும்போது நிலம் வெடித்துப் பூமிக்குள் மறை கின்ற செயல் 'குசலவர் சுவாமி கதை' என்ற சுவடியில் காணப்பட வில்லை. அச்சுவடியில், சீதை தன் குசலவனையும், அசலவனையும் அணைத்துக் கொண்டு வேள்வியில் குதிக்க, தீயின் சீற்றத்தால் தெர்ப்பை யால் உருவான அசலவன் கருகிவிட, சீதை குசலவனை மட்டும் கையில் பிடித்து உயிர்பெறுகிறாள். அதுமட்டுமின்றி, குசலவன் உயிர் பெறு கிறான். குசலவன் தந்தையிடம் (இராமனிடம்) அசலவனை உயிர்ப்பித் துத் தரச்சொல்லி வேண்ட இராமன் உயிர்ப்பித்துத் தருகிறார். பிறகு இருவருக்கும் பட்டாபிஷேகம் செய்து வைக்க, சீதாராமர் வைகுண்டத் திற்குச் செல்வதாக அமைந்துள்ளது.

இதை நோக்கும்போது பலர் வாயிலாகக் கதைகளைக் கூறக்கேட்டும், அவரவர்கள் தங்களுக்கேற்ப மாற்றியமைத்துக்கொண்டு குசலவரின் கதையை மக்களுக்கு எடுத்துரைக்கின்றனர் என்பதையறியலாம். அத் துடன் கதைக் கருவை மட்டும் எடுத்துக் கொண்டு சமுதாயத்தில் நடக் கின்ற செயல்களை வெளிப்படுத்த சிற்சில இடங்களில் புதியதாகக் கதைகளைச் சேர்த்து மக்களிடம் பரப்புவதும் கதை மாறுபாடு அடைவ தற்குக் காரணமாகும்.

## வட்டார வழக்கு

கதைப் பகுதிகளை மாற்றும்போது ஆசிரியர் எந்தக் கருத்தையும் நேரடியாகக் கூறாது இறைவன் பெயரால் கூற நினைப்பது உண்டு. இந்தக் 'குசலவர் சுவாமி கதை'யிலும், 'மூலத்தி'லும், 'குசலவர் கதை'

யிலும் இல்லாத ஒரு வட்டாரச் செய்தியை இணைத்துள்ளார். அதாவது, அந்தச் சமுதாயத்தில் வரி கொடுக்காது ஏய்த்துக் கொண்டிருந்த மக்களுக்குப் புத்தி புகட்ட நினைத்த ஆசிரியர் இராமனைக் கருவியாக்கிப் புத்தி புகட்டுகின்றார். இராமன் விவசாயிகள் ஒவ்வொருவருக்கும் பூசணி விதை கொடுக்க, அதைப் பயிரிட்டவுடன் ஒவ்வொருவரும் ஒரு காயைத் தரவேண்டும் என்று கூறுகின்றார். அவர்கள் சென்றதும், அவர்களுடைய காய்கள் பிஞ்சியிலே அழுகிவிடுமாறு செய்கிறார் இராமர். அனுமன் விதைத்த காய்க்கு ஈடாகத் தங்கத்தைக் கேட்கிறார். எடையில் மக்கள் எல்லாப் பொருட்களையும் இழக்கின்றனர். இப்படிச் சமுதாயத்தில் தவறு செய்தவர்களைத் திருத்தும் நோக்கத்துடன் எதிலும் இல்லாத இந்தக் கதையை- இடைச்செருகலாக்கி நன்னெறியைப் புகட்ட முற்பட்டுள்ளார்.

இவ்வாறெல்லாம் இந்தக் குசலவர்களின் கதை இடத்திற்கேற்ப, வட்டாரத்திற்கேற்ப பல மாறுபாடுகளைக் கொண்டிருப்பதுடன், ஒன்றுடன் ஒன்றை ஒப்பிட்டு நோக்கும்போதே எத்தகைய அளவிற்குச் சமுதாயத்தில் இந்தக் கதை மக்களிடம் சென்று சேர்ந்திருக்கின்றது என்பதையும் அறியமுடிகின்றது.

## கதைப்பாடல்

நாட்டுப்புற மக்களிடத்தில் வழங்கி வருகின்ற கதைப்பாடல்கள் எப்படித் தோன்றியிருக்கக் கூடும் எனில் தனிப்பட்ட ஒருவரால் தோன்றாது, பலரின் வழி தோன்றியிருக்க வேண்டும். ஏனென்றால் பல தலைமுறையினர் தங்களுக்குத் தெரிந்ததை வாய்மொழியாகக் கூறக் கேட்டு அதன்வழி அமைந்தவையே கதைப் பாடலாகும்.

### பெயர் விளக்கம்

பாடலில் கதைப்போக்கை அமைத்துப் பாடுதல் இதன் மரபாகும்.

> ''கதைப்பாடல் என்ற பெயர் சுவடிகளில் இல்லை. கதைப் பாடலாக அமைந்த நாட்டுப்புற இலக்கியங்களுக்குப் பெரும்பான்மையாக அம்மானை என்ற பெயரே காணப்படுகின்றது''[11]

இதை நோக்கும்போது கதைப்பாடல் என்ற பெயர் அதன் தன்மை நோக்கி எழுந்திருக்கக் கூடும் என்று எண்ணுவதற்கு உரிமை உண்டு.

கதைப் பாடல் நீண்ட நடையமைப்பை உடையது. எளிதில் பொருள் புரிந்துகொள்ளுமாறு அமைந்திருக்கும். பல உட்கதைகள் கொண்டதாகவும் இருக்கலாம். அல்லது ஒரே ஒரு கதையை மட்டும் தழுவியதாகவும் கதைப்பாடல் அமையும்.

## வகைப்பாடு

கதைப்பாடலை வகைப்படுத்துவதில் அறிஞர்கள் பலரும் பலவாறு வகைப்படுத்துகின்றனர்.

நா. வானமாமலை அவர்கள் கதைப்பாடலை நான்கு வகையாகப் பிரிக்கின்றார். அதாவது,

1. இதிகாசத் துணுக்குகள்
2. சமூகக் கதைப்பாடல்கள்
3. வரலாற்றுக் கதைப்பாடல்கள்
4. கிராம தேவதைகளின் கதைப்பாடல்கள்[12]

என்றும், சோமலே அவர்கள்,

1. சமூகக் கதைப்பாடல்கள்
2. காவிய கதைப்பாடல்
3. வரலாற்றுக் கதைப்பாடல்[13]

என்று மூன்று வகையாகவும், செ. அன்னகாமு அவர்கள்,

1. சரித்திர சம்பந்தமானவை
2. புராண சம்பந்தமானவை
3. வீரச்செயல் சம்பந்தமானவை
4. காதற் கதைகள் சம்பந்தமானவை[14]

என்று நான்கு வகையாகவும், டாக்டர் பூ. சுப்பிரமணியம் அவர்கள்,

1. வீரகாவியக் கதைப்பாடல்கள்
2. வரலாற்றுக் கதைப்பாடல்கள்
3. புராணக் கதைப்பாடல்கள்
4.. சமுதாயக் கதைப்பாடல்கள்
5. பிறவகைக் கதைப்பாடல்கள்[15]

என்று ஐந்து வகையாகவும், சு. சண்முகசுந்தரம் அவர்கள்,

1. புராணத் தொடர்பானவை
2. வரலாற்றுத் தொடர்பானவை
3. சமூகத் தொடர்பானவை[16]

என்று மூன்றாகப் பகுத்தும், பலர் வகைப்படுத்தியுள்ளனர். கதைப் பாடல்களின் வகைப்பாட்டைப் பொறுத்தவரையில் ஒரு ஒட்டுமொத்த மான வகைப்பாடு தரப்படவில்லை என்பதை மட்டும் அறிய முடிகிறது.

'குசலவர் சுவாமி கதை'ப் பாடலைப் 'புராணத் தொடர்பான'வை களில் அடக்குவர். இந்தக் கதைப் பாடலின் அமைப்பிற்கேற்பக் குசலவர் கதையின் அமைப்பை எடுத்தியம்புவதே இப்பகுதியாகும்.

## கதைப்பாடலின் அமைப்பு

பொதுவாக கதைப் பாடல்களில் தொடக்கம், கதை சொல்லும் முறை, முடிவு இடம் பெற்றிருக்கும். கதையைக் கூறும் முறைகளில் சில உத்திகளைப் பின்பற்றிக் கதைப்பாடலைப் பாடுகின்றனர். அந்த உத்தி களாவன காப்பு, இறைவணக்கம், அவையடக்கம், நுதலிப்புகுதல், கதைத் தொடக்கம், முடிவு என்பன.

## கதைப்பாடலின் அமைப்பு

கதைப்பாடலைத் தொடங்குவதற்கு முன்பு 'காப்பு' பாடுதல் மரபு. இக்காப்பு பாடுவோருக்கும், கேட்போருக்கும் பயன் விளைவிக்கும் என்று கருதுகின்றனர்.

## இறைவணக்கம்

குசலவர் சுவாமி கதையிலும் ஆசிரியர் இறை வணக்கத்துடனே கதையைத் துவங்குகின்றார்.

> ''அரகரா சிவசிவா சிவனே சரணம்
> அரனுமை பார்வதி சிவசக்தி சரணம்
> சிவசி வாசிவா சிவனே சரணம்'' (1)

என்று 'சிவனை'யும்,

> ''இதன்வடி வாகிகண பதிக்குஏத்த பண்டம்
> அவலுடனே பொரியும் அழகான தேங்காயும்
> தேங்காய்ப் பலகணியும் அழகுசிறு கதலிக் குலையும்'' (3)

என்று விநாயகரையும், கதிரவனையும் வணங்கிப் பாடல்களைப் பாடு கின்றார். இதனால் பலரும் குழுமியிருந்து கேட்கும் இடத்தில் எல்லா தெய்வங்களையும் வணங்கிப் போற்றும்போது ஆசிரியரின் சமய வுணர்ச்சி வெளிப்படுவதைக் காணலாம்.

### அவையடக்கம்

ஆசிரியர் இறைவணக்கத்துடன் தன் பெற்றோருக்கு, குருவிற்கு, மற்ற தெய்வங்களுக்கு வணக்கம் கூறி முடித்த பின்பு அவையடக்கம் உரைப்பதை மரபாகக் கொண்டுள்ளார்.

''பாடறியேன் படிப்பறியேன் பாட்டினுட வகையறியேன்
ஏடறியேன் எழுத்தறியேன் ஏட்டினுட வகையறியேன் (6)

என்று குசலவர் சுவாமி கதையிலும் ஆசிரியர் அவையடக்கமாகப் பாடலைப் பாடுகின்றார்.

### நுதலிப் புகுதல்

நுதலிப் புகுதலென்பது இன்ன கதையைப் பாட்டில் கூறப் போகின்றேன் என எடுத்தியம்புதல். இக்கதையில் ஆசிரியர் இந்தப் பகுதியை அமைக்கவில்லை.

வில்லுப்பாட்டுக்குத் துணை நிற்க வேண்டி, பின் கதைப் பாடலைத் தொடங்குகின்றார்.

### தொடக்கம்

''நாடா னதொரு நாடதிலே நல்ல அயோத்திமா நகர்தனிலே
தேசமானதோர் தேசத்திலே — தெய்வ அயோத்திமா நகர்தனிலே''
(16)

என்று 'நாட்டு' வளத்துடன் துவங்கியுள்ளார் ஆசிரியர். சிலர் 'தாம் தனதந்த தானாதன' என்றும், கயிலைக் காட்சியுடனும் தொடங்குவர்.

### நிகழ்த்துமுறை

ஆசிரியர் வில்லுப்பாட்டின் மூலம் இக்கதையினை நிகழ்த்துவதால் இடையில் உரைகள் இடம்பெறச் செய்வார். செவி நுகர்வோர் விரும்பும் வண்ணம் கதையைக் கூறிச் செல்வர். திரும்பத் திரும்பத் தொடர்களைக் கதைபோக்கிற்காக நினைவுபடுத்திக் கொள்வர்.

### முடிவு

கதையைப் பாடி முடிக்கும்போது கதை கேட்டதின் பலனைக் கூறி, வாழ்த்துப் பாடி முடிப்பர். இக்கதையிலும்,

''பாடும்போது கேட்ட்வர்கள் பவுசையுடன் நன்றாய்த் தழைத்து
வாழ்க

ஆல்போல் தான் தழைத்து அருகுபோல் வேரூன்றி
.... ...... ..... ..... ..... ...... ...... ......
குசலவர்கள் கதையைக் கேட்டவர்கள்
கோத்திர மெல்லாம் தழைத்துவாழ்க'' (250)

என்று கதை கேட்டதின் பயனைக் கூறுகின்றார். அது மட்டு மின்றி,

''குசலவர் அசலவர் இருபேரும் குவலயத்தில் நன்றாய் பெருகி வாழ்க
திருவேள்வி யில்தான் பிறந்த தெய்வக் குதிரைதான் தழைத்து வாழ்க'' (248)

என்றும் வாழ்த்தியும் பாடியுள்ளார்.

கதைப்பாடல் பலர் வழியாக வருவதால் தனது தனித்தன்மையை இழந்துவிடுகிறது. இதன்வழி பல இடைச்செருகல்கள் புகுத்தப் பெறுகின்றன. இக்குசலவர் கதையிலும் விவசாயிகள் அரசனுக்கு வரி தராது ஏமாற்றும் மக்களுக்குப் புத்தி புகட்டி திருத்த எண்ணிய ஆசிரியரின் பூசணி விதை நிகழ்ச்சியை இடைச்செருகலாகச் சேர்த்து அதன் மூலம் செய்தியைத் தெரிவிக்கின்றார். இதனை,

''எங்கள் பெருமாளே கோபாலா ஏழை பங்காளா சொல்லக்கேளும்
ஏழை பரதாழ்வான் என்றுசொல்லி ஏய்த்துப் போட்டாரந்தச் சமுசாரிகள்''

''இவ்வாறு ஒரு இடைச்செருகலைப் புகுத்தி வரி கொடாது ஏய்க்கும் மக்களுக்குப் புத்தி புகட்டுமாற்றால் இராமனது மீயாற்றலை எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர்.''[17]

என விளக்கியுரைக்கும் கருத்து மேலும் சான்றாக அமையும்.

இவ்வாறு இந்தக் கதைப்பாடலை விழாக் காலங்களில் மட்டுமன்றி, பொழுதுபோக்கிற்காக நடத்தப்படுகிறதெனினும் இதன்மூலம் நல்ல கருத்துகளை எடுத்துரைக்கும் தன்மையோடு வில்லிசைக் கலையின் மூலம் பாமர மக்களிடம் எடுத்துரைக்கின்றார்.

## வில்லுப்பாட்டு

### வில்லுப்பாட்டு

நாட்டுப்புறக் கதைகளில் 'வில்லுப்பாட்டுக்' கலை இன்றும் சமுதாயத்தில் நிலவி வருகிறது. இந்த வில்லுப்பாட்டுக் கலை மக்களுடைய

பொழுதுபோக்கிற்காக நடத்தபடுகிறதெனினும் இதன்மூலம் நல்ல கருத்துகளைப் பாமர மக்களுக்கு எடுத்துக் கூறுவதாகவும் அமைகின்றது.

## தோற்றம்

''உள்ளத்தின் உணர்ச்சிகளை வெளியிட மனிதனுக்குக் கிடைத்த கருவிகளிலே வில்லடியும் ஒன்று'' என்கிறார் கு. அருணாசலக் கவுண்டர்.[18]

வில்லுப்பாட்டு இசைக்கலையானது பழந்தமிழரின் இசைக் கலையாகும். வழிவழியாக முன்னோர்கள் பின்பற்றி வருகின்ற இந்தக் கலையினை நாட்டுப்புற மக்கள் இன்றும் உயிரூட்டி வருகின்றனர்.

## வழங்கும் பகுதிகள்

தமிழ்க் கலைக்களஞ்சியம் வில்லுப்பாட்டுக் கலை எங்கெங்கு நிகழ்கிறது என்பதைக் குறித்துப் பின்வருமாறு கூறுகின்றது.

''தமிழகத்தின் தென்பகுதியிலே திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களிலும், இராமநாதபுரம் மாவட்டப் பகுதியிலும், சிறறூர் தெய்வங்களுக்கு வழிபாடு நிகழும் 'கொடை' விழாக்காலங்களில், தெய்வ வரலாறுகளையும் தெய்வநிலைபெற்ற வீரர் வரலாறுகளையும்[19] வில்லுப்பாட்டின் மூலம் எடுத்துரைக்கின்றனர்.

## இசைக்குழு

வில்லுப்பாட்டுக் கலையைத் தனியொருவரால் நடத்த இயலாது. குழுவாக ஐந்து அல்லது ஆறுபேர் பங்குகொண்டு சால்ரா, கஞ்சிரா, உடுக்கு, போன்ற பக்க வாத்தியங்களுடன் பாடல்களைப் பாடுவர். வில்லிசையின் உறுப்புகள் பலவாகினும், அவற்றுள் குடமும், கதிரும், உடுக்கும் முதன்மை பெற்றவை.

## அமைப்பு

கதைப்பாடலை வில்லுப்பாட்டில் அமைத்தல் உண்டு. இந்தப் பாடலைப் பாடும்போது இடையிடையே வசனத்தை அல்லது உரைகளை அமைத்திருப்பர். ஏனெனில் நீண்ட நேரம் பாடலையே பாடிக் கொண்டு போனால் செவிநுகர்வோருக்கும், பாடுவோருக்கும் சலிப்பு ஏற்படுமென்று உரைகளை அமைத்துள்ளனர். இதனை, தி. சி. கோமதி நாயகம் அவர்கள், 'உரையிடையிட்ட பாட்டு'[20] என்றே தலைப்பு தந்துள்ளார்.

இன்று கிடைத்துள்ள சில சுவடிகளின் தன்மை கொண்டு நோக்கின் இடையில் உரையின்றிப் பாடல் வடிவம் மட்டும் காணப்படுகின்றது. பாடல்களை நினைவில் வைத்துக்கொள்வது கடினமாக இருக்கக் கூடு மென்று கருதி அப்பாடல்களை மட்டுமே நிலைபேறு பெறச் செய்திருக் கின்றனர்.

வில்லுப்பாட்டு நிகழ்ச்சியைத் தொடங்கும்போது சில பொதுவான நெறிகளைக் கையாண்டு அந்த அமைப்பிலேயே பாடுகின்றார். அதாவது,

1. காப்பு விருத்தம்
2. வருபொருள் உரைத்தல்
3. குருவடி பாடுதல்
4. அவையடக்கம்
5. நாட்டு வளம்
6. கதைத்தலைவன்
7. வாழி பாடுதல்

என்ற நிலையில் அமைந்திருக்கும்.

## கதைகளின் வகைப்பாடு

வில்லுப்பாட்டுக் கலைக்குரிய பாடல்களில் பலவிதமான கதைகளை வில்லிசைக் கலைஞன், கையாளுவதுண்டு. எனினும்,

1. புராணத் தொடர்பான கதைகள்
2. இதிகாசம் தழுவிய கதைகள்
3. கொடுந்தெய்வக் கதைகள்
4. சமுதாயந் தழுவிய கதைகள்
5. வரலாற்று வீரர் கதைகள்

என்று பெரும்பாலும் அமைதல் உண்டு.

## குசலவர் சுவாமி கதை

''வில்லோட சீதை பிறந்தவளே
வில்லருகே வந்துகுடி யிருப்பாய்'' (6)

என்றும்,

''ஈஸ்வரி தன்புதல்வர் இயல்பாய்க் கதைக்குத்தகு
தாளத்துடன் படிக்க-எனதுட-வில்லிசை தருவாய்'' (4)

என்று தொடங்கும்பொழுதே ஆசிரியர் கலைமகளைத் துதிக்கின்றார். எனவே, இக்கதை வில்லுப்பாட்டில் பாடப்பட்டிருக்க வேண்டும் என்பதை உணரமுடிகிறது. மற்றுமொரு சான்று,

''பாமர மக்களிடையே ஊர்த்தெய்வ வரலாறுகளை இசையோடு எடுத்துச் சொல்லும் வில்லுப்பாட்டு இதிகாசக் கதைப் பகுதிகளையும் தனக்குரிய முறையில் கதைகளாக்கிக் கொண்டது எனலாம். அவ்வாறாக அமைந்தவைகளில் 'சீதாக் கல்யாணம்', 'ஸ்ரீராமர் அசுவமேத யாகம்' ஆகிய இராமாயணக் கதைப் பகுதிகளும்....''[2]

என்று தி.சி.கோமதிநாயகம் 'தமிழ் வில்லுப்பாட்டுகள்' என்ற நூலில் கூறுவதன் மூலமும் அறிய முடிகிறது.

மேலும், 'குசலவர் சுவாமி கதை' என்பது 'ஸ்ரீராமர் அஸ்வமேத யாகம்' என்ற பெயராலும் நாட்டுப்புற மக்களிடையே நிலவி வந்திருக்கிறது. இதனைக் கோமதி நாயகம் அவர்களே பின்வருமாறு எடுத்துரைக்கின்றார். அதாவது,

''துணி வெளுக்கும் 'ஏகாலி' ஒருவன் சொல்லிய பழிச்சொற்களைக் கேட்டு உள்ளம் உடைந்த இராமன், சீதை கருவுற்றிருக்கும் நிலையினையும் கருதிப் பாராதவனாகிக் காட்டில் விட்டுவரச் செய்தலும், தனித்துத் துயருற்ற அவளுக்குத் தவமுனிவன் தஞ்சம் அளித்தலும், சீதையின் புதல்வராக இருவர் வளர்ந்து வரும் நாளில், இராமன் 'அசுவமேத யாகம்' செய்து அவனியெங்கும் சுற்றி வருமாறு அனுப்பி வைத்த யாகப் புரவியினைச் சீதையின் குமாரர்கள் கைப்பற்றிக் கொள்ளுதலும், அதன் விளைவாக ஏற்படும் போர்களில் சிறுவர்கள் இராமரையும் எதிர்த்து நிற்கும் நிலை ஏற்படுதலும், சீதை பற்றியும் சிறுவர்கள் பற்றியும் இராமன் தெரிந்துகொண்டு துயருறுதலும், மீண்டும் ஓர் 'அக்கினிப் பிரவேசத்தின்' பின் சீதை இராமனைச் சேர்தலும் ஆகிய உத்தரகாண்டத்துக் கதை நிகழ்ச்சிகளைக் கொண்டு அமைந்து காணப்படுவதே 'ஸ்ரீராமர் அஸ்வமேத யாகம்'[22] எனப்படும் வில்லுப்பாட்டு''

எனக் கதையைக் கூறி விளக்கியுள்ளார்.

## நம்பிக்கை

நாட்டுப்புற மக்களின் கலையில் மலர்ந்த இந்தக் 'குசலவர் சுவாமி கதை'யில், அவர்களின் நம்பிக்கை மலர்களும் இடம் பெற்றிருக்கின்றன.

### தோற்றம்

நம்பிக்கை என்பது மனித மனத்துடன் தொடர்புடைய ஒன்று. மனித மனம் மக்களுக்குக் கட்டுப்படுவதைவிட, இறைவன் பெயரைச் சொன்னால் எளிதில் கட்டுப்பட்டு நிற்கும். எனவே, அச்சவுணர்வைக் காரணமாக்கிச் சமயத்தின் மூலம் இறைவனைப் படைத்து நம்பிக்கைகளை பழங்காலத்தில் உருக்கொளச் செய்தனர்.

மேலும், ஒருவன் எப்பொழுது தன்னைப் பாதுகாத்துக்கொள்ள நினைத்தானோ, அப்பொழுதே இயற்கையினிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும், மேட்டுக்குடி மக்களிடமிருந்தும் பாதுகாத்துக் கொள்ளுகின்றான். அப்படிப் பாதுகாத்துக் கொள்ள நம்பிக்கைகள் தோன்றின என்று கருதுவதற்கு இடமுண்டு.

> ''அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும், செயற்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புகளோடு இயைத்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன''[23]

என்று டாக்டர் க. காந்தி கூறுகின்ற கருத்தின் மூலமும் நம்பிக்கையின் தோற்றம் குறித்து அறியமுடிகிறது.

### விளக்கம்

நம்பிக்கைகள் நாட்டுப்புற மக்களிடையே அதிகமாக இடம்பெறக் காணலாம். ஏனெனில் எந்த ஒன்றையும் அவர்கள் எளிதில் நம்பிவிடுவதுதான் காரணம். தனிமனித அச்சமும், சமுதாய அச்சமும், தன்னல உணர்வும் கொண்டிருப்பதால் நம்பிக்கைகளை அதிகம் பின்பற்றுகின்றனர் பாமர மக்கள்.

குழந்தைப்பேறு கிட்டவேண்டும் என்பதற்காகப் பெண்கள் அரசமரத்தைச் சுற்றுதல், மண்சோறு உண்ணல், பாம்புப் புற்றுக்குப் பாலிடல் போன்ற செயல்களைச் செய்வதின் மூலம் குழந்தைப் பேறு கிட்டும் என்று நம்பிக்கை கொள்ளுகின்றனர்.

## வகைகள்

நம்பிக்கை என்பதைப் பொதுவாகத் தனிமனித நம்பிக்கை (Individual Belief) என்றும், சமுதாய நம்பிக்கை (Social Belief) என்றும் வகைப்படுத்துவர். வேறுசிலர்,

1. மூடநம்பிக்கை
2. தெய்வம் சார்ந்த நம்பிக்கை
3. தொழில் சார்ந்த நம்பிக்கை
4. அறம் சார்ந்த நம்பிக்கை
5. உறவு சார்ந்த நம்பிக்கை

என வகைப்படுத்துவர்.

## மூடநம்பிக்கை

மூடநம்பிக்கை என்பது காரண காரியத் தொடர்பின்றியே பெரும் பாலும் நிலவிவருவதும், இந்நம்பிக்கைகளை ஏதோ ஒரு காலத்தில் யாரோ ஒருவர் பின்பற்றியிருப்பின், அதை அப்படியே வழிவழியாகப் பின்பற்றி வருவதும் ஆகும் இதைத் தான்,

> ''சிந்தனைத் திறன்மிக்க சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாக வும், சிந்தனைத் திறன் குறைந்த சமுதாயத்தில் மூடநம்பிக்கைகள் மிகுதியாகவும் காணப்படும். இதனை நமது நகர், கிராமப்புற மக்களின் வாழ்வியல் கொண்டு உணரலாம்''[24]

என்கிறார் டாக்டர் க. காந்தி அவர்கள்.

எதனையும் ஆராயாமல் செய்கின்ற காரணத்தால் மக்கள் மனதில் மூடநம்பிக்கைகள் ஆழமாக வேரூன்றிவிட்டன.

## நிமித்தம்

'நிமித்தம்' என்பதும் நம்பிக்கையின் பாற்ப்பட்ட ஒன்றாகும். இந்த ''நிமித்தங்கள் அச்சத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கலாமென் பர்''[25] என்று இ. சுந்தரமூர்த்தி அவர்கள் கூறுகின்றார்.

'நிமித்தம்' என்ற சொல் தொல்காப்பிய நூலிலேயே இடம்பெற்றி ருக்கக் காணலாம். அதாவது,

> ''ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும்
> செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்''[26]

என்ற நூற்பா நிமித்தம் பற்றிய செய்தியினைக் கூறுகிறது.

''நெறியில் நல்கின புள்ளும் நிமித்தமும்''[27]

என்று சீவகசிந்தாமணியிலும் இடம்பெற்றிருக்கின்றது.

**விளக்கம்**

நிமித்தம் என்பது மக்கள் வாழ்க்கையில் மட்டும் இடம்பெற்றிராமல், இலக்கியங்களிலும் இடம்பெற்றிருக்கக் காணுகின்றோம். இதன்வழி 'நிமித்தம்' பார்த்தல் என்பது இன்றியமையாத ஒரு செயலாக இருத்தல் அறியமுடிகிறது.

> ''சூழ்நிலையே மனிதனை உருவாக்குகின்றது என்பதற்கேற்ப சூழ் நிலை வயப்பட்ட மனிதனின் நிமித்தங்கள், அவனைச் சுற்றியுள்ள பொருட்களின் அடிப்படையிலேயே உருவாகின்றன''[28]

என்ற டாக்டர் காந்தி அவர்களின் கருத்துக்கேற்பவே குசலவர் சுவாமி கதையிலும் நிமித்தப் பொருட்கள் அமைந்துள்ளன.

**வகை**

நிமித்தத்தில் நன்னிநிமித்தம், தீநிமித்தம் என்ற இரண்டு வகைகள் உண்டு. இக்கதையில் சீதையை இலக்குவன் வனத்திற்கு அழைத்துச் செல்லுகின்ற நேரத்தில் சீதை தீய சகுனங்களைக் காணுகின்றாள். அதாவது,

> ''காக மானது வலம்போக காட்டு நரியது குறுக்கிடுமாம்
> கெருடன் வந்து வட்டமிட கோபாலர் தேவியும் கண்ணில்கண்டு
> அப்போது வீர லச்சுமியும்.... .....
> ..... ..... ..... ..... ..... ....., ..... ....
> கண்ட சகுனங்கள் பொல்லாதது இன்று அயோத்தியில் இருந்து
> போவோம்'' (82)

என்று தான் கண்ட சகுனங்கள் தீயவை ஆதலால் இன்று இருந்து விட்டு நாளை புறப்படுவோம் என்கிறாள்.

காகம் வலப்புறம் போனாலும், காட்டு நரி அல்லது பூனை குறுக்கே போனாலும் கெருடன் வட்டமிட்டாலும், துவங்கப்போகும் செயல் நன்மையாக முடியாமல் தீயதாக முடியும் என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். இதன் விளைவு பாடுகின்ற இலக்கியத்திலும் பிரதி பலிக்கின்றது.

> ''பெரும்புாலும் இந்தக் கனவுகளும் நிமித்தங்களும் தீமை நிகழப் போவதைச் சுட்டுவதாகவே அமைகின்றன. அத்தீக்குறிகளை ஒரு பொருட்டாகக் கருதாது மீறிச் செல்வதும் அதனால் அழிவோ அவமானமோ வருவதாக அமைத்துப் பாடுவதும் இப்பாடல்களில் தெரிகிறது''[29]

என்று தே. லூர்து அவர்கள் கூறுவதன் மூலமும் அறிய முடிகின்றது.

தீய நிமித்தங்கள் பெரும்பாலும் பறவைகள் மூலமும், விலங்குகள், கனவுகள் மூலமாகவே வெளிப்படுவதாகும். இந்த நிமித்தங்களின் மீது நம்பிக்கை கொண்டு அதன்வழிச் செயல்களைச் செய்வதென்பது காரண காரியத் தொடர்பின்றி, மூட நம்பிக்கையாய்ப் பின்பற்றப்படு கிறது.

ஏந்த ஒரு நம்பிக்கையும் செயலுடன் தொடர்புபடுத்தப்படுமே யானால் அது சடங்காகிவிடுகிறது.

### சடங்கு

மனிதன் ஒன்றின்மீது உள்ளத்தில் மட்டும் நம்பிக்கை கொண்டிராது அதனை வாழ்வின் செயல்முறைகளுடன் பின்பற்றினால் சடங்காக மாறிவிடுகிறது. சடங்கு ஏன்பதற்குத் தமிழ்ப் பேரகராதி தரும் விளக்கம் வருமாறு :

> ''சாத்திர விதி பற்றியும், வழக்கம் பற்றியும்
> அனுஷ்டிக்குங் கிரியை''[30]

சமுதாயத்தில் சடங்குகள் பொருளின்றியோ பொருள் பெற்றோ மக்களால் பின்பற்றப்பட்டு விட்டன. இந்தச் சடங்குகள் ஒவ்வொரு காலத்திலும் மனிதனுடைய வாழ்க்கையில் நிகழ்கின்றது. இதைத்தான்,

> ''மனிதன் கருவுயிர்ப்பது முதல் இறப்பது வரை பல கட்டங் களைக் கடக்கின்றான். ஒவ்வொரு கட்டத்தில் புகும்போதும் அந்த நிகழ்ச்சியைக் குறிப்பதற்காகவும், அதன் சிறப்பையும் பண்பையும் பலனையும் நினைவூட்டுவதற்காகவும் சில சிறப்புச் செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு மக்கள் இனத்தாரும் விதிகள் உண்டாக்கி யிருக்கிறார்கள்''[31]

என்று கூறுகின்றது தமிழ்க் கலைக் களஞ்சியம்.

இராமரின் தந்தை தசரதன் இறந்ததற்காகத் தான் திதி செய்ய வேண்டுமென்று கூறி, விவசாயிகளிடம் ஆளுக்கொரு பூசணிக்காயைத் தரச்சொல்லிக் கேட்கிறார் இராமர். இறந்ததற்குச் செய்யும் சடங்கு என்பது எல்லா மதத்தவரிடமும் காணப்படுகின்ற ஒன்று.

> ''இந்துக்களுக்குப் பிறப்பதற்கு முன்னும் பிறந்து வாழும் காலத்தி லும் இறந்த பிறகும் சடங்குகள் விதிக்கப்பட்டுள்ளன''[32]

என்று வித்துவான் கே. ஆறுமுக நாவலர் சடங்கின் விதியைப் பற்றிக் கூறுகின்றார்.

இவ்வாறு நம்பிக்கைகள் பலவும் உண்மைக்கு அப்பாற்பட்டு, நாட்டுப் புற மக்களின் சமுதாயத்தை, உள்ளத்தை வெளிக்காட்டும் வகையில் நாட்டுப்புற இலக்கியங்கள் அமைந்து நிற்றல்தான் இதன் சிறப்பாகும்.

## மலடி

'மலடி' என்ற சொல் இழிந்த தன்மையைக் குறிக்க நாட்டுப்புற மக்க ளிடம் வழக்கத்தில் பயின்று வருகின்ற ஒரு சொல்லாகும். இச்சொல் 'மலடு' என்ற சொல்லோடு 'இ'கர விகுதி பெற்று 'மலடி' எனவும், 'அன்' என்ற விகுதி பெற்று 'மலடன்' எனவும் வழங்கி வருவதாகும். ஆண்பாலைக் குறித்த சொல்லிருப்பினும் 'மலடி' என்ற பெண்பாற் சொல்லே பெருவழக்காய் உள்ளது.

'மலடி' என்பதற்குப் பொருள் குழந்தைப்பேறு இல்லாதவள். இச் சொல்லுக்குத் தமிழ் அகராதி,

> '''மகப்பெறாதவள்', 'குழந்தையையிர்க்க 'மலடிக்'குவமை கொண்டாள்' (கம்பராமா. உருக்காட். 65), 'மலடு கறந்தெய்வத் தவறே' (தேவா. 697,6)''[22]

என்று இலக்கியச் சான்றுகளுடன் விளக்கம் தருகிறது.

மழலைச் செல்வம் உயர்ந்த செல்வமாகக் கருதப்பட்டதால், அச் செல்வப்பேறு கிட்டாதவர்களை நாட்டுப்புறச் சமுதாயத்திலுள்ளவர்கள் 'மலடி' என்று ஏசினர். இந்தச் செல்வத்தைத் திருவள்ளுவரும்,

> ''குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
> மழலைச்சொல் கேளா தவர்''[34]

என்று அமைத்துள்ளார். மழலைச்சொல்லைக் காட்டிலும் இனியது தாய்க்கு வேறு ஒன்றுமில்லை என்பதே இதன் உட்பொருள். இதை மட்டும் கூறாது 'மக்கட்பேறு' என்ற ஒரு அதிகாரத்தை வகுத்துக் கூறி யுள்ளார்.

இத்தகைய கிடைத்தற்கரிய மழலைப்பேறு நாட்டுப்புற பெண் மக்களை மட்டும் ஆட்டிப் படைக்காமல் இறைப் பெண்களையும் சமுதாயத்தில் ஆட்டிப் படைத்துள்ளது. ஏனெனில்,

''மலடி மலடியென்று இந்த வையகத்தோர் யேசாமல்
மலடியென்ற சொல் மாத்த மாணிக்கமாய் வந்தவனோ
இருளி இருளியென்று என் இனத்தார் யேசாமல்
இருளியென்ற சொல் மாத்த யீடேற்ற வந்தவனோ'' (109)

என்று சீதை தன் குழந்தையைப் பார்த்துப் பாடுகின்றாள். சமுதாயத்தில் தன் இனத்தவர்கள் ஏசாமல் இருக்கவும், தன்னைப் பழிச்சொல்லுக்கு ஆளாக்காமல் இருக்கவும் பிறந்திருக்கின்ற இந்தக் குழந்தையைப் பார்த்து மகிழ்ச்சியுடன் உள்ள உணர்ச்சிகளைப் பாட்டாக வடிக்கின்றார்.

இந்தப் பாடலில் மலடி என்ற சொல்லும், இருளி என்ற சொல்லும் கையாளப்பட்டுள்ளன. இந்த இரண்டு சொல்லும் ஒரு பொருளைக் குறிப்பதாகும். மலடி என்பதற்குரிய வேறு பெயர்களை,

''1. மரடி, 2. வரடி, 3. இருசி, 4. இருடி, 5. இருளி என்பன. இவைகள் யாவும் மலடி என்ற சொல்லிலிருந்தே திரிந்து கையாளப் பெற்றிருக்க வேண்டும்.

மலடி திரிந்து மரடியாகவும்
மரடி திரிந்து வரடியாகவும்
வரடி திரிந்து இருடியாகவும்
இருடி திரிந்து இருளியாகவும்
இருளி திரிந்து இருசியாகவும்
வழங்கியிருக்கலாம்''[35]

என்று நா. இளங்கோ அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

இதை நோக்கும் வழக்காற்றில், பல சொற்கள் இருப்பினும், இக் குசலவர் சுவாமி கதை வழங்கப்பட்ட பகுதிகளில் 'இருளி'யென்ற சொல்லும், 'மலடி' என்ற சொல்லும் இருந்திருத்தல் அறிய முடிகின்றது. அதுமட்டுமின்றி மலட்டுத் தன்மையுள்ள பெண்ணைத் தூற்றுவதும், ஏசுவதும் சமூகத்தினரால் புறக்கணிக்கப்படுதலும் ஆகிய செயல்கள் சமுதாயத்தில் இருந்திருக்கின்றன என்பதும் அறியமுடிகிறது.

பாமர மக்கள் முதல் உயர்குடிப் பெண்கள் இறைப் பெண்கள் வரையிலும் மலடியைத் தூற்றுதலாகிய செயல் எந்தவிதப் பாரபட்சமின்றியே நடப்பதாகும். இதனால்தான்,

"என்ன கொற செஞ்சேனோ
புள்ள கொற நேந்திடுக்கே"[36]

என்று இறைவனுக்கு ஏதோ குறை வைத்ததாக நினைத்துப் பாடுகின்றாள். குழந்தைப் பேறு கிடைத்தால் இறைவன் தந்த வரம் என்று நம்பினர்.

"மலடி என்ற பட்டத்திலும், மலட்டுத்தன்மை உள்ள ஒரு பெண் சமூகத்தினரால் நடத்தப்படும் விதத்திற்கும் அஞ்சிக் குழந்தைப் பேற்றை விரும்புதல்"[37]

என்று கூறுகின்ற நா. இளங்கோ அவர்களின் கருத்தை நோக்க எந்தப் பெண்களும் இதற்கு விதி விலக்கல்லர் என்பது புலனாகும். இதனால் தான் இறைப் பெண்ணாகிய சீதையும் 'மலடி' என்ற பட்டத்திற்கஞ்சி, தான் பெற்ற குழந்தையைப் பரிவுடன் தாலாட்டுகின்ற செய்தியை இக் கதைப் பாடலாசிரியர் குறிப்பால் உணர்த்துகின்றார்.

## விதி

'விதி' என்ற ஒன்றைத் தனியாக எடுத்து ஆய்வதன் காரணம் 'குசலவர் சுவாமி கதை'யில் பல இடங்களில் இச் சொல் காணப்படுகின்றது. இதனால் இதன் தன்மையை, பொருளை விளக்குவதாக அமைவதே இப்பகுதி.

### விதி — விளக்கம்

'விதி' என்பதற்கு 'அபிதான சிந்தாமணி' தரும் விளக்கம் வருமாறு :

"அறிவு, உண்மை, ஊழ், கட்டளை, காலம், குணம்"[38]

அடுத்து,

"Fate, Destiny, ஊழ். 'ஆயத்தை நீக்கும் விதி துணையா' (திருக்கோ.) 'பிரமன், திதியின் சிறாரும் விதியின் மாக்களும்' (பரி. 3,6), 'புண்ணியப் பயன் — முன்னே நோற்ற விதி கொலோ' (திவ். திருவாய். 6,5,8), 'செய்தொழில்' (சூடா.), 'விதியிலேன் மதியொன்றில்லை" (திவ். திருமாலை 17)."[39]

என்று தமிழ்ப் பேரகராதியும் விதியைக் குறித்துப் பொருளையும் இலக்கியச் சான்றுகளையும் தந்துள்ளது.

திருவள்ளுவரும் ‘விதி’ என்பதை ‘ஊழ்’ என்ற சொல்லால் கையாண்டு அதற்கென்று ஒரு அதிகாரத்தையமைத்துக் குறட்பாக்களைக் கூறியுள்ளார்.

''ஊழிற் பெருவலி யாவுள; மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்''[40]

என்பதன்வழி செய்கின்ற செயல்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் ‘ஊழ்’ என்ற ஒன்று மனித வாழ்க்கையில் நிச்சயம் இடம்பெற்றிருக்கும்.

பலரும் ‘விதி’ என்பதற்குப் பொருளையும், விளக்கத்தையும் அளிக்க முற்பட்டனரேயன்றி யாரும் வரையறுத்து எடுத்துக் கூறவில்லை.

## பொருள்

‘விதி’ என்பது மக்களுடைய வாழ்க்கை முறையில் இழையோடுகின்ற ஒரு சொல்லாகும். இந்தச் சொல்லை நடைமுறையில் பயன்படுத்தப்படு வதைக் கொண்டு குறிப்பிட்ட பொருளை உணர்த்துகிறது என்பதை யறிய முடியுமே தவிர ‘விதி’ என்பது இதுதான் என்று கூறல் இயலாது.

சமுதாயத்தில் வாழ்கின்ற ஒரு பெண், தன் குழந்தையை அடித்து வளர்க்கிறாள். அந்தக் குழந்தை நல்ல வழியில் செல்லவில்லை என்ப தற்காக அடித்தும்விட்டுத் தன்னையே நொந்துகொள்ளுதலும் உண்டு. ‘எல்லாம் என் தலைவிதி; இப்படியொரு பிள்ளை’ என்று தலை விதியை நொந்துகொள்வர். இந்த விதி மிகச் சாதாரண பாமர மக்களிட மிருந்து உயர்மட்டத்திலிருப்பவர்கள் வரையிலும் ஆட்டிப்படைப்பதாக நம்புகின்றனர்.

அதுமட்டுமின்றிச் சீதையே விதியை நொந்துகொள்வதாக அமை கிறது இப்பாடல்,

''இனத்தோடே அவரிருக்க இருண்ட வனத்திலே நானிருக்க
இதுவும் யென்தலை விதிவசமோ யீஸ்பர னாருட கட்டளையோ''
(95)

என்றும்,

''வனத்திலே நாங்க ளிருக்கையிலே வந்துதையா மாய மானதுதான்
ஈஸ்பர னாருட கற்பனையோ என்தலை யின்விதி வசமோ''(99)

என, சீதை தன்னுடைய நிலையைக் குறித்து வருந்தும்போது, விதி யினால்தான் இத்தகைய துன்பத்திற்கு ஆளாகியிருக்கிறேன் என்று புலம்புவதாக அமைகிறது.

மேலும், சீதை இராமருடைய நிலையைக் குறித்துத் தன் பாலகர் களிடம்,

''முன்செய்த தீவினையோ முதல்செய்த பொல்லாங்கோ
பின்செய்த தீவினையோ பிழைகள் யிப்படி சேர்ந்ததுதான்
இன்னும் வனத்திலே யிருப்பதற்கோ எழுதிவிட்டானே
பிரமதேவன்
நம்மள் ராசாவைக் கொல்வதற்கோ நான்வளர்த் தேன்பா லர்களே
நானும் பூமியில் இருக்கணுமோ நாடோ லம்யினி ஆனேனே
எந்தன் வாணாளைப் போக்கிடுவேன் என்று சீதையும்
சொன்னபோது'' *(198)*
''முன்னே செய்த பாவமிதோ இன்னமும் சுவாமிக்கு
யிடராச்சே''*(199)*

என்று இப்படியெல்லாம் நேர்வதற்குக் காரணம் தான் செய்த தீவினை கள்தான் என்று புலம்புகிறாள்.

### பிரமன்

குழந்தை பிறக்கும்போதே 'நீ இப்படித்தான் இருப்பாய்' என்று பிரமதேவன் என்ற கடவுள், தலையில் எழுதிவிட்டதாக நம்பிக்கை கொண்டுள்ளனர் மக்கள். இன்றும், பிரமன் எழுதிய எழுத்தை மாற்ற முடியாது என்றும் நம்புகின்றனர்.

தமிழ்ப் பேரகராதியிலும் 'பிரமன்' என்ற சொல்லைக் குறிப்பிட் டுள்ளது போல பிரமதேவக் கடவுள் அவரவர் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கேற்பத் தலையெழுத்தை யமைக்கிறார் என்றும் கருது கின்றனர்.

மக்கள். தாங்கள் செய்கின்ற நல்ல செயல்களுக்கேற்ப நற்பயன் கிட்டும் என்பதில் அதிக நம்பிக்கை உடையவர்களாக இருக்கின்றனர். அப்படி இல்லாத போது விதியின்மீது பழியைப் போட்டு, அதனைச் சாடுகின்றனர்.

இவற்றையெல்லாம் நோக்கும்போது மனிதன் அறிவைச் செலுத்தா மல், சிந்தனையைச் செலுத்தாமல், உழைப்பைச் செலுத்தாமல், காரண காரியத்தை ஆராயாமல் எளிதில் ஏதோ ஒன்றின்மீது பழியைப் போடு வதற்காகக் கையாளப்பட்ட ஒன்றே 'விதி' என்னும் சொல்லாகும்.

இந்த 'விதி' என்ற சொல் பாமர மக்களிடம் அதிகமாகக் காணப்பட் டது. ஏனெனில் சிந்திக்கத் தெரியாத இந்தப் பாமர மக்கள் 'விதி' என்ற

ஒன்று இருப்பதாக எண்ணி, சமுதாயத்தில் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டும், மற்றவர்களை ஏமாற்றியும் வாழ்ந்து வந்தனர். இதனால்தான் இவர்களின் இலக்கியங்களிலும் இத்தன்மை மிளிர்கிறது.

## இயற்கை கடந்த நிகழ்வு

### தொடக்கம்

இயற்கையாக நடக்கக்கூடிய செயல்களிலிருந்து, மாறுபட்டு இயற்கைக்கு மாறாக, இயற்கையின் ஆற்றலைக் கடந்த நிலையில் செயல்கள் அமையுமானால் அதனை 'இயற்கையின் கடந்த நிகழ்வு' என்று கூறுவர்.

> ''இயற்கை கடந்த நிகழ்வு; தெய்வீக அருநிகழ்வு நம்பிக்கை, இயல் நிலை கடந்தவர், தேவர், தெய்வம், இயற்கை கடந்த, இயற்கை முறைக்குளடங்காத, இயன்முறைக் காரண காரியத் தொடர்புக்கு அப்பாற்பட்ட, வியக்கத்தக்க, தெய்விக அரு நிகழ்வன, தெய்வீக ஆற்றல் சுட்டிய''[41]

என்று ஆங்கில-தமிழ் அகராதி விளக்கம் தருகின்றது.

இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளாகப் பல இடங்கள் குசலவர் சுவாமி கதையில் காணப்படுகின்றன. அதாவது, சீதை வனத்தில் தனியாக அமர்ந்திருக்கும்போது இயற்கை துணையிருத்தலும், வால்மீகி முனி, தன்னுடைய கையால் தருப்பையைக் கிள்ளித் தொட்டிலில் போட்டுக் குழந்தையை உருவாக்குதலும், பாலகர்கள் சீதையின் கற்பு மணிமாலையால் எதிரிகளை வீழ்த்தச் செய்தலும், வேள்வியில் இறந்த அசலவனை மீண்டும் இராமன் உயிர்ப்பித்து எழச் செய்தலுமாகிய செயல்கள் இயற்கையின் ஆற்றலைக் கடந்த நிலையில் அமைந்துள்ளதாகும்.

மேற்கூறிய செயல்கள் யாவும் சாதாரண நிகழ்ச்சிகளாக இல்லாது, ஒரு இறை ஆற்றலை உள்ளடக்கியதாகவோ அல்லது ஏதோ ஒரு இயற்கைக்கும் அற்பாற்பட்டு நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளாகும். இதுபோன்ற தன்மைகளைக் கையாண்டு கதையின் நடையோட்டத்தைச் சிறப்பாக்குகின்றார் ஆசிரியர்.

இவ்வாறு அமைந்துள்ள இந்தக் கதைப்பாடல் நாட்டுப்புற மக்களின் வாழ்க்கையை எடுத்தியம்புவதோடு அவர்களுடைய பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்குகள், சமுதாய அமைப்பு ஆகிய அனைத்தையும் வெளிப்படுத்துகின்றது. எனவேதான்,

> "ஒரு நாட்டில் வழங்கிவரும் கதைப்பாட்டுக்கள்
> அந்த நாட்டின் சட்டங்களைவிட .முக்கியமானவை"[42]

என்று ஆண்ட்ரூஸ் பிளெச்சர் என்ற மேனாட்டு அறிஞர் குறிப்பிட்டுள்ளார்.

பாமர மக்களின் பிரதிபலிப்பாகத் திகழும் இந்தக் கதைப் பாடல்கள் குறித்த ஆய்வு தமிழுலகில் அதிகமாக வெளிவரல் வேண்டும்.

## முடிவுரை

'குசலவர் சுவாமி கதை'ப் பாடலை ஆசிரியர் இன்பியல் முடிவாகவே முடித்திருக்கிறார். அதாவது பாலகர்களுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவைத்து நாட்டை நல்ல முறையில் ஆட்சிபுரிய வேண்டுமென்று அறிவுரையும் கூறுகின்றார் இராமர். அதன்பின் சீதையை வைகுண்டத்திற்குச் சென்றுவிடுவதாக அமைத்துளளார்.

கதைப்பாடலில் இன்பியல் முடிவு, துன்பியல் முடிவு என இருவகையிருப்பினும், மக்களை வாழ்த்திவிட்டு இறைவன் வைகுண்டம் செல்லுவதாகக் கூறி, அந்தக் காட்சியை மகிழ்ச்சியோடு பார்த்து மகிழ்ந்த மக்கள் அனைவரும் நல்ல பயனடைவார்கள் என்று கூறி இன்பமாக முடித்துள்ளார்.

## தொகுப்புரை

1. 'குசலவர் சுவாமி கதை' என்பது நாட்டுப்புற மக்களிடம் வழங்கிய கதை.
2. உத்தரகாண்டத்தில் அமைநதுள்ள குசலவர் பகுதியே, இக்கதையின் மூலமாகும்.
3. இச்சுவடியின் மூலம், மூல ஆசிரியரை அறிய இயலவில்லையெனினும் பிற்காலத்தில் எழுதப்பட்ட சுவடி என்பதை அறிய முடிகின்றது.
4. வழிவழியாக, பரம்பரையாகப் படிக்கப்பட்டு வந்த சுவடியெனத் தெரிகிறது.
5. மூலக்கதையிலிருந்து பல இடங்களில் வேறுபட்டு காணப் படுகிறது.
6. பிற சுவடிகளின் ஒப்பீட்டு முறையினால் ஒரே மாவட்டத்திற்குள் இரண்டு மூன்று வடிவங்கள் இருத்தல் அறியமுடிகிறது.

7. திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்த சுவடி யென்பது மொழியின் நடையமைப்பைக் கொண்டு அறிய முடிகிறது.

8. ஆசிரியர் வட்டாரத்தில் நடந்த கதையை இடைச்செருகலாக்கி, இறைப்பெயரின் மூலம் மக்களைத் திருத்த முனைந்துள்ளார் என்றும் தெரிய வருகிறது.

9. இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளை இக்கதைப் பாடலில் காணமுடிகிறது.

10. உத்தர காண்டத்தை மக்களிடம் சரிவரக் கொண்டு செல்லப் படவில்லை யென்பதும் உணர முடிகின்றது.

## ஆய்வின் பயன்

1. நாட்டுப்புற இலக்கியத்தில் சுவடியைப் பதிப்பித்தலால், எந்த அளவிற்கு அவர்களிடம் ஏட்டிலக்கியம் சென்றிருக்கிறது என் பதை அறிய முடிகிறது.

2. இந்தச் சுவடியின் வாயிலாக, நாட்டுப்புற வட்டாரத்தில் வழங்கு கின்ற கதையினை யறிய முடிகிறது.

3. இச்சுவடியின் மூலம் கதையின் மாற்று வடிவங்களைப் பற்றிய செய்தி தெரிய வருகின்றது.

4. சமயத்தின் வழி நல்ல கருத்துகளை வெளிப்படுத்தவே விழைகின் றனர் என்பதும் அறிய முடிந்தது.

5. இச்சுவடியின் வழிச் சமுதாயச் செய்திகளையும் அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-1, ப. 407.
2. கலைக்களஞ்சியம், தொகுதி-2, ப.70
3. வான்மீகி ராமாயண வசனம், யுத்த காண்டமும் உத்தர காண்டமும், ப.236.
4. மேற்படி, ப. 222.
5. மேற்படி, ப. 223.
6. மேற்படி, ப. 224.
7. மேற்படி, ப. 204.
8. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப. 12.
9. தமிழக நாட்டுப் பாடல்கள்.
10. ஏட்டில் எழுதாக் கவிதைகள்.

11. கதைப்பாடல்கள் — சில அணுகுமுறைகள், கருத்தரங்கக் கட்டுரை, ப. 1.
12. தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 5.
13. தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்.
14. ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப. 167.
15. கதைப் பாடல்கள் — சில அணுகுமுறைகள், கருத்தரங்கக் கட்டுரை, ப. 2.
16. நாட்டுப்புற இயல் — ஓர் அறிமுகம், ப. 142.
17. கதைப்பாடல்கள் — சில அணுகுமுறைகள், கருத்தரங்கக் கட்டுரை, ப. 6.
18. கலைக்களஞ்சியம், தொகுதி-9, ப. 362.
19. மேற்படி, ப. 363.
20. தமிழில் வில்லுப்பாட்டுகள், ப. 18.
21. மேற்படி, ப. 7.
22. மேற்படி, ப. 48
23. தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 103.
24. மேற்படி, ப. 105.
25. இலக்கியத்தில் நிமித்தங்கள், கட்டுரை, ப. 3.
26. தொல்காப்பியம், பா. 175, (பொருள்.)
27. சீவகசிந்தாமணி, பா. 2168
28. தமிழரின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 113.
29. தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 392.
30. தமிழ்ப் பேரகராதி, ப. 1240.
31. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப. 392.
32. இந்துமத இணைப்பு விளக்கம், ப. 173.
33. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-5, பகுதி-1, ப. 3100.
34. திருக்குறள், அறத்துப் பால், பா. 66.
35. மலடியும் மழலையும், ப. 55.
36. கண்ணீர் வயல்கள், ப. 66.
37. மலடியும் மழலையும், ப. 70.
38. அபிதான சிந்தாமணி, ப. 1434.
39. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-6, பகுதி-1, ப. 3672.
40. திருக்குறள், அறத்துப்பால், பா. 380.
41. ஆங்கில-தமிழ் அகராதி, ப. 1035.
42. ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப. 166.

# குசலவர் சுவாமி கதை

இவை கன்னங்குளத்திலிருக்கும் பொன்னையா நாடார் குமாரர் இராம நாடார் படித்து வருகிற குசலவர் சுவாமி கதை. நன்றாக நீடூழி காலம் வாழ்க.

### கடவுள் வணக்கம்

அரகரா சிவசிவா சிவனே சரணம்
அரனுமை பார்வதி சிவசக்தி சரணம்
சிவசி வாசிவா சிவனே சரணம்
சிவனுமை பார்வதி சிவசக்தி சரணம்
கரிமுக வாகணபதியே சரணம்
காரணி விநாய கியேஉன் சரணம்.

அத்தனே செஞ்சடை அரனே சரணம்
அழகிய நம்பி கருத்தா சரணம்
செம்பணி இளமயி லாளே சரணம்
திருவனந் தாபுரம் அமர்ந்தா சரணம்
பத்திரகாளி என்சர சோதியே சரணம்
பாரளந் தோனே உன்சரணம் சரணம்
சித்திர புத்திர நயினாரே சரணம்.

மான்மழு வேந்தும் மகதேவா சரணம்
மண்டைக்காட் டில்வாழும் மகமாயி உன்சரணம்
பார்புகழும் குமரிப் பகவதியே சரணம்
காலா சரணம் கடம்பா சரணம்
கனத்தமலை தன்னை எடுத்தா சரணம்
வேலா சரணம் விமலா சரணம்
வேள்விமலை யில்வாழும் முருகா சரணம்.

நாலா வேதத்திலும் அமர்ந்தா சரணம்
நாரா யணரே அரிராமா சரணம்
செயலாய் வளர்ந்த கருத்தா சரணம்
சிவனுடைபார் வதிஉன் சரணம்சர சரணம்தானே.

## விநாயகர் தோற்றம்

2. அரவணிந்த சிவனும் சிவகாமி ஆயிழையும் விரைவாய்
அடவிதனில் நடந்து இருபேரும் ஆனைஉரு வானார்
உருவாகும் அந்நாளில் அல்கல மகனே களிபெருக
துடியிடையாள் வயிற்றில் கெர்ப்பம் தோன்றித் தரித்ததுவே
தரித்த கருவுதன்னை விரைவுடன் தாயாரும் யீன்றெடுத்தாள்
மனத்தையுமே தளர்ந்து இருபேரும் மாயமாய்த் தானடந்தார்
நடந்தங் கவர்போக சிவகாமி நன்றி யுடையபிள்ளா
இருந்த இடம்தனிலே பிள்ளையார் கீழ்வடி வாகினரே.

## விநாயக வணக்கம்

3. இதன்வடி வாகிகண பதிக்குஏத்த பண்டம்
அவலுடனே பொரியும் அழகான தேங்காயும்
தேங்காய்ப் பலகணியும் அழகுசிறு கதலிக்குலையும்
பாங்காக யான்படைப்பேன் பலகாரம் ஒட்டிரொட்டி
ஒட்டிரொட்டி வடையும் ஒயிலான தேன்குழலும்
ஆசையுடன் படைப்பேன் அழகான தேங்காயும்
கதைக்குநீ வந்துதவும் திருச்செந்தூர்கானில் குறமகளே.

## பிற கடவுளர் துணை வேண்டுதல்

4. சிறப்புடன் மாலையிட்ட மணவாளன் செந்திலாறுமுகவான்
ஈஸ்வரி தன்புதல்வர் இயல்பாய்க் கதைக்குதகு
தாளத்துடன் படிக்க எனதுட வில்லிலிசை தருவாய்
அந்திமதி சூடும் அரனார் திருமகனே
தொந்திக் கணபதியும் மயிலேறும் வேலவ ரும்துணையே
துணையாகப் பாலருந்தும் அனந்தையில் தோன்றிய மாயவனே
சோலைக்கிளி மொழியாள் சரஸ்வதி மாதாவை யான்மறவேன்.

## ஆசிரிய வணக்கம்

5. மறவேன் குருபாதம் மாட நாடார்குடி யில்வாழும்
அண்ணாவி அவர்பாதம் அனுதினம் யான்மறவேன்
ஆசைத்தமிழ் பலதும் எனக்கு ஆராய்ந்து பாடிவைத்த
அண்ணாவி அவர்பாதம் எப்போதும் துதிக்கின் றேனே.

## வில்லுப்பாட்டுக்குத் துணை வேண்டுதல்

6. ஐந்து கரத்தாளே அபிராமியே ஆலந்துரை வாழும் தெய்வப்
பகவதியே
நெஞ்சில் நினைவெல்லாம் உந்தன் மேலே நீலிகபாலிக
சூலியம்மா
காரங்க எங்கள் மேனியோனே கடலைஅடைத் திடும்தெய்வக்
கார்வண்ணனே
போர்கள் செய்திடும் இலங்கை இராவணனை(ப்)
போரதுவென்றதோர் புண்ணியோனே
பர்ரெங்கும் உலகளந்து பாம்பணைமேல் பள்ளிகொண்ட
சிரீரங்க நாதன்கதை பாட தீவினைகள் அகன்றிடுமே
கைலாச வீட்டில்பிறந்த்வளே கன்னி சூடாமணி லச்சுமியே
வில்லோடே சீதை பிறந்தவளே வில்லருகே வந்துகுடி யிருப்பாய்
கோசலை யாளுட மருமகளே கொடியிடையே சீதா லச்சுமியே
நீதான் வந்துதாயே குடியிருப்பாய் நினைத்ததமிழ் யான்பாட
பாடறியேன் படிப்பறியேன் பாட்டினுட வகையறியேன்
ஏடறியேன் எழுத்தறியேன் ஏட்டினுட வகையறியேன்
நிகழாமல் யென்நெஞ் சகத்தில் நினைவில் குடிகொண்ட தாயே.

பொன்பரப்பன் கோடுகொண்டு பாரதப் போரை யெழுதி
தொந்தி வயறா(னை) முகத்தோனே பூலோகம் யெங்கும்
நிறைந்தோனே
இன்பமான பாலும் தேனும் இளநீரும் சர்க்கரையும்
எள்ளுருண்டை கரும்பு பலாப்பழமும் எந்நேரம் வாழைப்பழம்
படைப்பேனான்
வாழைப்பழ மு(ப்)பழமும் மாதுளம் பழம்நிறைய
வல்லவர்க் கிடத்தே படைப்பேன் நான் வந்தெனக் கருள்புரிய
வேணும்
வேளைக்கு நீர்வந்துதவும் வேலாயுதக் கெங்கை யோனே
வெள்ளிமலையில் வள்ளிமண வாளா வேறுவினைகள்
வாராமல் காப்பாய்

காப்பாய் பராபரனே கார்வண்ண நாரா யணரே
கங்காள காளியிடத் தோனே கரியபுலித் தோலுடையானே
ஆய்ப்பாடியில் வளரும் ஆயனே அச்சு(த)னே
ஆடரவில் பள்ளிகொண்ட மாலே அடியார்க்கிரங்கும்
திருமாலே

வாள்வீர லச்சுமியே தாயே சரசோதி யம்மா
வந்தெனக் கருள்புரியவேணும் வடவீர பத்திர மாகாளி.

## கதைப்பாடலுக்குத் துணை வேண்டல்

7. பத்திரமா காளியும் பராசக்தி வயிரவியும்
அடியேன்நா வில்குடியது கொள்ளம்மா கதை பாடவும் பவுசை தரவேணும்
தருவாய் கணபதியே சாற்றும்கதை தப்பாமல்
தருபத மானதுகுட வயறானது நிறையவேகதை சாற்றுகிறேன் மந்திரத்திறத் தினாலேதான்
மந்திரம் கட்டிச் சுருட்டி மந்திரக்கரு வித்தைதான்
வைத்தாலும் தெரிவிட்டோடுற வித்தைதான் வாணுதல் பகவதி யாளம்மனே
அம்மனும் பகவதியும் அங்கயற்கண் நாயகியும்
அறம்வளர்த் தவள்லச் சுமிசீதா கன்னியும் ஆயிழையாள் பத்திர மாகாளியே
உதிப்பீரே என்னுடைய பள்ளிகொண்ட பெருமாளே
உறுதியாய் நில்லுமையா அடியேனுட வலப்பக்கம்
எந்தன்குரு நாதாசர ணமென்று இருந்தோம் நாமிந்தக் களரிதன்னில்
இருந்த களரிக்கு ஒப்பாக ஏது குருபாதம் போற்றப் போறேன்.

## பெற்றோர் வணக்கம்

8. கருவாய்த் தரித்ததோர் கருக்குழியில் கையால் எனைப்பத்து மாதம்சென்று
உருவாய்ப் பிறப்பித்த மாதாவையும் உற்ற அரனையும் போற்றிடுவேன்
நிறைந்திருந்த பெருங்குளத்தில் நீராம்பலும் பூத்ததுபோல்
நீராம்பலம் பேராம்பலம் நிறைந்து ரெண்டுவகைப் பூப்பூக்கும்
பனிமலரில் விரியும்பூவைப் பறித்துவைத்து உனைத்தொழுவேன்
ஒருசிரங்கை முத்துவாரி ஒன்பதுவகை ரத்தினம்போல்
இளங்கடல் மீதில் அள்ளியிட்டு பொன்னுங் கம்பிகொண்டு கோர்த்ததுபோல்.

## கதிரவன் வணக்கம்

காலைநேரம் கிழக்கேதோன்றி கயிலைநாதனைச் சுற்றிவலம்
வருவாய்
மாலைநேரம் மேற்கேதோன்றி மண்டலங்கள் ஏழும்சுத்தி
ஆதித்த பகவான்தனைத் துதிக்க அகன்றிடுமே அடியேன்வினை
கமௌல்லாம்
அய்ந்துகரத் தோனேஎந்தன் தமிழுக்கு வந்துரச்சித் தருள்வாய்
படைப்பேன் பொரியவல் நெல்ப்பொரிகள் சீனிஆதரவாய்ப்
படைப்பேன்
காரங் கமேவிய சீரங்கச் செல்வனே மேவியப(த்)பநாதா.

## குலதெய்வ வணக்கம்

10. பத்பநாதா அவுசேர் பதிசேர் பதிசேர் திருவங்களும்
பண்போ டிருக்கின்ற தில்லையின் மேவிய பாவைசிவசுந்தரி
சுந்தரி யந்தரி வைகைப்படை வீட்டில்வாழும் பகவதியே
சொல்வள ரும்புகழ் வைகுந்தக் கள்வாயென் சோதியே
ஆழ்வாரே
ஆழ்வாரே எங்கள் மதுரக் குளக்கரை ஆதிசிவப்பொருளே
ஆதரவா கவேபாட வரமருள்வாய் நட்டாத்தி நாயகமே
நட்டாத்தி யம்மா குரங்கண்ணித்தாயே என்நாவில்
குடியிருப்பாய்
நான்முகன் தேவியே எந்தன்சரஸ்(வ)தி நாவில் குடியிருப்பாய்
நன்மையுட னெங்கள் ஆத்தூர்ப்பதியில்வாழும் சோமநாத
சுவாமி
சோமநாதா அருஞ்சுனை காத்தய்யன் செந்தூர்ப் பதியில்வாழும்
தூண்டா விளக்கொளிபோல் வீற்றிருக்கின்ற செந்தி
லாறுமுகவான்
வில்லி லிடுகின்ற வஞ்சனைசூனியம் இட்டாலும் வராமல்
வில்லும் எனதுட வீசுகோல்தாங்கிய கையும் சடையாமல்
கையும் சடையாமல் காக்கவருவாய் ஆறுமுகக் கந்தையா.

## விநாயகருக்குப் படையல்

11. தில்லை மன்றுள்ள ஆடும் சிவனுடன்
செப்ப மான கணபதி யானுக்கு
வில்ல மான பிலாச்சுளை யாவின்பால்
மிக்க எள்ளுப்பொரி உருண்டை சர்க்கரை

சர்க்க ரையும்கரி பொரி(யும்) அப்பமும்
தான டக்காய் கடலைவி டலையும்
எப்பொழு(து)ம் கணபதி யானுக்கு
இனியபாலும் பிலாச்சுளை யாவின்பால்
ஒப்புரவாய் உமக்கே படைப்பேனான்
உத்ததீபம் தீபங்கள் காட்டுவேன்
திரிபுரத்தை எரித்த மைந்தனே
முக்கண்ணனே முருகோனே கந்தனே
மூன்றுகண் ணால்எரித்த சரசோதியே.

## கலைமகள் துதி

சொல்லிலேயும் துணைபபாதம் போற்றுவேன்
சோதிநல்ல சரஸ்வதி உன்னருள்
வாங்கிவந்த அருமைக் கொடிதன்னை
மண்டலத்தில் மறப்பதும் அல்லவே.

## தாய் வணக்கம்

13. ஆட வல்லவன் படிக்க வல்லவன்
பண்டு பண்டுள்ள காளாஸ்தி அய்யனும்
ஓதி வைத்தார் பலநூறு நூல்களை
உங்கள் பாதமும் என்தலைமேல் கொண்டேன்
ஆளுவா பொன்னம்பலச் சண்முகா
அடியேன் சென்ற கழ்னியில்
வென்று தருவாய் யிதுச(ம)யம்
பத்துமாதம் சுமந்து பாவியே என்னுடம்பை
தத்துவமாய் வளர்த்தெடுத்த தாய்தானு னக்கிளையோன்
சித்துமாலை குழலேசிவ னோடுவாதா டிவந்தமுத்து.

## முத்தம்மன் துதி

14. தகுதியென்று தேரேறி திசைக ளெல்லாம்
அதிர வந்தால் வுருமுற்றே முற்றேநீ
உலக மெல்லாம் ஆளும் முற்றே
திருமுற் றேஇளம் பிறையே
தெய்வார்கள் போற்றும் முற்றே.

வரும்முற்றே எந்நேரம் வலதுகை தரித்தமுற்றே
சொரிமுத் தாரம்ம னென்றால் எனைச்சூழ்ந்த
எனைச்சூழ்ந்த வினைகளெல்லாம் அகன்றோடிப்
போய்விடுமாமே.

## இராமர் முதலானோர் துதி

15. ஓம்நமோ நாராயணா சீதை மணவாளா
புவனபதி யீரேழும் ஒன்றாய் அளந்த
அனவரச கல்யாணி ரெகுராமச் சந்திரா

ஆதிநா ராயணர் கொலுவாய் இருந்தார்
உத்தண்ட வீர விளைய பெருமாள்
லோகாதி யோகன் கொலுவாய் இருந்தார்
செம்பவழ வாயழகா கோதண்ட ராமன்
சிரீரெங்க நாராயண வடிவு தானும்
என்பெரு மாளரி கோதண்ட ராமன்
இரணிய சம்பாரம் ஆடும் பெருமாள்
ஒளித்திருந் துபதேசம் கேட்கும் ஆறுமுகவா

என்றோடியே பத்திரகாளி கலையேறி வருவாய்
ஆழி சுற்று ஏழுமரம் ஊடுருவாய்
ஆலைகடல் ஊஞ்சலில் அம(ர்)ந்த பெருமாளே
பஞ்ச பாண்டவ ரஞ்சுபேர்க்கு தவியாக
பாருலகில் பொய்சூது வாதுகளு ரைத்தார்
எந்தவினை வந்தாலும் வந்தஇடம் போக
யீஸ்பர னும்பார் வதியும்
எப்போதும் என்முன் னின்றுகாக்க வேணும்.

## இராமர் அரசு

16. நாடா னதொரு நாடதிலே நல்லஅய்யோத்திமா நகர்தனிலே
தேச மானதோர் தேசத்திலே தெய்வஅயோத்திமா நகர்தனிலே
ஆடிக் கழித்ததோர் ஆவணிமுதற்தேதி அயோத்தி நாட்டிலே
இராமர்வந்தார்.
வந்தார் மாயவர் வந்தாரென்பார் வர்ணத் தெருக்களை
அலங்கரித்தார்
தெருக்க ளென்றதோர் தெருக்களெல்லாம் தெருவில் தோரணம்
கட்டுவாராம்
வாழை கரும்புகள் நாட்டுவாராம் மல்லிகை பிச்சிப்பூ
தூக்குவாராம்
இரத்தின சிம்மாசன மேடையிலே இராம சுவாமியும்
அரசிருந்தார்
அரிகரி இராமரும் கொலுவிருக்க அன்ன லச்சுமியும்
கொலுவிருக்க

மன்ன னிளையோனும் கொலவிருக்க மாதா பிதாவெல்லாம்
கொலுவிருக்க
கொலுவி ருக்கிற வேளையிலே கோபால மூர்த்தியை
அடிதொழுதார்
ஐம்பத் தாறுதேச இராசாக்களும் அச்சுத இராமரை
அடிதொழுதார்
அறுபத்தி மூன்றுபேர் மந்திரிமார் அரிய நெடுமாலை
அடிதொழுதார்
தம்பி பரதாழ்வான் சத்துருக்கன் சுவாமி நாயகரை
அடிதொழுதார்
கோசலை கைகேயி சுமித்திரையும் கொடியிடை மாதர்கள் வந்து
கண்டார்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத இராமரும் ஏதுசொல்வார்.

## இராமர் பரதனை வினவுதல்

17. என்னுடைய தம்பி பரதாழ்வான் இருந்து அயோத்தியை
அரசாண்டாய்
நன்செய் புன்செய் கடமைகளை இராம சுவாமியும்
யெங்கேயென்றார்
இராம சுவாமியும் கேட்டபோது தம்பி பரதாழ்வான்
ஏதுசொல்வான்.

## அரசுக்கடமை பற்றிப் பரதன் கூறுதல்

18. எங்கள் பெருமானே கோபாலா ஏழைப்பங்காளா சொல்லக்
கேளும்
ஏழைப் பரதாழ்வான் என்றுசொல்லி ஏய்த்துப்போட் டாரந்தச்
சமுசாரிகள்
அண்ணர் கோபாலர் போனபின்பு அடஓலை யானது
எழுதிக்கொண்டார்
எப்படி அடஓலை எழுதிக்கொண்டார் எங்கள் பெருமாளே
கோபாலா
மேல்கண் டதுகோ பாலர்க்கும் கீழ்கண் டதுசமு சாரிக்கும்
இப்படி அடஓலை எழுதிக்கொண்டு என்னென்ன பயிர்கள்
செய்தார்
மஞ்சள் இஞ்சி சிறுகிழங்கு வாய்த்த யீருள்ளி வெள்ளப்பூடு
சேனையோடு சேம்பு வைத்தான் சிறந்த வள்ளிக்
கிழங்கும்வைத்தான்

சீனிக் கிழங்கோடு பிடிகிழங்கும் சிறந்த ஏழலைக்
கிழங்கும்வைத்தான்
இப்படி யாய்ப்பயிர் செய்துகொண்டு ஏய்த்துப் போட்டானே
கோபாலரே
பின்னும் ஒருவருடத் திற்கு வேறே அடஓலை
எழுதிக்கொண்டார்
மேல்கண் டதுசமு சாரிக்கும் கீழ்கண்ட டதுஇராமருக்கும்
இப்படி அடஓலை எழுதிக்கொண்டு என்னென்ன பயிர்கள்
செய்தார்
நெல்லுப் பயிரோடே கம்பம்புல்லும் நேர்த்தியான குதிரை
வாலிகளும்
சாமிப் பயிரோடே வரவன்பயிர் சமுசாரி மார்களும்
விதைத்துக்கொண்டார்
இப்படியாய்ப் பயிர்கள் செய்துகொண்டு ஏய்த்துப் போட்டாரே
சமுசாரிகள்
நன்செய் புன்செய் கடமைகளை நானும் ஒன்றுமே
வாங்கவில்லை
கோவில் பூசையதைக் குறைக்கவில்லை குருக்களை
நானொன்றும் வையவில்லை
ஆயத் துறையிலே நானிருந்து அதிலே இலாபமும் தானெடுத்து
தாய்மார்கள் மூன்று பேர்தனக்கும் சாப்பாடு நானும் கொடுத்து
வந்தேன்
இராமர்லட் சுமணர்என்ற களஞ்சியமும் கட்டி யிருக்குது
கோபாலரே.

## இராமர் விவசாயிகளை யழைத்தல்

19. என்று பரதாழ்வான் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
என்னுடைய தம்பி பரதாழ்வான் சமுசாரி மார்களை
அழைத்துவாடா
அண்ணர் கோபாலர் சொன்னபோது அழைத்து வந்தாரே
பரதாழ்வான்
சமுசாரி மார்கள் யெல்லோரும் சுவாமி நாயகர்
முன்பில்வந்தார்

## பூசணி விதையளித்தல்

20. எங்கள் பெருமானே கோபாலா எங்களை அழைத்த
காரணமேன்
என்று சமுசாரி கேட்டபோது ஏதுசொல் வாரந்தக் கோபாலர்
வாரும் பிள்ளாயடா சமுசாரியே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்
ஒருபூ சணிவிதை யதுதான் கொண்டு வந்தேன் சமுசாரியே
என்று சொல்லியந்தக் கோபாலர் பூசணி விதையைக்
கை(யி)லெடுத்து
ஆளுக்கு அஞ்சாறு விதையாக அச்சுத இராமரும்
கையில்கொடுத்தார்
பூசணி விதையைக் கையில்கொடுத்து பூமி யளந்தானும்
ஏதுசொல்வார்.

## கடமை- கட்ட ஆணையிடுதல்

21. எங்க ளை(ய்)யா தசரதர்க்கு ஏற்றதிதி நடத்த் வேணுமடா
அய்யா வுடசிலவுக் குத்தான் ஆளுக் கொருகாய் தந்திடுவீர்
என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தச்
சமுசாரிமார்
நல்லது நாங்கள் தாரோமென்று அவரவர் களும்தான்
போனார்.

## அனுமனுக்கும் விதையளித்தல்

22. சமுசாரி மார்களும் போனபோது சுவாமி நாயகர் ஏதுசொல்வார்
வாரும் பிள்ளாயடா வாளனுமான் வார்த்தை நானொன்று
சொல்லக்கேளு
நம்முடைய. கொல்லை யானதிலே இந்தப்பூ சணிவிதையைப்
போட்டுவாடா
போடு மென்றுகோ பாலரும் பூமியளந் தோனும்
கையில்கொடுத்தார்.

## பூசணிப் பயிர்

23. அடிதொழுது விதைகையில் வாங்கி அரிரா மருட தூதுவனும்
அச்சுத ராமருட சொல்படியே ஆதி நெடுமாலுட தூதுவன்தான்
கொல்லை தன்னிலே கொண்டுவந்து கோல நெடுமாலுட
தூதுவனும்
அரிகரி இராமரை மனதிலெண்ணி அனுமான் பூசணி
தான்போட்டான்.

## பூசணி விளைவு

24. அனுமான்· போட்டதோர் பூசணிதான் முளைத்து உருவாகி
பூசணிதான்
கொடிவீ சியொரு பூப்பூத்து கோபால ராமருட செயலாலே
ஏற்றக் காயது பூசணிக்காய் உலகளந் தோனுட செயலாலே
தங்க நிறமாகக் காய்த்திருக்க சுவாமி நாயகர் செயலாலே

## விவசாயிகள் பயிர்

25. சமுசாரி மார்களும் கொண்டுவந்து அவரவர் களுடன்கொல்
லையிலே
பூசணி விதைதான் போட்டு பூமியளந் தோனுட சொல்படியே
தண்ணீர் விட்டுவந்தா ரெல்லோரும் முளைத்து உருவாகி
பூசணிதான்.

## இராமர் சாபம்

26. கப்புக் கவர்களும் தானேவிட்டு கடுகப் பூசணி படர்ந்திடுமாம்
பூங்காம் பெடுக்கிற சமயத்திலே போனாரே பூசணித்தோட்டம்
பார்க்க
பார்த்து வருகிற வேளையிலே பச்சமுகில் வண்ணர்
ஏதுசொல்வார்
பூப்பிடிக்கப் பிஞ்சி பிடியாமல் போகட்டு மென்றுராமர்
சாபமிட்டார்.
சாபமானதை விட்டுப் போட்டு சுவாமி நாயகர் போனபோது
பூப்பிடிக்க பிஞ்சி யெல்லாம் வெம்பியே யங்கே விழுந்திடுமாம்
சமுசாரி மார்கள் கொல்லையிலே ஒருகா யாகிலும்
காய்க்கவில்லை
இப்படியாய் இருக்கும் போது ஏதுசொல்வா ரந்தக் கோபாலர்
எங்க ளைய்யா தசரதர்க்கு ஏற்ற கருமாதி செய்யவேணும்
பூசணிக்காய் வேணு மென்று பெருமாளும் கேட்ட போது
அப்போது அந்தச் சமுசாரிமார் அச்சுத இராமர்
முன்பில்வந்தார்.

## காய்ப்பு இன்மை

27. என் பெருமாளுட முன்பில் வந்து ஏதுசொல் வாரந்தச்
சமுசாரிமார்
அரிகரி ராமா சரணமையா ஆயர் மனையிலே வளர்ந்தோனே

அச்சுதனார் தந்த விதைகளெல்லாம் அவரவர் களுடகொல்
லையிலே
ஒருகா யாகிலும் காய்க்கவில்லை உலகளந்த தெய்வப்
பெருமாளே.

## விலைக்கு வாங்கித் தரச்சொல்லுதல்

28. என்றடி தொழுதாரே சமுசாரிகள் என்பெரு மாளும்
ஏதுசொல்வார்
நம்முடைய கொல்லை யானதிலே அனுமான் பூசணி
போட்டிருந்தான்
அதிலே ஒருகாய் காய்த்திருக்கு அந்தக்காய் கிரையம் தந்திடுவீர்
அல்லவென் றால்நீங்க ளெல்லோரும் ஆளுக்கு ஒருபூ சணிக்காய்
வாங்கி வந்திங்கே தந்திடுவீர் யென்று பெருமாளும்
சொன்போது
ஏற்ற புகழ்பெற்ற சமுசாரிமார் எல்லோரும் அவர்ஒன் றுகூடி
ஆளுக் கொருகாய் வாங்கவென்று அவரவர் களும்போன போது
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்.

## காய்கள் அழுகிப் போதல்

29. சமுசாரி மார்கள் யெல்லோரும் கையி லெடுக்கிற பூசணிக்காய்
காம்பிருக் கக்காய் உள்ளழுக என்று பெருமாளும் சாபமிட்டார்
கனியெறிந் தோன்சாப மிட்டதினால் கார்வண்ண ராமர்
செயலாலே
போய்ப்பார்க் கின்ற காய்களெல்லாம் புறம்பூசியே உள்ளே
அழுகிருக்க
சமுசாரி மாரெடுக்கும் காய்களெல்லாம் காம்பிருக்கக் காய்தான்
அழுகிடுமாம்
கடுகச் சமுசாரிமார் ஓடிவாறார் கைதனில் காய்கள்
அகப்படாமல்
உலகளந் தோனுட முன்பில்வந்து ஆய்ப்பாடி ராமா
சரணம்மையா.

## காய்க்குப் பதில் விலை கூறுதல்

30. எங்கள் பெருமானே கோபாலா ஏழைப்பங் காளா
சொல்லக்கேளும்
நாங்க ளெடுக்கிற காய்களெல்லாம் உள்ளழு கிச்சுவாமி
போச்சுதையா

ஓங்கள் கொல்லையில் கிடக்கிறகாய் பெற்றகிர யத்தைத்தா
ரோம்மையா
என்று சமுசாரி சொன்னபோது என்பெரு மாளும்
ஏதுசொல்வார்
வாரும்பிள் ளாயடா வாளனுமான் வார்த்தை நானொன்று
சொல்லக்கேளாய்
நம்முடைய கொல்லையில் கிடக்கும் பூசணிக் காயை
பறித்துவாடா
என்று பெருமாளும் சொல்லிடவே இயல னுமானும் ஓடிவந்து
பூசணிக் காயைத் தான்பறித்துப் பூமியளந் தோனுட
முன்பில்வைத்தான்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசெய்தார்
விசுவ கருமனை வரவழைத்து வெண்ணையுண்ட தெய்வப்
பெருமாளும்
இந்தப் பூசணிக்கா யதைத்தான் இன்னவிலை யென்றுபோடும்
மென்றார்
அப்போது அந்தக் கோபாலர் அரிநெடு மாலுட சொல்படியே.

## எடைக்கு எடை தங்கம்

31. நிலைகளா னதுபார்க் கும்போது நீலநெடு மாலுட செயலாலே
விலைமதிக் கவும்மாட் டாமல் விசுவ கருமனும்ஏ துசொல்வான்
செங்கை நெடுமாலே கோபாலா தெய்வப்பெரு மாளேசொல்
லக்கேளும்
இந்தப் பூசணிக்கா யதைத்தான் என்னால் விலைமதிக்கவும்
ஏலாது
இடைக்கி இடைத்தங்கம் கொடுத்திடலாம் என்று சொன்னானே
விசுவகருமன்
அப்போது அந்தச் சமுசாரிமார் நல்லதுநாங் கள்தாரோம்
மென்றார்
விசுவ கருமனுட சொல்படியே திரவிய மானதைக்
கொண்டுவந்தார்
ஒருபக்கத் தராசில் பூசணிக்காய் ஒருபக்கத் தராசில் திரவியமும்
வைத்து நிறுத்தாரே விசுவகர்மன் கண்டு திருமாலும்
ஏதுசெய்தார்.

## மக்கள் பொருள் அனைத்தும் சரியாதல்

32. பூசணிக் காயிருந்த தட்டதிலே பொன்னும் பெருமாளும்
வந்துறைந்தார்
காயிருந்த தட்டதுதான் கடந்த தட்டது எழும்புதில்லை
கண்ணில் கண்டுதான் சமுசாரிமார் ஆடு மாடுகள்
சொத்துகளும்
வீடுஆடு வாசல் நஞ்சைபுஞ்சை பதினாறு வருடத்து ஆமிசமும்
வைக்க வைக்க ஏற்குதையா வாள னுமான் பூசணிக்காய்
தாலி முதல்தான் கழற்றி சுவாமி தராசில் கொண்டுவைத்தார்.

## களஞ்சியத்தில் சேர்த்தல்

33. இருந்த சொத்தெல்லாம் வந்(த)தென்று ரெகுராம மூர்த்தியும்
தானறிந்து
கண்ணர் பெருமாளும் அப்போது கடுக அனுமானை
வரவழைத்து
தராசி லிருக்கின்ற திரவியத்தை தெய்வப் பெருமாளும்
ஏதுசொல்வார்
ராமலட்சும ணரென்ற களஞ்சியத்தில் நலமுடனே கொண்டு
போடுமென்றார்
அரிரா மருட சொல்படியே அனுமான் திரவியம் தானெடுத்து
களஞ்சி யத்திலே கொண்டுவைத்தான் கார்வண்ண ராமர்
தூதுவனும்.

## மக்கள் முறையீடு

34. திரவியம் ஒன்றாகச் சேர்ந்தபின்பு தெய்வப் பெருமாளுட
அடியார்கள்
அய்யய்யோ ராமா ராமாவென்று அடியார் களும்முறை
யுமிட்டார்
முறையு மிட்டதோர் வேளையிலே அரிநெடு மாலும்
ஏதுசெய்தார்
அனுமானை அறையில் கண்ணிபோட்டு அச்சுத ராமரும்
கையல்கொடுத்து
சுரைப்பாத் திரமும் கையில்கொடுத்து சுவாமி நாயகர்
ஏதுசொல்வார்
ராமா ராமா வென்றுசொல்லி ராமக் குழுவனாய்ப்
போங்களென்றார்

என்று சொல்லியே கோபாலர் என்பெரு மாளும்
அனுப்பிவிட்டார்
அச்சுத ராமருட சொல்படியே அடியார்களும் போன பின்பு
அப்போது அந்தக் கோபாலர் அய்யாவுக் குத்திவசம்
கொடுக்கவென்று.

## திதி கொடுத்தல்

35. தோட்டியனை யங்கே வரவழைத்துத் தேசமெல் லாம்பறை
யறையச்சொன்னார்
அவனி ஐ(ம்)பத்தாறு தேசமெல்லாம் அடிக்கச் சொன்னாரே
பறைஓசை
அரிகரி ராமரும் சொன்னபோது அறைந்தான் தோட்டியன்
தேசமெல்லாம்
தசரதர்க் குக்கரு மாதியென்று அயோத்தி நாட்டிலே
பறையறைந்தான்
வாழும் அயோத்தியி லுள்ளவர்கள் வந்தார் படைவீடு ஆனதிலே
அயோத்திப் பட்டணம் அலங்கரித்தார் அய்யாவுக் குத்திவசம்
கொடுப்பதற்கு
இராம சுவாமியும் லட்சுமணரும் நல்ல பரதாழ்வான்
சத்துருக்கன்
ஐம்பத்தா றுதேச ராசாக்களும் ஆத்தங் கரையது தன்னில்வந்து
அய்யாவை அடக்கின யிடமதிலே திருமஞ்சனைக்
குடத்தில்தண்ணீர்கோரி
இராம சுவாமியும் குழிமெழுகி வந்திருந்து இராமர் கையாலே
அய்யாவுக் குத்திவசம் தான்கொடுத்து அதிலிருந்து ராமர்
தருமமிட்டார்
கோடி வஸ்திரம் அரிசிகரி கோபால ராமரும் தருமமிட்டார்
கொள்ளிவைத்து ராமர் குடம்சுமந்து எல்லாச் சடங்கெல்லாம்
செய்தபின்பு
கெங்கை யாற்றிலே தீர்த்தமாடி கிருபையுட னந்தக் கோபாலர்
இராம சுவாமியும் லட்சுமணரும் நல்ல பரதாழ்வான்
சத்துருக்கன்
எல்லோரும் ஒன்றாய்த் தீர்த்தமாடி இன்பமுட னவர்வீட்
டில்வந்தார்
அயோத்தி யாபுரி யானதிலே அன்னபோ சனம்மிக வேசெய்து
அரிராம சுவாமிக்குப் பட்டங்கட்டி அரசிருந் தாரே கோபாலர்.

## ஆறில் ஒரு கடமை

36. ஆறிலொன்று கடமை வாங்கி அசையாத மணியுங் கட்டி
கூறி லொன்றும் குறையாமல் குவலயத் தையர சாண்டிருந்தார்
அரசாண் டிருந்தாரே கோபாலர் வாழும் அயோத்தியா
புரியதையும்
இளமையிலே சாவு கிடையாது கால தூதர்கள் கூடாது
கனியெறிந் தோனுட செயலாலே காலன் நெருங்கிடக் கூடாது
யிறப்பது வேஅல்லாது யிறப்ப வர்கள் ஒருவ ரில்லை.

## சீதை கருவுறுதல்

37. இப்படி யாகவே ரகுராமர் ஆக்கினைச் சக்கரம் தானும்செய்து
அரசாண் டிருக்கிற வேளையிலே மங்கை லட்சுமி திருவயிற்றில்
ஒன்றாகி மாதம் ரெண்டாகி உயர்மூன் றாகிமாதம் நாலாகி
ஐந்தான மாதத்திலே அச்சுத ராமரும் ஏதுசொல்வார்
ஒருநா ளையதின மானதிலே உலகளந் தோனும் ஏதுசொல்வார்
வயிற்றிலே மாதம் சென்றவர்க்கு இனிதாய் இருக்கிற
பிலாத்தமது
தேவை யானதைக் கேளு மென்று சிரீராமரும் கேட்டபோது
என்பெரு மாளும் கேட்டபோது இளமயில் சீதையும்
ஏதுசொல்வாள்
எங்கள் பெருமானே கோபாலோ ரிஷிகளைப் பார்க்கத்தேவை
யிருக்குதென்றாள்.
வனம்பார்க்கத் தேவை யிருக்குதென்று மங்கை லச்சுமியும்
கேட்டபோது
வனம்பார்க்க வரம்தந் தோமென்று மாயவ ராமரும்
வரங்கொடுத்தார்
அன்று கதிரோனும் அடைந்தபோது அச்சுத ராமரும் லச்சுமியும்.

## நகரச் சோதனை

38. பள்ளியறைக் கட்டி லானதிலே பச்சமுகில் வண்ணர் அரசிருக்க
அன்று ராத்திரி வேளையிலே அச்சுத ராமரும் ஏதுசெய்தார்
செம்பாதி நிசிவே ளையிலே செங்கை நெடுமாலும் கண்முழித்து
நாமிருந் தரசாண் டதுபோல தம்பி பரதாழ்வான்
ஆண்டிருந்தான்
நம்முடைய பேர்துதிக் கிறதும் பரதாழ் வான்பேர் விளங்கிறதும்
கவனி யாமல் இருப்பதுவும் அறிந்து பார்த்துவர வேணுமென்று

அருகா சுப்படுத் திருந்த அன்ன லட்சுமியை அறியாமல்
கொடுங்கை தன்னிலே படுத்திருந்த கோல மயிலாளை
அறியாமல்
எதிரா சனத்திலே போட்டுவைத்த எறியீட்டி ராமர்
யெடுக்கவில்லை
மதிலோடு சாத்தி வைத்த மந்திரவாள் கத்தி யெடுக்கவில்லை
தலையணை யிலேசாத் திவைத்த .... .... ....
கூடம் தன்னிலே படுத்திருந்த குள்ளச் சேவுகர் முழிக்கவில்லை
தலைவா சலில்காத் திருந்த தலையாரி சற்றும் முழிக்கவில்லை
கோழி யானது கூவவில்லை யாரும் அறியாத வேளையிலே
சிங்கா சனத்திலே படுத்திருந்த தீர னிளையோனைக்
கூட்டிக்கொண்டு
அயோத்தி-மாநகர் தெருவத்திலே அச்சுத ராமரும் தானேவந்தார்
நகர் சோதனை தான்பார்த்து ராம சுவாமியும் வாறபோது.

## மக்கள் பேச்சு

39. ராமா ராமா வென்றுசொல்லி ராம சுவாமியைத் துதித்திடுவார்
குடியான பேர்களும் சொன்னபோது கோபால ராமரும்
சந்தோசமாய்
அந்தத் தெருவீதி தன்னைவிட்டு அடுத்த தெருவிலே வாறபோது
அந்தத் தெருவீதி சனங்களெல்லாம் அரிராம சுவாமியைத்
துதித்திடுவார்.

## மாட வண்ணான் இல்லம்

40. அந்தத் தெருவீதி தன்னைவிட்டு அடுத்த தெருவிலே வாறபோது
அயோத்தி மாநகர் ஊர்வெளுக்கும் அழுக்கெடுக்கும் சாதி
மாடவண்ணான்
வீரபத்திரன் வண்ணான் மகளை மணமுடித் தந்த
மாடவண்ணான்
வாழும் அயோத்தியில் தானிருந்து வளர்ந்துண் டிருக்கிற
காலத்திலே
வாக்கு றுதிசத் தியுமாய் மாட வண்ணானும் தானடைந்தான்.
இப்படி யிருக்கிற காலத்திலே ஏந்திழை யாளந்த வண்ணாத்தி
மாட வண்ணானுட பெண்சாதி மகிடம்பூ மாலையென்ற
வண்ணாத்தி
மறுதெரு வதுஆ னதிலே மறுமாப் பிள்ளையை வைத்திருந்தாள்

கள்ளத் தனமாக வண்ணாத்தி மாட வண்ணானை அறியாமல்
இந்தச் செய்தியைத் தானறிந்து வண்ணான் என்னமாய்த் தானிருந்தான்
யெண்ணாத யெண்ண மெல்லாம் யெண்ணி யெண்ணியே கவலைகொண்டான்
அன்று ராக்கால மானதிலே அரிய நெடுமாலும் வந்திருக்க
இருபேரும் படுத்திருக்கும் போது ஏதுசெய் தானந்த மாடவண்ணான்
அவளுடைய முந்திச் சேலைதன்னை அவனுட முந்தியில் முடிந்துகொண்டான்.

## மனைவியின் செயல்

41. நகர்சோ தனைக்குராமர் வந்திருக்க அன்று ராக்கால மானதிலே
வண்ணா னுறக்கம் தான்பார்த்து மகிடம்பூ மாலை வண்ணாத்தி
செம்பாதிநிசி வேளையிலே சேயிழை யாளும் தான்முழித்து
சேலை யடித்த சடவாற தெளிய உறங்கினான் மாடவண்ணான்
வண்ணான் முந்தியில் முடிந்திருந்த முந்தியை மெல்லத் தானவிழ்த்து
அந்த வேளையில் தானெழுந்து அடுக்களை சோறு கறியெடுத்து
மறுமாப் பிள்ளை யிடமதிலே மகிடம்பூ மாலை தான்போனாள்
வண்ணாத்தி யானவள் போனபோது மாட வண்ணானும் முழித்துவிட்டான்.

## வண்ணான் ஐயுறுதல்

42. வண்ணாத்தியை வண்ணான் காணாமல் மாட வண்ணான் ஏதுசொல்வான்
இந்த நடுச்சாம வேளையிலே எங்கே போனாளிந்த வண்ணாத்தி
வரட்டு வரட்டு மென்றுசொல்லி வாசல் நடையிலே காத்திருந்தான்
கழுதை கத்துகின்ற கம்பெடுத்து காத்திருந்து வண்ணான் தூங்குகிறான்
காத்தி ருந்து தூங்குகிறான் கழுவ டிநாய் போலே
ஒருசாம பத்து நாழிகையால் ஒண்டியாக வண்ணான் தூங்குகிறான்
மறுமாப் பிள்ளையிடம் போனவள்தான் மகிடம்பூ மாலை வண்ணாத்தி

வெற்றிலை பாக்கவள் தின்றுகொண்டு விளையா டியவள்
சரசமிட்டு
சந்தனம் கஸ்தூரி அணிந்தல்லவோ தார்குழ லாளந்த
வண்ணாத்தி

## மனைவி திரும்பி வருதல்

43. சரசமிட்டு அவள் விளையாடி தானே வந்தாளே வண்ணாத்தி
மறுமாப் பிள்ளைகூட வாழ்ந்திருந்த வண்ணாத்தி யானவள்
வெளியில் வந்தாள்
கெங்கா தேவி யிடமதிலே கிளிமொழி யாளந்த வண்ணாத்தி
காலு கைகளும் சுத்திபண்ணி கள்ளத் தனமாக வண்ணாத்தி
திடுதி டென்று வண்ணாத்தி தேன்மொழி யாள்வாழும்
வீதியிலே
முற்ற மானதில் வந்துநின்று மொய்குழ லாளந்த வண்ணாத்தி
வண்ணான் அசுதை தனைப்பார்த்து வாசல் நடைக்குள்ளே
தான்நுழைந்தாள்
வாசல் நடைக்குள்ளே நுழையும்போது மயிரையெட்டிப்
பிடித்தான் மாடவண்ணான்.

## கணவன் மனைவியர் வாக்குவாதம்

44. பிடித்த பிடியோடே வண்ணானும் பேசினான் மகிடம்பூ
மாலைதன்னை
இந்த நடுச்சாம வேளையிலே எங்கே போனாயடி வண்ணாத்தி
மறுமாப்பி ளைமேலே ஆசைகொண்டு போனா யடியென்று
தானடித்தான்
மயிரை யெட்டிப் பிடித்துக்கொண்டு மகிடம்பூ மாலையைத்
தானடித்தான்
அடித்த அடிபொறுக்க மாட்டாமல் ஆயிழை வண்ணாத்தி
ஏதுசொல்வாள்.

## மனைவியின் மறுப்புரை

45. அன்னிதமாய் என்னை அடியாதே அருமை கெட்டபாவி
மாடவண்ணான்
பெண்ணோடே ஆணோடே பிறக்கலையோ பெரும்பாவி
யடாமாட வண்ணான்
பெண்பாவ மானது பொல்லாதது பிழைகள் நேரிடும்
மாடவண்ணான்

குளங்களை வெட்டி முறிப்பதிலும் கொடிய பாவமல்லோ
பெண்பாவம்
அந்தணரை வெட்டிக் கொல்வதிலும்அதிக பாவமல்லலோ
பெண்பாவம்
காராம் பசுவைவெட்டிக் கொல்வதிலும் கன்னியர் பாவம்
அதிகமல்லோ
ஆண்பிள்ளை யெங்கேதான் போனாலும் பெண்பிள்ளை
களுடன் சொல்லுவாரோ
பெண்பிள்ளை யெங்கேதான் போனாலும் ஆண்பிள்ளை
களுடன் சொல்லுவாரோ.

## காரணம் கூறுதல்

46. கேப்பைக் கூழதைக் குடித்ததாலே கிள்ளி கிள்ளியே
புடுங்குதைியா
வானம் போலவே வயறூதி வலவா தைக்கு நான்போனேன்
என்றுசொன் னாளந்த வண்ணாத்தி ஏதுசொல் வானந்த
மாடவண்ணான்
வலவா தைக்குப் போனவளுக்கு வாடைச் சந்தண மணமேது
மாட வண்ணானும் கேட்டபோது மகிடம்பூ மாலை
ஏதுசொல்வாள்
நம்மள் நாச்சியார்மகள் தந்தாளையா நான்வாங்கி அணிந்து
கொண்டேன்.

## இராமரிடம் கூறுவேன் எனல்

47. அன்னிதமாய் என்னை அடியாதே அருமைகெட்டுப் போவாய்
மாடவண்ணான்
ஆக்கட்டும் செய்திநான் சொல்லுகிறேன் அயோத்தி மாநகர்
இருக்கிறார்
அரிராம ரிடத்திலே சொன்னதுண்டால் அவதா ரப்பணம்
வாங்கிடுவார்.

## வண்ணான் இராமரைப் பழித்துக் கூறுதல்

48. என்று மகிடம்பூ மாலைசொல்ல ஏதுசொல் வானந்த
மாடவண்ணான்
இராமனும் அங்கே ஒழுங்கோபெண்ணே ஆயிழையே
பெண்ணே வண்ணாத்தி
இராவுணன் கொண்டுபோன லச்சுமியை இராமனும்
கூட்டி வந்திருக்கிறான்.

## வண்ணான் சொல்லை இராமர் கேட்டல்

49. அவரையும் போலவே நானுஒன்னை ஆயிழையே பெண்ணே
விடுவேனோ
நளினம்சொல்லி வண்ணான் தானடித்தான் இராம சுவாமியும்
காதில்கேட்டார்
நகர்சோதனை பார்த்து வந்த இராம சுவாமியும் கேட்டுக்
கொண்டார்
வாரும் தம்பிவீர லச்சுமணா வண்ணான் சொன்னதைக்
கேட்டாயோ
இந்த வீட்டின் கதவதிலே ஏற்ற அடையாளம் போடும்தம்பி
அண்ண ரகுராமர் சொன்னபோது அழக னிளையோனும்
குறியுமிட்டார்
அரிகரி ராமரும் தம்பியரும் அந்தத் தெருவீதி தன்னைவிட்டு
அச்சுத ராமரும் வருகையிலே அருணோ தயமும் ஆகிடுமாம்
தந்த சுத்தி செய்வதற்கு இராம சுவாமியும் லச்சுமணனும்.

## கைகேயியின் சூட்சி

50. ஆற்றி லிருபேரும் தானேபோய் அச்சுத ராமரும் சுத்திசெய்தார்
இராம சுவாமியும் வருகுமுன்னே வாணுத லாளந்தக் கைகேசி
லச்சுமி யாளுட அரண்மனையில் நன்னுதல் கைகேசி ஓடிவந்து
என்னுட மருமகள் லச்சுமியே ஏந்திழையே அம்மாசொல்
லக்கேளாய்
ஆண்டு பதினாலு வருசம்மட்டும் அதிக வனவாசம்
போனீர்களே
எந்த வனத்திலே இருந்தீர்கள் எனக்கறி யச்சொல்லு லச்சுமியே
என்று கைகேசி கேட்டபோது ஏதுசொல் வாள்மகா லட்சுமியும்
பட்டபாடு சொல்லத் துலையாது ஒருபனை ஓலையும் பற்றாது
இப்பிறவி தன்னில் வேதியர்கள் எழுத முடியாது மாமியத்தை
ஏட்டிலே எழுதவும் முடியாது என்றுசொன் னாளந்த லச்சுமியும்
என்ன பாடுகள் பட்டாயம்மா என்றுகேட் டாளந்தக் கைகேசி
என்று கேட்டதோர் கைகேசிக்கு ஏதுசொல் வாள்மகா
லச்சுமியும்.

## சீதை மாயமான்பற்றிக் கூறுதல்

51. பதினாலு வருடம் மட்டும் பார வனத்திலே இருக்கும்போது
மாயமான் வந்து விளையாட மங்கை நானுமே கண்ணில்கண்டு
யீஸ்பர னாருட கற்பனையோ என்தலை யில்விதி வசமோ
மான்பிடிக்கச் சொன்னேன் நான்பாவி மாட்டே
னென்றுசொன்னார் உங்கள்மகன்
மன்ன னிளையோனைக் காவல்வைத்து மான்பிடிக்கப் போனார்
உங்கள்மகன்
கண்ணர் பெருமாள் சத்தம்போலே காதிலே கேட்டேனே
மாமியத்தை
காதில் கேட்டதோர் வேளையிலே மன்ன னிளையோனைப்
பார்க்கச் சொன்னேன்.

## இலக்குவன் சொன்னதை எடுத்துக்கூறுதல்

52. பார்க்கச் சொன்ன வேளையிலே பதில்வார்த்தை சொன்னாரே
இளையோனும்
அண்ணர்க் கபாயம் வராதம்மா என்று சொன்னாரே
இளையோனும்
பின்னும் என்மனம் கேளாமல் திரும்ப ஒருவார்த்தை
சொல்லிவிட்டேன்
போனவர் காணி யிருந்தவர்க்கோ புகல வார்த்தை நீர்
சொல்லவந்தீர்
இந்த வார்த்தைநான் சொன்னபோது ஏதுசொல்வார் மன்ன
னிளையோனும்
அரக்கர் மாய்கைதான் மெத்தஉண்டு அரிய நெடுமாலுட
தேவியரே
பர்ணக சாலையை விட்டுவிட்டு படிக்கு யிங்கே வரவேண்டாம்
என்று சொல்லியே இளையோனும் ஏழு கோடது தான்கீறி
கோடு கடந்துவர வேண்டாமென்று கோபாலர் தம்பியும்
தேடிப்போனார்.

## இராவணன் செயலைச் சொல்லுதல்

53. மாயவர் போனது தானறிந்து வல்லரக்கன் பாவி இராவணனும்
மாய்கையால் தேரைக் கொண்டுவந்து மாபாவி யந்த
இராவணனும்
பூமி பர்ணக சாலையிலே புதைத்து இராவணன் ஏதுசெய்தான்

பண்டாரக் கோல மாகவந்து பிச்சை கேட்டானே என்னிடத்தில்
கனியிருக் குதென்று சொன்னேன் கள்ளப் பயலந்த
இராவணனும்
கனியா கிலும்போடு மென்று கள்ளத் தனமாகக் கேட்டானம்மா
கள்ளச் சூதுகள் அறியாமல் கனியை யெடுத்துமே
கொடுக்கப்போனேன்
படியதிலே நின்று கொண்டு பண்டாரமே பிச்சை
வாங்குயென்றேன்
இங்கே கொண்டுவந்து பிச்சைபோடு என்று சொன்னானே
இராவணனும்
பர்ணக சாலை தன்னைவிட்டு படிகடந்துமே பிச்சை
போட்டேன்
போட்ட வுடனேதான் பிச்சைவாங்கி பொல்லாய் பயலந்த
இராவணனும்
எந்தன் இடதுகையி லிருக்கிறது என்ன தம்மா யென்று
கேட்டான்.

## தேரின் ஓட்டம் கூறுதல்

54. கேட்ட வுடனேதான் மாமியத்தை கிருபையுடனே சங்குயென்று
சொன்னேன்?
எசங்கு என்று சொன்னபோது யெசங்கி விட்டதே தேரதுதான்
எந்தன் யிடதுகையி லிருக்கிறது என்ன தம்மா வென்றுகேட்டான்
கேட்ட வுடனேதான் மாமியத்தே கிருபையுடன் ஓடுயென்று
சொன்னேன்
ஓடு யென்று சொன்னபோது ஓடி விட்டது தேரதுதான்.

## சிறை வைத்தது கூறல்

55. தேரா னதுஓடும் போது சடாயுவுராசன் வந்து மறிக்கலுற்றான்
மறித்த வுடனேதான் இருபேரும் வகையுடனே சண்டை
செய்தாரம்மா
சடாய்வு மன்னனை வெட்டிப்போட்டு தேரையும் என்னையும்
கொண்டுபோனான்
பூங்கா வனச்சோலை யானதிலே கொண்டு வைத்தானே
சிறைகால்.

## அனுமன் சூடாமணி கொணர்தல்

56. மான்பிடிக்கப் போன ரெகுராமர் மன்ன னிளையோனைக்
கூட்டிக் கொண்டு
பர்ணக சாலை யானதையும் பச்சமுகில் வண்ணன்
பார்க்கும்போது
என்னையும் காணாமல் மாமியத்தை ஏங்கி முகம்வாடி
ஏதுசெய்தார்
எழுபது வெள்ளம் வானரத்தை இமைக்குமுன்னே ராமர்
சேகரித்து
அனுமான் கையில்திரு வாழிகொடுத்து அனுப்பி வைத்தாரே
கோபாலர்
திருவாழி தன்னைஅனு மான்வாங்கி தென்னிலங் காபுரி
தன்னில்வந்தான்
அனுமான் கையில்சூடா மணிகொடுத்து அனுப்பி வைத்தேனே
மாமியத்தை
ஏழு கடலையும் தான்கடந்து சூடாமணி மாலை
கையில்கொடுத்தான்
மணிமா லையைத் தான்வாங்கி மாயவர் இராமர் உங்கள்மகன்.

## இராமர் சிறைமீட்டல்

57. ஏழு கடலையும தானேகடந்து இலங்கையில் வந்தாரே
மாமியத்தை
இந்திர செயித்தோடு கும்பகர்ணன் இராவண னையும்
தான்செயித்து
என்னையும் இராமர் சிறைதிருப்பி வந்து சேர்ந்தாரே
மாமியத்தை.

## கைகேயி இராவணன் உருவத்தை வினவுதல்

58. என்றுசொன் னாளந்த லச்சுமியும் ஏதுசொல் வாளந்தக்
கைகேசி
என்ன சொரூபமாய் இருப்பானம்மா இலங்கை யாளுகின்ற
இராவணனும்
என்று கைகேசி கேட்டபோது ஏதுசொல் வாளந்த லச்சுமியும்
கண்ணாலே நானும் கண்டதில்லை காதாலே நானும்
கேட்டதுண்டு

என்றுசொன் னாளந்த லச்சுமியும் ஏதுசொல் வாளந்தக்
கைகேசி
கடுங்கோப மாகவே கைகேசி கன்னி லச்சுமிக்கு
ஏதுசொல்வாள்.

## கைகேயி சீதையை அச்சுறுத்தல்

59. இன்னும் நல்லபுத்தி வரவுமில்லை ஏந்திழை யாளந்த லச்சுமிக்கு
முன்னே பதினாலு வருசமட்டும் முடுக்காய் வனத்திலே
விரட்டிவிட்டேன்
இன்னும் பதினாலு வருசமட்டும் ஏற்ற வனத்திலே
விரட்டிடுவேன்
ஏற்ற வனத்திலே விரட்டாவிட்டால் என்பேர் கைகேசி
பிராட்டியல்ல
என்று கைகேசி சொன்னபோது ஏந்திழை லச்சுமி தான்பதறி
முன்னமே அவளாலே வனம்போனோம் இன்னமும் என்ன
சொல்கிறாளோ
என்று சொல்லியே தான்பயந்து ஏதுசொல் வாள்மகா
லச்சுமியும்
வாயாலே நானும் சொல்லமாட்டேன் விரலினாலே
நான்எழுந்து கொடுத்துத் தாரேனே.

## சீதை இராவணன் உருவத்தை வரைதல்

60. படலமானதில் எழுதித் தாரேன் பார்த்துக் கொள்ளவேணும்
மாமியத்தை
என்று சொல்லிமகா லச்சுமியும் ஏந்திழை யானவள்
ஏதுசெய்தாள்
படல மானதைக் கையிலெடுத்துப் பத்துத்தலை யல்லோ
உருவெழுத
கால்கள் இருபதும் கரும்பனைபோல் கண்கள் இருபதும்
வட்டியைப்போல்
நாசிகள் இருபதும் மடையதுபோல் காதுகள் இருபதும்
சுளகதுபோல்
பத்துத் தலையது கோபுரம்போல் பாரமலை போலே
அவனுடலும்
இலங்கை இராவணன் உருவெழுதி ஏந்திழை கைகேசி
கையில்கொடுத்தாள்
படல மானதைக் கையில்வாங்கிப் பத்துத்தலை வல்லோ
உருவைக்கண்டாள்.

## கைகேயியின் ஐயம்

61. அரக்கன் உருவதைக் கண்ணில்கண்டு ஆயிழை கைகேசி
ஏதுசொல்வாள்
ஒருவனுக் குத்தலை பத்துஇருக்க உலகத்திலே நானும்
கண்டதில்லை
இப்படிப் பட்ட துரைமகன்தான் எப்படிச் சும்மா
வைத்தானம்மா
வீணாச்சிறை தன்னில் வைத்தானோ மெல்லியா கற்பு
குலையாமல்
கற்பு குலையாமல் லச்சுமியைக் கன்னியரைச் சும்மா
வைத்தானோ.

## சீதையின் துடிப்பு

62. என்று கைகேசி சொன்னபோது இளமயில் சீதையும்
பரதவித்தாள்
அம்பு பட்டதோர் மான்போலே அலறி அழுதாளே லச்சுமியாள்
பரதவித்தாள் சீதை கவலைவைத்தாள் பத்தினியாள் முகம்
வாடிவிட்டாள்
பரத விக்கிற வேளையிலே பச்ச முகில்வண்ணர் கோபாலர்

## சீதை படத்தை மறைத்து வைத்தல்

63. நகர் சோதனை பார்க்கப்போன இராம சுவாமியும்
வந்துவிட்டார்
மாயா உதாரனைக் கண்டபோது வாணுத லாளந்தச் சீதையரும்
அஞ்சி பதறியே லச்சுமியாள் ஆயிழை யானவள் ஏதுசெய்தாள்
படல மானதைக் கையிலெடுத்து பஞ்சணை மெத்தைக்குள்
கொண்டொளிந்தாள்
வெள்ளிப்பொற் பூவைத் தானெடுத்து வெண்ணை
யுண்டோனுட தேவியரும்
பன்னீர்ச் செம்பிலே தண்ணீர்கொண்டு பள்ளி கொண்டோனுட
பாதத்திலே

## இராமரின் வருத்தம்

64. பாதம் விலக்கவே லச்சுமியும் பச்சமுகில் வண்ணர்
கோபாலர்க்கு
வண்ணான் சொன்னதுய ரத்தாலே மனச்சட வாகத் தானவரும்

ஏறிட்டு இராமரும் பார்க்கவில்லை ஏந்திழை யாள்வீர
லச்சுமியை
பஞ்சணைக் கட்டி லானதிலே பச்சமுகில் வண்ணர் அரசிருக்க
அரசி ருக்கிற வேளையிலே அச்சுத ராமர் கோபாலர்க்கு
வேர்வை யானது வேர்த்திடுமாம் வெண்ணை யுண்டதெய்வப்
பெருமாளுக்கு

## இராமர் படத்தைக் காணுதல்

65. பஞ்சணை மெத்தையும் தான்பெருக்கி படல மானதில்
பட்டிடுமாம்
பள்ளிகொண் டோனுட வேர்வையது படல மானதில்
பட்டபோது
அரக்கன் இராவணன் உருவெழும்பி அச்சுத இராமரைத்
தூக்குதலோ
திடுக்கென்று இராமரும் எழுந்திருந்து திருமால் பெருமாளும்
ஏதுசெய்தார்
ஒருநாளும் துடையாத பஞ்சணைதான் இன்று துடைப்பது
ஏதெனவே
என்று சொல்லியே கோபாலர் என்பெ ருமாளும் ஏதுசெய்தார்
பஞ்சணை மெத்தையைத் தான்பெருக்கிப் பச்ச முகில்வண்ணர்
பார்க்கும்போது
படல மானதைக் கண்டெடுத்துப் பள்ளி கொண்டோனும்
ஏதுசொல்வார்
என்னுடைய பெண்ணே லச்சுமியே இந்தப் படலம் எழுதினதார்
என்று பெருமாளும் கேட்டபோது ஏதுசொல் வாளந்த
லச்சுமியும்
கேளுமைய்யா எங்கள் பெருமாளே கீர்த்தி பெற்றதொரு
வாசகத்தை

## சீதை படமெழுதிய செய்தி கூறுதல்

6. ஓம்முடை யதொரு சித்தாத்தாள் ஒண்ணுத லாளந்தக் கைகேசி
அரக்கன் உருவதைத் தான்கேட்டாள் அறியமாட் டேனென்று
நானுரைத்தேன்
அப்போது கைகேசி பிராட்டியவள் ஆயிழை யானவள்
ஏதுசொல்வாள்
முன்னே பதினாலு வருசம்மட்டும் முடுக்காய் வனத்திலே
விரட்டிவிட்டேன்

இன்னும் வனத்திலே விரட்டிடுவேன் என்று கைகேசி
சாபமிட்டாள்
அப்போது அடியாள் நான்பயந்து அரக்கன் உருவதை
எழுதிவிட்டேன்
என்றுசொன் னாளந்த லச்சுமியை ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்

## சீதையை வெறுத்தல்

67. இராவண னோடேநீ வாழ்ந்தவள்தான் நன்னுதலே
பெண்ணேஅப் பாலேபோ
மாண்டிறந்து போன இராவணனை மறுத்துப் படத்திலே
எழுதலாமோ
செத்திறந்து போன இராவணனைத் திரும்பப் படத்திலே
எழுதலாமோ
பட்டிறந்து போன இராவணனைப் படல மானதில் எழுதுவானேன்
அரக்கனைப் பார்த்த கண்ணாலே யாரைப்பார்த்
திருக்கப்போறோமென்று
அரக்கன் உருவதை எழுதிவிட்டாய் ஆயிழையே பெண்ணே
லச்சுமியே
இராவணன் ஆசையின்னும் ஒழியவில்லை நன்னுதலே
பெண்ணேஅப் பாலேபோ
அயோத்தி நாட்டுக்கு ஆகாது ஆயிழையே பெண்ணே
அப்பாலேபோ.

## சீதை நொந்து கூறுதல்

68. என்று கோபாலர் சொன்னபோது ஏங்கி அழுதாளே லச்சுமியும்
அழுதாளே அன்ன லச்சுமியாள் ஆதர வில்லாத
பேர்களைப்போல்
அம்பு பட்டதோர் மான்போலே அலறி அழுதாளே லச்சுமியாள்
குண்டு பட்டதோர் மான்போலே குமுறி அழுதாளே லச்சுமியும்
மானைப் பிரிந்த கலையதுபோல் மறுகி மறுகியே தானழுதாள்
முன்செய்த தீவினையோ முதல்செய்த பொல்லாங்கோ
பின்செய்த தீவினையோ பேத லித்துநான் வாடுகிறேன்
என்னைப் போலவே பெண்பிறந்து நாடோலம் இனி ஆனேனே
கற்பழிந் தாளென்று சொல்வதற்கோ கனியெறிந் தோனே
சம்மதமோ

இராவணன் யென்ன சொரூபமாய் இருப்பா னென்றுதான்
கேட்டாளைய்யா
அறியமாட் டேனென்று நானுரைத்தேன் அத்தகை கேசி
வசவும்சொன்னாள்
முன்னே பதினாலு வருசமட்டும் முடுக்காய் வனத்திலே
விரட்டிவிட்டேன்
இன்னும் பதினாலு வருசமட்டும் ஏற்ற வனத்திலே
விரட்டிடுவேன்
என்று சொல்லியே கைகேசி சாபமிட் டாளைய்யா ரெகுராமா
அந்தச் சொல்லுக்கு நான்பயந்து அரக்கன் உருவதை
எழுதிவிட்டேன்
அச்சுத ராமரே பொறுப்பீரென்று அடிதொழு தாளந்த
லச்சுமியாள்.

## இலக்குவன் வினா

69. லச்சுமி அழுத குரலோசை அரிநெடு மால்தம்பி அதுவறிந்து
அழக னிளையோனும் ஓடிவந்து அண்ணர் பாதத்தில்
அடிதொழுது
என்பெரு மாளே கோபாலா என்னகுற் றம்செய்தாள்
லச்சுமியாள்
என்று இளையோனும் கேட்டபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்.

## இராமர் சீதையை வெட்டச் சொல்லுதல்

70. மன்ன னிளைய பெருமாளே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளாய்
குகவேடன் வீட்டில்விருந் துண்ணும்போது தம்பி யிளையோனே
நீசிரித்தாய்
நகர் சோதனை பார்க்கப்போனோம் வண்ணான் வசையது
சொல்லிவிட்டான்
இந்தா பார்தம்பி படலெழுத்தை என்று பெருமாளும்
கையில்கொடுத்தார்
இராவண னோடே வாழ்ந்தவள்தான் நமக்கு ஆகாது
லச்சுமியாள்
அண்ட காருண்ய வனமதிலே தறித்துப் போடுவீர் லச்சுமியை
என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல்லா ரிளைய
பெருமாளும்

ஏந்திழை யாள்வீர லச்சுமியை என்னை வளர்த்ததோர்
மாதாவை
எப்படி வெட்டச்சொன் னீரைய்யா என்று இளையோனும்
சொன்னபோது
நான்போகிறேன் தம்பி வனமதிலே லச்சுமியை வைத்து
ஆண்டிருங்கோ
இளையபெரு ' மாள்பேரில் கோபமதாய் இராமர் இருக்கிற
வேளையிலே.

## கோசலை வினவுதல்

71. நன்னுதல் கோசலை தானறிந்து கொடியிடை மூவரும் ஓடிவந்து
அவரவர் அரண்மனை தன்னைவிட்டு லச்சுமி யாளுட
அரண்மனையில்
என்ன புத்திகள் நீபடித்தாய் இந்த அயோத்திக்கு அரசல்லவோ
என்னோடே சொல்லு என்மகனே என்று கோசலை
கேட்டபோது

## இராமர் படத்தைக் காட்டிக் கூறுதல்

72. கேட்கலையோ எந்தன் தாயாரே கீர்த்தி பெற்றதொரு
வாசகத்தை
குகவேடன் வீட்டிலிருந் துண்ணும்போது தம்பி இளையோனும்
சிரித்துவிட்டான்
அதுவும் மனதிலே வைத்திருந்தேன் வண்ணான் வசையது
சொல்லிவிட்டான்
வண்ணான் சொன்னதைக் கேட்டல்லவோ மனதிலே நானும்
வைத்திருந்தேன்
அழுக்கெடுக்கும் சாதி மாடவண்ணான் அவன் சொன்னது
சரியாச்சு
ஏந்திழையே அம்மா கோசலையே இந்தா பாரம்மா
படலெழுத்தை
படல மானதைத் தா்னெடுத்து ஏந்திழை கோசலை கையில்
கொ்டுத்தார்

## கைகேயியின் நடிப்பு

73. அருகே இருந்ததோர் கைகேசி அச்சுத ராமருக்கு ஏதுசொல்வாள்
இங்கேவா இங்கேவா என்மகனே என்று கைகேசி ஓடிவந்து
என்பேரி லேகுற் றமுண்டு என்மக னேஅரி கோபாலா
தாயென்றும் பாராமல் என்மகனே தறித்துப் போடுயென்னை
வனமதிலே
என்று கைகேசி சொன்னபோது என்பெரு மாளும்
ஏதுசொல்வார்
நான்போகி றேனம்மா வனமதிலே லச்சுமியை வைத்து
ஆண்டிருங்கோ
அரிநெடு மாலுட கோபங்கண்டு ஆயிழை மாதர்கள்
தான்போனார்
தாய்மார் மூபேரும் போனபின்பு தம்பி பரதாழ்வான்
சத்துருக்கன்

## இராமரை வினவிய பரதனுக்குச் செய்தி கூறுதல்

74. என்பெரு மாளுட முன்பில்வந்து ஏதுசொல் வாரந்தப்
பரதாழ்வான்
எங்கள் பெருமாளே கோபாலா என்னகுற்றம் செய்தாள்
லச்சுமியாள்
என்று பரதாழ்வான் கேட்டபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
அயோத்தி மாநகர் ஊர்வெளுக்கும் அழுக்கெடுக்கும் சாதி
மாடவண்ணான்
வண்ணான் சொன்னது பொய்யெனவே வைத்திருந் தேன்நான்
யிதுவரையும்
வண்ணான் சொன்னது சரியாச்சு வாள்மயில் சீதைநமக் காகாது
சேயிழை யாளந்தச் சீதைதன்னைச் சுருக்காய் வனத்திலே
வெட்டவேணும்

## பரதனின் இரக்கம்

75. என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தப்
பரதாழ்வான்
பொட்டகம் தன்னில் பிறந்தவிளை பூலோக நாயகி சானகியைக்
கறைக்கண்ட னாருட தங்கையரைக் கயிலாச வீட்டில்
பிறந்தவள்தான்

கற்பழிந் தாளென்று சொல்லவேண்டாம் கனியெறிந்த
தெய்வப்பெருமாளே
லச்சுமியைச் சொல்ல வேண்டாமைய்யா இராம நாதனே
புண்ணியோனே
என்று பரதாழ்வான் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
எத்தனை தான்தம்பி சொன்னாலும் என்மனது சற்றும் யேறாது
லச்சுமி தேவியை வைத்திருந்து இராச்சியத் தையர
சாண்டிருங்கோ
நான்போகி றேன்தம்பி வனமதிலே என்று பெருமாளும்
சொன்னபோது
மாயவ ராமரும் சொன்னபோது மறுத்துப் பரதாழ்வான்
சொல்லாமல்
பரதாழ் வானவர் போனபோது பச்சமுகில் வண்ணர்
ஏதுசொல்வார்
வாரும் தம்பிவீர லச்சுமணா வார்த்தை நானொன்றுசொல்
லக்கேளாய்
தண்ட காருண்ய வனமதிலே தறித்துப் போடுவீர லச்சுமியை
என்று திருமாலும் சொன்னபோது ஏதுசொல் வாரிளைய
பெருமாளும்.

## இலக்குவன் இரங்கி வேண்டுதல்

76. பொட்டகம் தன்னில் பிறந்தவளை பூலோக நாயகி சானகியை
வெட்டவும் தான்சுவாமி கைவருமோ வெண்ணை
யுண்டதெய்வப் பெருமாளே
வயத்திலே அஞ்சுமாத கெர்ப்பம் மாது சூடாமணி லச்சுமிக்கு
மங்கையரைச் சுவாமி வெட்டலாமோ என்று இளையோனும்
சொன்னபோது
என்னசொன் னாய்தம்பி லச்சுமணா என்று பெருமாளும்
கோபமதாய்
மாண்டிறந்து போன இராவணனை மறுத்துப் படத்திலே
எழுதலாமோ
செத்திறந்து போன இராவணனை திரும்பப் படத்திலே
எழுதலாமோ
முன்னாலே எந்தனிட மதிலே வனம்பார்க்கச் சீதை
கேட்டதுண்டு

தண்ட காருண்ய வனமதிலே சானகி தேவியைவெட் டிப்போடு
என்று பெருமாளும் சொன்னபோது இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்
வாருமைய்யா நந்த கோபாலா வார்த்தை நானொன்றுசொல
லக்கேளும்

## கைகேயியை வெட்டுவதாகக் கூறுதல்

77 தாயென்றும் பாராமல் கைகேசியை தறித்துப் போடுகிறேன்
வனமதிலே
உருவெழுதச் சொன்ன கைகேசியை ஒருவெட் டாக
வெட்டிவாரேன்
லச்சுமியை வெட்டவேண் டாமைய்யா என்று இளையோனும்
சொன்னபோது

## இராமனின் ஆணை

78. இளைய பெருமாளும் சொன்னபோது இராம சுவாமியும்
கோபமதாய்
இதுவரை யும்எதிர்த்துநீ சொல்லாதவன் இன்றைக்கு எதிர்த்துநீ
சொல்லுகிறாய்
மறுத்து மறுத்துநீ பேசாதே மன்ன னிளைய பெருமாளே
வனத்தில் சீதையைவெட் டாவிட்டால் வாணாளை யிப்போ
மாண்டிடுவேன்
மாண்டிறந்து நானும் போனபின்பு வாழும் அயோத்தியை
ஆண்டிருங்கோ
என்று பெருமாளும் சொன்னபோது இளைய பெருமாளும்
மனம்பதறி
உம்முடைய சுவாமி சொல்படியே உலகளந் தோனேநான்
வெட்டிவாறேன்
தண்ட காருண்ய வனமதிலே சானகி தேவியை வெட்டிவாறேன்
அண்ணர் திருப்பாதம் அடிதொழுது மந்திர வாளையும்
கையில்வாங்கி

## சீதை புலம்புதல்

79. மந்திர வாளோடு இளையோனை மகாலச் சிமிகண் டபோது
வெட்டவும் தான்விடை தந்தாரோ வீரனி ளைய பெருமாளே
சிந்தை கலங்குதே மைத்துனரே திருமால் வெட்டவிடை
தந்தாரோ

கம்பம் கடரிக ளதிர்ந்ததுபோல் கனியெறிந் தோனும்
மனதிலெண்ணி
உம்பர் பெருமாளே தம்பிரானே உமக்குஎன்ன குற்றம்செய்
தேனைய்யா
என்றுசொல்லி வீர லட்சுமியும் ஏந்திழை யாளும் தானழுதாள்
அம்பு பட்டதோர் மான்போலே அலறி அழுதாளே லட்சுமியும்
குண்டு பட்டதோர் மான்போலே குமுறி அழுதாளே
லச்சுமியாள்
மானும் கலையதுபோல் வைத்திருந்தார் இதுவரைக்கும் எங்கள்
கோபாலர்
மானை விட்டுக்கலை பிரிந்ததுபோல் மாயவ ராமரும்
பிரிந்தாரோ
தேனை விட்டுப் பிரிந்ததுபோல் தெய்வப் பெருமாளும்
பிரிந்தாரோ
மயிலும் குயிலும்போல் வைத்திருந்தார் இதுவரைக்கும் எங்கள்
கோபாலர்
மயிலை விட்டுக்குயில் பிரிந்ததுபோல் மாயவ ராமரும்
பிரிந்தாரோ
என்று சொல்லிமகா லட்சுமியாள் இளையபெரு மாளோடு
ஏதுசொல்வாள்
உங்கள் அண்ணர் சொல்படிக்கு வனத்தி லென்னையும்
வெட்டிப்போடும்

## கோசலை வழியனுப்புதல்

80. மாமி கோசலை யிடத்தில்வந்து வாணுத லாளந்தச் சீதையரும்
கோசலை யம்மனைத் தெண்டனிட்டு சீதையம் மன்முகம்
வாடிநிற்க
சீதா தேவிநிற்கும் நிலைமைகண்டு கோசலை யம்மனும்
ஏதுசொல்வாள்
பூமி யளந்தவன் தேவியரே பொற்கொடியே அம்மா பதறாதே
கறைகண்ட னாருட தங்கையரே கயிலாச வீட்டில் பிறந்தவளே
ஒருநாளும் தாயே மயங்காதே உத்தமியே வீர லட்சுமியே
கற்பு நெறியது காத்துக்கொள்ளும் கன்னியரே சீதா லச்சுமியே
சுமித்திரா தேவி மனைதனிலே சீதா தேவியும் வழியனுப்பி
பள்ளிகொண் டோன்தேவி முன்னடக்க இளைய பெருமாளும்
பின்னடக்க

## அயோத்தி மகளிர் கூற்று

81. அன்னம்போ லேசீதை வழிநடக்க அயோத்தி யிலுள்ள
பெண்களெல்லாம்
மின்னலொளிவோ தாயே விளக்கொளிவோ மேக வர்ணருட
தேவியரே
பொட்டகம் தன்னில் பிறந்தவளைப் பூலோக நாயகி சானகியைக்
கற்பு நெறியுள்ள லச்சுமியைக் கறைக்கண் டனாருட தங்கையரை
எந்தவனத் தில்வெட்டப் போறீரையா இளைய பெருமாளே
யிளங்கோவே
இளைய பெருமாளே யிளங்கோவே எங்களிடம் விட்டுப்போ
வும்மையா
இந்த அயோத்தியில் வைத்திருப்போம் என்றுசொல்லிப்
பெண்கள் தானழுதார்

## தீ நிமித்தங்கள்

82 ஒருவர் முகத்தையும் பாராமல் உலகளந்தோன் தம்பி
வழிநடந்தார்
அயோத்தி யாபுரி தெருகடந்து கோட்டை வாசலும் தான்கடந்து
கோபாலர் தேவியும் இளையோனும் அதிக வனம்நோக்கி
வருகையிலே
காக மானது வலம்போக காட்டு நரியது குறுக்கிடுமாம்
கெருடன் வந்து வட்டமிட கோபாலர் தேவியும்கண் ணில்கண்டு
அப்போது வீர லச்சுமியும் அழகனி ளையோனிடம்
ஏதுசொல்வாள்
வாரும்பிள் ளாய்தம்பி லச்சுமணா வழிநடக் கவும்கூடு தில்லை
கண்ட சகுனங்கள் பொல்லாதது இன்று அயோத்தியில்
இருந்துபோவோம்
நாளை வனத்திலே வெட்டுமென்று நன்னுதல் சீதையும்
சொன்னபோது
அப்போது மன்னன் இளையோனும் அன்ன லச்சுமிக்கு
ஏதுசொல்வார்
இன்று அயோத்தியில் தானிருந்தால் என்பெருமாள் தாயே
கோபம்கொள்வார்
உலகளந் தோனுட தேவியரே உத்தமியே தாயே மயங்காதே
திரும்பி அயோத்தியில்போ னோமானால் தெய்வப்
பெருமாளுக்கு ஏறாது
என்று இளையோனும் சொன்னபோது ஏந்திழை லச்சுமி
பரிதவித்தாள்.

## வழிநடை வருத்தம்

83. வடுப்படா ததோர்மேனி யெல்லாம் வரிசையுடன் கானல்
பட்டிடுமாம்
வெய்யில் படாததோர் மேனியெல்லாம் வேர்வை யானது
சிந்திடுமாம்
சரீர மெல்லாம் விடுகுதையோ தரையில் காலது நோகுதையோ
என்றுசொல்லி வீர லச்சுமியாள் ஏந்திழை யாளம்மன்
பரிதவித்தாள்
பரிதவித்து மகா லச்சுமியும் பாவினை யாகவே ஏதுசொல்வாள்
தண்ட காருண்ய வனமதுதான் எங்கே யிருக்குது லச்சுமணா
தாகமாய் வருகுதே லச்சுமணா தறித்துப் போடுஇந்த வனமதிலே
உலகளந் ததொருகோ பாலர்க்கு உதவாத பாவி ஆனேனே
அங்கமெல்லாம் நடந்து நோகுதப்பா ஆவி குறையுதே
லச்சுமணா
மேலும் வலிக்குதே இளையோனே மெய்சோர்ந்து வருகுதே
எந்தனக்கு
யாருமில்லா யிந்தக் கானகத்தில்அரும்பாவி யானேனே
லச்சுமணா
அன்னலச்சு மணாதம்பிவெட் டிப்போடும் யாருமில்லாயிந்தக்
கானகத்தில்
என்று சொன்னாள்மகா லட்சுமியாள் இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்
தண்ட காருண்ய வனமதுதான் அதோதெரி யுதுலச் சுமியே
என்று இளையோனும் சொன்னபோது இளமயில் சீதையும்
வழிநடந்தாள்

## விதியை எண்ணி வழிநடத்தல்

84. வாவிகள் சோலைகள் தன்னைவிட்டு குகவேட னுடஆறும்
விட்டு
கோபாலர் தேவியும் மனங்கலங்கி கொடியிடைச் சீதையும்
பரிதவித்தாள்
நான்இந்தப் பாடு படுவதற்கோ நல்ல மிதிலையில்
நான்பிறந்தேன்
வில்வளைத்து ராமர் மாலையிட்டு வீரன் இளைய பெருமாளே
மாலையிட்டு என்னை மணம்புணர்ந்து மாய னரிகரி கோபாலர்
என்னைப் போலவே பெண்பிறந்து இருக்கலையோ யிந்தப் பூமி
தன்னில்

நானொ ருத்திபெண் பிறந்து இந்த நாடோலம் ஆனேனே
என்று புலம்பியே லச்சுமியும் ஏந்திழை சீதையும் அழுதிருக்க
தள்ளா டித்தள் ளாடி சானகி தேவியும் வழிநடந்தாள்
குண்டு மலையோடு குமடுமலை கூட்டுக் கொம்புமலை
தான்கடந்தாள்
நாடு பலபல தேசம்விட்டு நாக மலைகளும் தான்கடந்து
புல்லாறு புன்லாறும் விட்டு விரிச்சடை மாமுனி வனங்கடந்து
தண்ட காருண்ய வனமதிலே தானே வந்தாரே இருபேரும்

## ஆலின்கீழ் அமர்தல்

85. திருவட ஆல மரமதிலே செங்கை நெடுமாலுட தம்பியரும்
தேன்மொழி யாள்வீர லச்சுமியாள் தகையா றிருக்க
வேணுமென்றாள்
இருபேரும் ஆல மரமதிலே இருக்கிற தொருவே ளையிலே
மன்ன னிளையவன் மடிதனிலே மங்கைலச் சுமியும்தலை
யைவைத்தாள்
வழிநடந் ததோர்சட வதினால் நித்திரை யில்லாத லச்சுமிக்கு
அச்சுத ராமருட கிருபையினால் வாள்மயில் சீதை முகந்தனிலே
மங்கைநித் திராதேவி தானுறைந்தாள் மாய வனாருட
தேவியர்க்கு
நீலநெடு மாலுட தேவியரும் வாள்மயில் சீதையும்
உறங்கிவிட்டாள்
அண்ணர் திருத்தேவி உறங்கக்கண்டு அழகனி ளையோனும்
மனதிலெண்ணி
அண்ணருக்குத் துரோகம் செய்யலாமோ அன்ன லச்சுமியை
வெட்டலாமோ
எண்ணாமல் எண்ணி இளையோனும் இருந்து நினைத்தாரே
கானகத்தில்
லச்சுமி தேவியுடன் கற்புநெறி நாமள் அறியவே வேணுமென்று
கற்பழிந்தா ளென்றுராமர் சொல்வதையும் அறிந்து போகவே
வேணுமென்று
கற்பு நெறியது அழிந்ததுண்டால் கரடி புலியது கொன்றுபோடும்
என்று சொல்லியே இளையோனும் ஏதுசெய் தாரே வனமதிலே

## சீதையை விட்டு விலகல்

86. துடைக்குச் சரியாக மணல்குவித்து தோகை மயிலாளை
அதில்கிடத்தி
ஆடாமல் சற்றும் அசையாமல் அன்ன லச்சுமியை அதில்கிடத்தி
அழக னிளையோனும் தானெழுந்து அண்ணர் கற்புநிலை
அறிவதற்கு
இருந்த இடம்விட்டுத் தூரெழுந்து ஒருஆல மரத்திலே
ஒளிந்திருந்தார்

## இயற்கைத்துணை

87. வனத்திலே பள்ளிகொண்ட சீதையரும் மங்கை லச்சுமியும்
தானுறங்க
ஆதி சிவனுட அருளாலே அந்த வனத்தில்வாழ் மிரு கம்வந்து
பஞ்சவர்ணக் கிளிதானே வந்து பைங்கொடி சீதைக்கு வாய்பேச
மேகங்கள் வந்து குடையிடவே வெண்ணை யுண்டோனுட
தேவியர்க்கு
அன்னங்களும் சிறுதா ராவும் அன்ன லட்சுமியைச் சூழ்ந்துநிற்க
மயிலும் குயிலும் வந்திருந்து மாயவர் தேவிக்குக் குரவைபாட
காட்டானை யோடு கரடிபன்றி கடுவாய்ப் புலிவந்து காத்திருக்க
கந்தம்கஸ் தூரிபிள்ளை வந்து கஸ்தூரி யதுசித றிடுமாம்
ஆகாச மரம்பூச் சொரியும் பூமா தேவிவந்து காத்திருக்க
வனத்தில் வாழ்கிற மிருகமெல்லாம் மாயவர் தேவியைக்
காத்திருக்க
பட்டமர மெல்லாம் தான்தழைத்து பள்ளிகொண்டோன்
தேவிக்கு யிணலிடவே
பூவாத தொருமரங் களெல்லாம் பூத்துமே சீதைக்குப் பூச்சொரிய
காயாத தொருமரங் களெல்லாம் காய்த்துமே சீதைக்குக்
கனிஉதிர
தேனருந் துமேமழை சொரிய தெய்வப் பெருமாளுட
தேவியர்க்கு
நாகம் வந்துகுடைப் பிடிக்க நல்ல பாம்புகள் தாலாட்ட
கூவை வந்து குரவையிட குள்ளநரி வந்து தாலாட்ட
வனத்தில் பள்ளிகொண்ட சீதையரும் மங்கை லச்சுமியும்
தான்முழித்தாள்

## இலக்குவனைக் காணாது வருந்துதல்

88. தலைமாட் டில்தா னிருந்த தம்பி யிளையோனைக் காணாமல்
திசைகள் நாலையும் தான்பார்த்துத் தீரனிளை யோனைக் காணாமல்
வாடி நல்லமணம் சடைத்தாள் மாயவர் தம்பியைக் காணாமல்
என்னைக் கூட்டிவந்து தனியேவிட்டு அண்ணரிடம் போய்ச் சேர்ந்தாரோ
சேர்ந்தா ரோசே ரலையோ தெய்வப் பெருமாளே உன்சரணம்
என்று சொல்லியே லச்சுமியும் இளமயில் சீதையும் பரிதவித்தாள்
பரிதவிக் கிறவே ளையிலே பள்ளிகொண் டோன்தம்பி தான்பார்த்து

## இலக்குவன் அயோத்தியை அடைதல்

89. கவலை யானது பெரிதாகிக் கார்வண்ணர் தம்பி யிளையோனும்
கற்பு நெறியது வழுகவில்லை கன்னி சூடாமணி லச்சுமிக்கு
என்று சொல்லியே இளையோனும் இன்ப முடனவர் வழிநடந்தார்
தண்ட காருண்ய வனங்கடந்து மிருகவுரு வனம்தன் னில்வந்து
மான்பிடித் தவர்செவி யறுத்து மந்திர வாளிலேரெத் தம்கொண்டு
அண்ணர்க் கடையாளம் தான்கொடுக்க அன்ன லச்சுமணர் வழிநடந்தார்
வனங்க ளென்றதோர் வனங்கடந்து வாவிகள் சோலைகள்தா னும்விட்டு
முக்கோ ணமாக வளர்ந்தமலை முடிஉயர்ந்த மலைதன் னைவிட்டு
அயோத்தி யாபுரி தெருவதிலே அழகனி ளையோனும் வாரபோது
அழகனி ளையோனும் வாரபோது அயோத்தி யிலுள்ள பெண்களெல்லாம்
வெட்டினாரோ வனத்தில் விட்டாரோ என்றுசொல்லிப் பெண்கள் தானழுதார்
அழுகிற போது ஆனதிலே அழக னிளையோனும் வழிநடந்தார்

## இராமரைக் காணுதல்

90. ஒருவர் முகத்தையும் பாராமல் உலகளந் தோனுட முன்பதிலே
அழகுற பணசிங்கா சனமதிலே அரிநெடு மாலுடமுன்
பில்வந்தார்
மந்திர வாளையும் உறைஉருவி மன்ன னிளைய பெருமாளும்
மந்திர வாளையும்முன் பில்வைத்து மன்னனி ளையோனும்
அடிதொழுதார்.

## இராமர் கூற்று

91. மந்திர வாளையும் கண்டபோது மயங்கி விழுந்தாரே கோபாலர்
விழுந்தாரே சிங்கா சனமதிலே வெண்ணை' யுண்டதெய்வப்
பெருமாளும்
வெட்டிப் போட்டாயோ யிளையோனே மெய்சோர்ந்து வருகுதே
எந்தனுக்கு
சண்டாளப் பாதகா லச்சுமணா தானே மோசங்கள்
செய்தாயோடா
கொண்டவன் தான்சினந் தாக்கால் கொழுந் தனவன்அண
வில்லையோடா
மன்னவன் தான்சினந் தாக்கால் மாமியார் கள்அண
வில்லையோடா
மயங்கித் தயங்கியே ரெகுராமர் வைகுண்ட மூர்த்தியும்
தானழுதார்.

## சீதையை எண்ணி வருந்துதல்

92. அங்கம் பறக்குதே லச்சுமியே ஆத்துமம் சோருதே யெந்தனக்கு
கும்பி கொதிக்குதே லச்சுமியே கோவென் றழுதாரே கோபாலர்
அன்றிலும் பேடை போலிருந்தோம் அன்ன லச்சுமியை
நானிழந்தேன்
மாண்டிறந்து சீதை போனாளோ வனத்தி லென்னை
நினைத்தாளோ
அம்பு பட்டதோர் மான்போலே அலறி அழுதாரே கோபாலர்
குண்டு பட்டதோர் மான்போலே குமுறி அழுதாரே கோபாலர்
உருண்டைப் பட்டமான் போலே உள்ளுடைந்து ராமர் தள்ளாடி
வெட்டவும் தான்தம்பி சொன்னேனே மெல்லிநல் லாள்வீர
லச்சுமியை

இன்று கண்டதோர் கண்ணாலே என்றைக்குச் சீதையைக்கா
ணப்போறேன்
வெட்டிப் போட்டாயோ வனமதிலே மெல்லிநல் லாள்வீர
லச்சுமியை
லச்சுமியைக் கண்ட கண்ணாலே யாரை நானினி
காணப்போறேன்
உள்ளபடி சொல்லு லச்சுமணா ஒளியாம லெந்தனி டமதிலே
என்று பெருமாளும் கேட்டபோது இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்

## இலக்குவன் கூற்று

93. கள்ளச் கரச்சலோ ரெகுராமா கதறிஅழு தாலும்
சீதைவருவாளோ
செத்திறந்து போன லச்சுமியாள் திரும்பி யினிமேலும்
வருவாளோ
பட்டிறந்து போன லச்சுமியாள் பஞ்சணை மெத்தையில்
வருவாளோ
மாண்டிறந்து போன லச்சுமியாள் மறுத்து இனிமேலும்
வருவாளோ
மருகிமருகி நின்று அழுதாலும் மன்னன் சனகரன்மகள்
வருவாளோ

## தாய்மார் தேற்றுதல்

94. கோபாலரா மர்அழுதசத் தம்கேட்டு கொடியிடை மாதர்கள்
ஓடிவந்து
கோசலை யாளோடே சுமித்திரையும் கொன்றழு தார்சிங்கா
சனமதிலே
சிங்கா சனத்திலே அழுதிருக்கும் தெய்வப் பெருமாளுக்
கேதுசொல்வார்
என்மகனே அப்பா கோபாலா ஏழைப் பங்காளா ரெகுபதியே
நான்சொன் னதைக்கேட் கவில்லை என்மகனே எந்தன்
கண்மணியே
லச்சுமியை வெட்டவேண் டாமென்று இராம நாதனேசொன்
னேனைய்யா
ஒன்னுடைய ராமர் சொல்படியே தம்பி யிளையோனும்
வெட்டிவந்தான்

மெட்டுதற்குத் தான்மாட் டோமென்றால் வாணாளையிப்போ
மாய்ப்பே னென்றாய்
வெட்டவும்தான் நீசொல்லிப் போட்டு விரும்பி அழுகிறாய்
என்மகனே
பதற வேண்டாம் யென்மகனே பச்சமுகில் வண்ணா, கோபாலா
இளைய பெருமாளும் மந்திரிமார் யென்பெரு மாளை
மனந்தேற்றி
அயோத்தி யாபுரி யானதிலே அழகுற பணசிங்கா சனமதிலே
வாடி மனமதுதான் சடைத்து மாயவ ராமரும் அரசிருந்தார்.

## தண்டகாருண்ய வனத்தில் சீதை

95. வனமதி லேதா னிருந்த மங்கை யவள்வீர லச்சுமிதான்
பதறி யவள்தா னழுதாள் பள்ளிகொண் டோனுட தேவியரும்
இருண்ட வனத்திலே தானிருக்க யீஸ்பர னாருட கற்பனையோ
ஈஸ்பரனே மகதேவா என்றழுதாள் வீர லச்சுமியாள்
இனத்தோடே அவ ரிருக்க இருண்ட வனத்திலே நானிருக்க
இதுவும் யென்தலை விதிவசமோ யீஸ்பர னாருட கட்டளையோ
வனமதி லேநா னிருக்க மாய வனார்அங் கிருக்க
தனித்தடி யாள் யிங்கிருக்கத் த்ரணியளந் தோனுக் கேறாது
அரனார்க் கும்ஏற் றிடுமோ என்று அழுதாளே லச்சுமியும்
நானிறந் தாலும் குற்றமில்லை சுவாமி தம்பியைக் காணவில்லை
பொன்பணங் களர்ன தெல்லாம் போனாலும் குற்ற மில்லை
சுவாமி யுடதம் பியவர் சேர வேணுமே அயோத்தியில்
அரிராமர் தேவியும் அழுதபோது அந்த வனவாசம் தனிலிருந்து
மாமுனி பூசை முடிப்பதற்கு பூக்கூடை யானது கையிலெடுத்து
வால்மீகர் மண்டபம் தன்னைவிட்டு அடுத்த வனமும்
தான்கடந்து

## வால்மீகியின் சேவகர்கள

96. தண்ட காருண்ய வனமதிலே தானே மலரெ டுப்பதற்குக்
காலா ளும்சே வுகரும் தானே வருகிற வேளையிலே
லச்சுமி அழுகிற குரலோசை காதில் கேட்டாரே சேவுகரும்
காவலர்களும் காதில் கேட்டு கான வனத்திலே ஏதுசொல்வார்
வாரும் பிளளாய்த் தம்பியரே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்.

இந்த வனவாச மானதிலே எப்போதும் நாமள் பூவெடுத்தோம்
இதுவரைக் கும்அழு கைக்குரல் இந்த வனத்திலே கண்டதில்லை
இந்த வனவாச மானதிலே ஒற்றைக் குரலோசை கேட்குதையா
தெய்வங் களோ தேவதையோ தெய்வ நல்ல ரம்பைகளோ
காட்டு நல்ல இசக்கிகளோ கன்னி களோநா மறியோம்
மலைவே ட்ன்பிள் ளைகளோ மலைமிரு கமகொடு போச்சோ
காசி பணத்துக்கு ஆசைப்பட்டு கள்ளர்கள் வெட்டிப் பறித்தாரோ
மாசம் பத்தும் சென்றவர்க்கு வனத்தில் பேர்காலம் ஆகிறதோ
நாம ளிங்கே நின்றாலும் நம்மையும் வந்து கொல்வானென்று
காவ லர்களும் அப்போது கான வனம்விட்டு ஓடலுற்றார்
தண்ட காருண்ய வனமுவிட்டு அடுத்த வனவாசம் தன்னைவிட்டு.

## சேவகர்கள் வால்மீகியிடம் கூறுதல்

97. வால்மீகர் மண்டபம் தன்னில்வந்து மாமுனி யைஅடி
தொழுதார்
அடிதொ ழுகிற வேளையிலே அருள்முனி யவர்ஏது சொல்வார்
வாரும்பிள் ளாய்எந்தன் சீடர்களே வந்த வரலாறு
சொல்லுமென்றார்
மாமுனி யவர் கேட்டபோது காவ லர்களும் ஏதுசொல்வார்
பூசை யதுமுடிப் பதற்கு பூவெடுக்கவே நாங்கள் போனோம்
பூவெடுக்கப் போன யிடமதிலே பெண்குர லோசை
கேட்குதையா
ஒற்ற குரலோசை கேட்டதினால் ஓடிவந்தோம் சுவாமி
உங்களிடம்.

## வால்மீகி சீதையைக் காணுதல்

98. என்றவர் சொல்லைக் கேட்டபோது ஏதுசொல் வாரந்த
வால்மீகியும்
அஞ்ச வேண்டாம் பதறவேண்டாம் அறிந்து வரவே ணுமென்று
காசி வேட்டியைக் கொய்துடுத்தார் கழுத்தில் உத்திராட்ச
மாலையிட்டார்
காலிலே பாதக் குறடுமிட்டு கையிலே பொன்னின்
பிரம்பெடுத்தார்
மண்டப மானது தன்னைவிட்டு மாமுனி யானவர் வழிநடந்தார்
வனங்க ளென்றதோர் வனங்கடந்து வாவிகள் சோலைகள்தா
னும்விட்டு

தண்ட காருண்ய வனமதிலே தானே வந்தாரே வால்மீகியும்
கோடிச் சூரியப்பிர காசம்போல் மங்கைலச் சுமியைக்கண்
ணில்கண்டார்
கண்ட பொழுதிலே மாமுனியும் கடுக மாமுனி ஏதுசொல்வார்
எந்த ஊரம்மாஎந் தத்தேசம் எங்கிருந்து நீயிங்கு வந்தாய்
வந்த வகையென் னுடனே வகையாகச் சொல்ல வேணும்

## சீதை தன் வரலாறு கூறுதல்

99. என்று மாமுனி கேட்டபோது ஏதுசொல்வாள் மகாலச் சுமியும்
பொட்டகத் தோடே பிறந்தவர்கள் பூலோக நாயகி சானகிதான்
வாழும் மிதிலா புரிதனிலே வாய்த்த சனகரன் திருமகள்தான்
அயோத்தி யாபுரி நகர்தனிலே வாழும் தசரதர் மருமகள்தான்
கோசலை கைகேசி சுமித்திரைதான் எந்தனக்கு நல்ல
மாமியார்தான்
கோசலை யம்மன் திருமகன்தான் கோபாலர் யென்னை
மாலையிட்டார்
வில்வளைத்து ராமர் மாலையிட்டு அயோத்திநாட் டுக்குத்தா
னேவந்தார்
அயோத்திநாட் டுக்குத்தா னேவந்து அரசிருந் தோம்சில நாளாக
கூனி விட்டதோர் சாபத்தாலே குறுக்கே வந்தாளையா கைகேசி
பரதன் சத்துருக்கன் இருபேருக்கும் பட்டம்கட் டச்சொன்னாள்
கைகேசி
பட்டாபி சேகம் தான்சூட்டி பாராளு மந்தக் கோபாலர்
பதினாலு வருச மட்டும் பாரவனத் திலேநாங்கள் போனோம்
வனத்திலே நாங்க ளிருக்கையிலே வந்துதையா மாய
மானதுதான்
ஈஸ்பர னாருட கற்பனையோ என்தலை யின்விதி வசமோ
மான்விளை யாட்டைக் கண்டல்லவோ மான்பிடிக்கச்
சொன்னேன் மாயவரை
மான் பிடிக்கச் சொன்னபோது மாயவ ராமரும்
மாட்டோமென்றார்
மாட்டே னென்றுராமர் சொன்னபோது மாறி ஒருவார்த்தை
சொல்லிவிட்டேன்
மறுத்து ஒருவார்த்தை சொன்னபோது மாயவ ராமரும்
கோபமதாய்
மான் பிடித்துநான் வருமளவும் மன்ன னிளையோனே
காத்திருப்பாய்

காத்திரென்று ராமர் போனபோது கனமான சத்தம்
கேட்டதையா
மான்பிடிக்கப் போன ராமருக்கு வனத்தில் அவகேடு
வந்ததென்று
காத்திருந் ததோர்யிளை யோனை அண்ணர் பிறகாலே
அனுப்பிவைத்தேன்
மன்ன னிளையோனும் போனபோது மாய்கையாய் வந்தானே
இராவணனும்
வல்லரக் கனென்ற இராவணனும் வனத்தில் வந்தென்னைச்
சிறையெடுத்தான்
பத்துத் தலைமன்னன் கொண்டுபோக பாரளந்தோன் அவனைச்
சங்கரித்தார்
என்னையும் இராமர் சிறைதிருப்பி இருந்ததர சாண்டோம்
அயோத்தியில்
வண்ணான் வசையாகச் சொன்னானென்று மாயவர்
வனத்திலேவெட்டச்சொன்னார்
வெட்டக் கூட்டிவந்த லச்சுமணர் விட்டோடிப் போனார்
மாமுனியே

## முனிவர் தேற்றுதல்

100. என்று சொன்னாள்மகா லச்சுமியும் ஏதுசொல் வாரந்த
வால்மீகரும்
ஒன்றுக்கும் அஞ்சாதே லச்சுமியே உத்தமியே தாயே மயங்காதே
சானகியே நான்உன் தகப்பனம்மா நீயெனக்கு நல்ல
மகளல்லவோ
உன்வயற்றில் பிறக்கும் பிள்ளை உலகளந் தோனையும்
வென்றுகொள்ளும்
ஒருஇடந் தன்னிலே சேர்த்துவைக்கும் உத்தமியே வீர லச்சுமியே
ஒன்றுக்கும் அஞ்சாதே லச்சுமியே உலகளந் தோனுட லச்சுமியே
வாயார வாழ்த்தினார் வால்மிகரும் சானகியாள் வீர லச்சுமிக்கு
என்மகளே வீர லச்சுமியே எழுந்திரு அம்மா என்மனைக்கு

## இருப்பிடம் அமைத்துத்தரல்

101. என்று சொன்னாரே வால்மீகரும் ஏதுசொல் வாள்மகா
லச்சுமியும்
இருந்தா லும்இந் தயிடம் இறந்து போனாலும் யிந்தயிடம்

வெட்ட வந்த வனமதிலே எனக்கு வீடுகட்டித் தாருமையா
என்று சொல்லிச் சீதைசொல்ல யாது ரைத்தார் மாமுனியும்
மணிமண்டபம் தானே கட்டி மாமுனி யானவர்தான்
கொடுத்தார்
மாமுனி மண்டப மானதிலே வாணுதல் சீதைக்கே வல்செய்ய
அந்தரக் கன்னிமாரை வரவழைத்து மங்கை லச்சுமிக்கே
வல்செய்தார்

## கர்ப்ப வளர்ச்சி

102. பூரண கர்ப்பம் திருவயிற்றில் பொற்கொடியாள் வீர லச்சுமிக்கு
ஒன்றாகி மாதம் ரெண்டாகி உயர்மூன் றாகிமாதம் நாலாகி
அஞ்சான மாதத்திலே அரைவயறு சூலானாள்
ஆறான மாதத்திலே அயலறிந்தா ரெல்லோரும்
ஏழான மாதத்திலே எழுந்திருக்கக் கூடுதில்லை.
எட்டான மாதத்திலே திட்டுமுட்டாய் வந்திடுமாம்
மோதிரங்கள் பூண்டிருந்த மொளிக ளெல்லாம்
நோகுதென்பாள்
பாடகங் கள்பூண் டிருந்த பாடங்க ளெல்லாம் நோகுதென்பாள்
கட்டு முட்டாய் வருகுதென்பாள் காலு மண்ணைப்
பிரட்டுதென்பாள்
சித்தாடை கொய்துடுக்கும் சிறுவயறு நோகுதென்பாள்
சுக்கானும் பாய்மரம்போல் சுருக்குதையா என்னுடம்பை
கயிறற்ற பம்பரம்போல் கட்டு முட்டாய் வருகுதென்பாள்
ஒன்பது பத்து மாதத்திலே உடையவனை மனதிலெண்ணி
பத்தான மாதத்திலே பாலகனைப் பெறுவதற்கு
ஆலின் யிலைபோலே என் அடிவயிறு நோகுதென்பாள்
வாருமையா மாமுனியே மாதம் பத்தும் சரியாச்சே
வாரும்மையா மாமுனியே மருத்துவத்தை அழைத்துவாரும்

## மருத்துவரை யழைத்தல்

103. என்று சீதை சொன்னவுடன் ஏதுசொல் வார் மாமுனியும்
எந்த எந்த மருத்துவத்தை இனியழைக்க வேணும் அம்மா
என்று மாமுனி சொன்னவுடன் ஏது சொல்வாள் லச்சுமியும்
என்மதனி பத்திர காளி இருக்கிறார்கள் நந்த வனமதிலே
அவளையிங்குக் கூட்டி வாரும் அருமையுள்ள மாமுனியே
அப்போது மாமுனிவர் அவசரமாய் ஓடிவந்து

பத்திர காளி யிடமதிலே பார்முனி யவர்ஏது சொல்வார்
அம்மா அம்மா பத்திரகாளி அன்னலச் சுமியாளுனை
யழைத்தாள்
அவர் தனக்கு மருத்துவமாய் அழைத்துவரச் சொன்னார் காண்

## காளி மருத்துவராகி வரல்

104. மாமுனிவர் சொன்னபோது மாயன்தங் கைபத் திரகாளி
அண்ணனுட தேவி லச்சுமியாள் அவதிப் படுகிறா
ளென்றவுடன்
பத்திர காளிஎழுந் திருந்து பார்முனி முன்னால் வழிநடந்தாள்
காடுசெடி வனம்தான் கடந்து கான வனங்களும் சோலைவிட்டு
எம்பெருமாள் தேவி படுத்திருக்கும் ஏற்றமண் டபத்தில்
தானேவந்தாள்
மணிமண் டபம்தன்னில் வந்து வாணுதல்பத் திரகாளி
சொல்வாள்
பொன்மகளே தாயே பூமகளே பூலோக நாயகி சானகியே
கற்புநெறி யுள்ள லச்சுமியே கார்வண்ண ராமருட தேவியரே
ஒன்றுக்கும் அஞ்சாதே லச்சுமியே உலகளந்தோ
னுனக்குத்துணையுமுண்டு
பதறாதே பதறாதே லச்சுமியே பாலகனைத் தாயே
பெற்றெடுப்பாய்
என்று பத்திர காளிசொல்ல ஏந்திழை யாள்வீர லச்சுமியும்

## கர்ப்ப வேதனை

105. ரகுராம மூர்த்தியுட தேவியவள் இளமயில் சீதையும்
பரிதவித்தாள்
கால்கள் கடுக்குதே மருத்துவமே கைசோர்ந்து வருகுதே
எந்தனுக்கு
வாளைத் தடைபோலே சித்திர வர்ணத்துடை கள்ரெண்டும்
கட்டுமுட்டாய் எனக்கு வருகுதம்மா கைதரு வார்ஒரு வரில்லை
சாவேனோ பிழைப்பேனோ சங்கை யுள்ள மருத்துவமே
என்று சொல்லியே லச்சுமியும் இளமயில் சீதையும்
பரிதவித்தாள்
அப்போது பத்திர காளியம்மன் ஆதர வாகவே ஏதுசொல்வாள்
ஆண்பிள்ளை யானது பெற்றெடுப்பாய் ஆயிழயையாள் வீர
லச்சுமியே

தலைப்பிள்ளை நோவதினால் தாயே லச்சுமியே அம்மா
பதறாதே
என்று பத்திர காளிசொல்ல இளமயில் சீதையும்
அபயமிட்டாள்
ஆகோ வென்று அழுவாள் மெல்ல அலறிக் கதறிடுவாள்
ஓகோ மருத்துவமே உனக்கே அபய மென்பாள்
பொன்போல் முகம்வேர்ப்பாள் புழுதிமேல் புரண்டிடுவாள்
என்னைப் போலவே பெண்பிறந்து இருக்கலை யோஇந்தப்
பூமிதன்னில்
நானொருத்தி பெண்பிறந்து இந்த நாட்டில் அவதிப் படுகிறேனே
வடிவுள்ள அத்தைமாரே உங்களுக்கு அபயம் அம்மா
என்று சொல்லிச் சீதையரும் இளமயில் போலே விழுவாள்
அருளுடைய கானத்தில் ஆனதொரு கர்ப்பம் அம்மா
என்று சொல்லிச் சீதையரும் ஏந்திழை யாளம்மன்
பரிதவித்தாள்.

## பாலன் பிறத்தல்

106. பரிதவிக்கிற வேளையிலே பள்ளி கொண்டோனுட
திருவருளால்
அழகு பாலன்வந்து தான்பிறந்தான் அச்சுத ராமர் திருவருளால்
பாலன் பிறந்துநிலத் தில்விழவே பைங்கொடிச் சீதையும்
மயங்கிவிட்டாள்
கூசாமல் சேலை கட்டியிறுக்கி கும்பி கடிக்குமருந்து கொடுத்தாள்
பிள்ளை காலசைக்கக் கையசைக்கக் கண் சிமிட்டி வாய்திறக்க
அப்போது பத்திர காளியம்மன் ஆயிழையும் ஏதுசெய்தாள்
கொப்பி ழறுத்துக் குரவையுமிட்டு கோல மயிலாள் பாலகர்க்கு
கோல கொங்கைப் பால்சுரநது கூவென்று பிள்ளை
அழுதிடுமாம்.
கோதை பத்திர காளிபார்த்து கோபாலர் பாலனைக்
கிடத்திவைத்தாள்

## பெயரிடுதல்

107. மயக்கம் தெளிந்துமே லச்சுமியாள் மாயவர் பாலனைக்
கையிலெடுத்து
அமுதூட்டிச் சீதை தாலாட்டி அன்ன சூடாமணி ஏதுசொல்வாள்
ஆராருட பேரிடுவோம் அச்சுத ராமருட பாலவர்க்கு

ஈஸ்பர னாருட பேரிடவோ இந்திர னாருட பேரிடவோ
தேவேந்திரன் பேரிடவோ தெய்வ கன்னியர்கள் பேரிடவோ
தேவாதிகள் பேரிடவோ பரமசிவன் பேரிடவோ
இராமருட பேரிடவோ லச்சுமணர் பேரிடவோ
தசரதனார் பேரிடவோ தெய்வப் பெருமாளுட பாலவர்க்கு
சனக ராசன் பேரிடவோ திருமாளுட பேரிடவோ
விக்கின மீஸ்பரன் பேரிடவோ வடிவே லவருட பேரிடுவோ
ஆராருட பேரிடுவோம் அழகுள் ளதொரு பாலர்க்கு
கோபா லர்க்குப் பிறந்தமகன் குசலவ னென்று பேருமிட்டார்

## தொட்டிலிடுதல்

108. பேருமிட்டுப் பெண்கள் குரவையிட்டு பெண்கொடி மாதர்கள் த்தானிருந்தார்
அப்போது அந்த மாமுனியும் அருள்முனி யவர்ஏது செய்தார்
சீதை பாலகர் பள்ளிகொள்ள சிறந்த தொட்டிலொன்று தான்சமைத்தார்
தங்கத் தொட்டிலொன்று தான்சமைத்து சானகி சீதை கையில்கொடுத்தார்
தங்கத்தொட்டி லைச்சீதை கையில்வாங்கி சுவாமி பாலகரைத் தான்கிடத்தி
பாலகரைத் தான்கிடத்தி பள்ளிகொண் டோன்தேவி தாலாட்ட
ராரிராரி ராராரோ அரும்பொருளே ராரிராரோ.

## தாலாட்டுதல்

109. ஈனாத வாழையது இளவாழைக் கண்ணோ தான்
ஆகாசக் கன்னியர்கள் அவரவர்கள் வந்து பார்த்தாரோ
அயோத்தியில் நீ பிறந்தால் அத்தைமார் மூபேரும் வந்துநிற்பார்
பூரணமாய் வால்மீகர்தான் புண்ணியத்தால் நானிருந்தேன்
கருவுருவாய் தரித்த நாள்முதலாய் உங்களையா ரெகுராமர் என்னைமறந்தாரோ
வாழைக் குருத்தோநீ வருக்கைப் பிலாச் சுளையோனீ
தென்னமரக் கனியோனீ தெய்வச் சூடா மணியோனீ
பாலளக்கும் நாழியிலே பணமளக்க வந்தவனோ
மோரளக்கும் நாழியிலே முத்தளக்க வந்தவனோ
மலடி மலடி யென்று இந்த வையகத்தோர் யேசாமல்
மலடி யென்ற சொல்மாத்த மாணிக்கமாய் வந்தவனோ
இருளி இருளி யென்று என்னி னத்தார் யேசாமல்

இருளியென்ற சொல்மாத்தி யீடேற்ற வந்தவனோ
கனிபறி ராமருட மகனே கனிய வந்த பாலகனே
அய்யாவை வீட்டில் வைத்து வனவாசம் பிறந்தாயோ
என்மகனே கண்மணியே எல்லோருக்கும் நாயகமே!
அயோத்தி நாடு அரசாள்வாய் அருமையுள்ள திருமகனே
கண்மணியே உறங்குறங்கு கண்ணே ராரிராரி ராராரோ.

## சீதை தண்ணீரெடுக்கச் செல்லுதல்

110. ஏழான தொரு நாளையிலே இழைதிருச்சி சீலையரை யில்கட்டி
இளமயில் சீதையும் தானிருக்க என்பெரு மாளுட பாலகர்க்கு
பத்திர காளிவனம் போனால் வால்மீகர்
முனிபார்த்துக்கொள்வார்
ஒருநாளைத் தினமா னதிலே தண்ணீருக் குப்போனாள்
லச்சுமியும்
பத்திர காளியிருக் காளென்று வால்மிகர் வனத்திலே
போய்விடவே
தொட்டிலுட் பிள்ளையைப் போட்டுவிட்டு தோகைமயிலாள்
கெங்கைகோ ரப்போனாள்
கெங்கை கோரப்போன மங்கையவள் கிளிமொழி யாள்வீர
லச்சுமியும்

## சீதை குழந்தையை எடுத்துச்செல்லுதல்

111. இடவழியிலே போகும் போது ஒருமரத் திலிருந்து ஒருமரத்தில
மாரோடு பிள்ளை யணைத்துக்கொண்டு மாயவர் தேவி
எதிராக
மரத்தி லேறிய குரங்கதுதான் கொப்புக்கு கொப்பாகத்
தாவிடுமாம்
கண்ணிலே கண்டுமே லச்சுமியாள் கார்வண்ணர் தேவியும்
தான்பயந்து
குரங்குக்குத் தன்குட்டி பொன்குட்டியோ கோபாலர் பாலனைப்
போட்டுவந்தோம்
என்று சொல்லிமகா லச்சுமியும் செப்புக் குடத்தையும்
கீழேவைத்து
சானகி மண்டபம் தன்னில்வந்து சுவாமி பாலகர் குசலவரை
காத்திருந் தமொரு மாமுனியைக் கடுகச் சீதையும் காணாமல்
வடபத்திர காளியையும் காணாமல் வாடி முகமது தான்சடைத்து

மாயவர் பாலனைக் கையிலெடுத்து வால்மீகர் மண்டபம்
தன்னைவிட்டு
காலில் சிலம்புகள் சோதிமின்ன கானகத்தில் சீதை
வழிநடந்தாள்
பட்ட மரமெல்லாம் யிலைதழைத்து பள்ளிகொண்டோன்
தேவிக்கு இணலிடவே
பூவா ததொரு மரங்களெல்லாம் பூத்துமே சீதைக்குப் பூச் சொரிய
காயா ததொரு மரங்களெல்லாம் காய்த்துமே சீதைக்குக்
கனியுதிர
கெங்கை யதுதான் பெருகி கிளிமொழி யாள்வீர லச்சுமிக்கு
சிரீராமர் பாலனைக்கை யில்வைத்து தேன்மொழி யாள்கெங்கை
கோரனுற்றாள்

## குழந்தை தோற்றம்

112. அப்போது அந்த மாமுனியும் அருள்முனிவரும் வந்து விட்டார்
வனத்திலே போனதொரு வால்மீகரும் வந்துவிட் டாரந்த
மண்டபத்தில்
தொட்டிலை முனிவரும் பார்த்தபோது சீதை பாலகரைக்
காணாமல்
பாலரை முனிவரும் காணாமல் பரிதவித் துமேஏது சொல்வார்
கெங்கைகோ ரப்போன லச்சுமிக்கு கிளிமொழியா ளுக்கென்ன
சொல்வேன்
கடுவாய் புலியது கொண்டுபோச்சோ காட்டானை சிங்கம்
கொண்டுபோச்சோ
லச்சுமியா ளுக்கென்ன சொல்வேன் என்று சொல்லியந்த
வால்மீகரும்
கையில் கிடந்ததோர் தெர்ப்பைதன்னைக் கழற்றித்
தொட்டில்போட் டாட்டிவிட்டார்
ஆதீஸ் பரனுட செயலாலே அங்கே யொருபிள்ளை உண்டாச்சு
அப்போது மகாலச் சுமியாள் கெங்கையிலே சீதை நீராடி
தங்கக் குடத்திலே தண்ணீர்கொண்டு சானகி சீதையும்
தானேவந்தாள்.

## சீதை குழந்தையைக் காணுதல்

113. தண்ணீர்க் குடத்தையும் யிறக்கிவைத்துச் சானகி யாள்வீர
லச்சுமியும்
தொட்டி லொருபிள்ளை தானேகண்டு தோகை மயிலாளும்
ஏதுசொல்வாள்

வாருமைய்யா சுவாமி வால்மீகரே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்
இந்தப் பிள்ளை ஏதெனவே இளமயில் சீதையும் கேட்டபோது

## முனிவர் குழந்தையின் தோற்றம் கூறல்

114. அப்போது அந்த வால்மீகரும் அருள்முனி வரும்ஏது சொல்வார்
என்தாயே மகாலச் சுமியே எனை வளர்த்ததோர் மாதாவே
பிள்ளை கொண்டுபோனது தெரியாமல் பொன்மகளே தாயே
நான்பயந்து
கடுவாய் புலியது கொண்டுபோச்சோ காட்டானை சிங்கம்
கொண்டுபோச்சோ
என்று சொல்லியே நான்பயந்து என்மகளே வீர லச்சுமியே
கையில் கிடந்ததோர் தெர்ப்பைதன்னைக் கழற்றித்
தொட்டில்போட் டாட்டிவிட்டேன்
இங்கேயொரு பிள்ளை உண்டாச்சு என்தாயே மகாலச் சுமியே
அந்தப் பிள்ளையுமிந் தப்பிள்ளையும் அன்ன லச்சுமியே
நீவளர்ப்பாய்
என்று வால்மீகர் சொன்னபோது இளமயில் சீதையும்
ஏதுசொல்வாள்

## அசலவனென்று பெயரிடல்

115. என்குருவே அய்யா மாமுனியே என்னை யாணடிதா
நாயகமே
ஒருபிள்ளைக் கிரண்டு பிள்ளைகண்டால் உலகளந்தோன்
என்னை ஒப்பமாட்டார்
ஒருபோதும் அந்தப் பிள்ளைதன்னை வளர்க்கமாட் டேன்நான்
அய்யாவே
என்று சீதையும் சொன்னபோது ஏதுசொல் வாரந்த வால்மீகரும்
பிள்ளை வந்த வரலாறையும் என்பெரு மாளிடம்
சொல்லிக்கொள்வேன்
இந்தப் பிள்ளையை நீவளர்ப்பாய் என்று வால்மீகர்
சொன்னபோது
இதுவும் என்தலை விதிவசமோ என்று சொல்லியந்தச் சீதையரும்
அசலாக வந்த பிள்ளைதன்னை அசலவ னென்று பேருமிட்டார்.

## பாலர் வளர்ச்சி

116. அமுதூட்டி சீதை தாலாட்டி அன்ன லச்சுமியாள்
தான்வளர்த்தாள்
தெள்ளு மணிபோலே பாலர்களைச் சீதா லச்சுமி
தான்வளர்த்தாள்
வார்ப்புருக் கித்தங்கம் வார்த்ததுபோல் வளருகி றாரந்தப்
பாலகர்கள்
ஆண்டு ஒருவரு டமாக வளருகி றாரந்தப் பாலகர்கள்
ஒன்றாகி வயது இரண்டாகி உயர்மூன்றாகி வயது நாலாகி
பக்குவ மாகவே ஐந்தாகி பருவ வயதுகள் ஆனபோது
பார்க்க முடியாது பாலர்களைப் பச்சை நிறமாக வளருகிறார்
ஒருநா ளையத்தின மானதிலே உலகளந்தோன் தேவி
ஏதுசொல்வாள்
என்குருவே அய்யா மாமுனியே இந்தப் பாலகர் இருபேருக்கும்
நாலுவேதம் ஆறு சாத்திரமும் மாமுனியே படித்துக்
கொடுக்கவேணும்
என்று சொன்னாள்மகா லச்சுமியும் ஏதுசெய் தாரந்த
வால்மீகரும்

## பாலர் கல்வி

117. குசலவர் அசலவர் இருபேருக்கும் குருமுனி அரிஎழுத்
தோதுவாராம்
அரிவரி நல்ல கொன்றைவேந்தன் அன்னை பிதாஎண் சுவடி
ஏற்ற மிறக்கம் மணிவலக்கம் லச்சுமி பாலகர்தான் படித்தார்
கணக்கதி காரம் முடிந்தபின்பு வில்வித்தை யானது
தான்படித்தார்
கூடுவிட்டுக் கூடு பாய்வதற்குக் குசல வித்தையும் தான்படித்தார்
மாமுனி படித்ததோர் வித்தையெல்லாம் மாயவர் பாலகர்
தான்படித்தார்
படித்து முடிந்த பிற்பாடு பள்ளி கொண்டோனுட பாலகர்கள்
மாமுனி படித்துத்தந்த வித்தையெல்லாம் வனத்தில்
வேட்டையாடிப் பார்க்கவென்று
அம்பும் வில்லும் கையிலெடுத்து அன்ன லச்சுமியை
அடிதொழுதார்

## பாலர் வேட்டையாடச் செல்லுதல்

118. என்தாயே அம்மா லச்சுமியே எனை வளர்த்ததோர் மாதாவே
வனத்திலே நாங்கள் வேட்டையாட மாதாவே அம்மா
விடைதருவாய்
என்று பாலகர் கேட்டபோது என்பெருமாள் தேவி
சந்தோசமாய்
அம்பும் வில்லும் கையிலெடுத்து அரிராமர் திருமணி உச்சரித்து
அடிதொ ழுதபா லகர்க்கு அவளும் வாழ்த்தியே
விடைகொடுத்தாள்
அப்போது அந்தப் பாலகர்கள் சானகி மண்டபம் தன்னைவிட்டு
வால்மீகர் மண்டபம்தன் னில்வந்து மாமுனி யையடி தொழுதார்
வாரும்பிள் ளாயெந்தன் சீடர்களே வந்த வரலாறு
சொல்லுமென்றார்
மாமுனி யானவர் கேட்டபோது மாயன் பாலகர் ஏதுசொல்வார்
வனத்திலே நாங்கள் வேட்டையாட வரம்தாரு மைய்யா
யெங்களுக்கு
என்று பாலகர் கேட்டபோது இயல்முனி யவர்வரங் கொடுத்தார்
வரம்வாங் கினவே ளையிலே மாயன் பாலகர் இருபேரும்

## வேட்டையாடுதல்

119. வனங்க ளென்றதோர் வனங்கடந்து வந்தாரே சேவல்முனி
வனமதிலே
சேவல் முனியுட வனமதிலே தெள்ளுமணிப் போலேப் பாலகர்கள்
காட்டானை யோடு கருங்குரங்கும் கடுவாய் புலியாளி சிங்கம்
வில்வளைத்துப் பாணம் கையிலெடுத்து மலையில் வாழ்கிற
மிருகங்களை
வனத்தில் பறக்கின்ற பட்சிகளை மாயன் பாலகர் பிடிப்பாராம்

## சேவலைப் பிடித்து வருதல்

120. அப்போது அந்தச் சேவல்முனி அந்தர மாகவே பறந்துவந்தான்
அந்தர மாகவே வாறபோது அரிராமர் பாலகர் கண்ணில்கண்டு
என்னுடைய தம்பி அசலவனே இந்தா பார்தம்பி சேவலைத்தான்
பார்க்க அழகாக யிருக்குதப்பா பறந்து போனாலும்
பிடிக்கவேணும்
என்று சொல்லியே குசலவனும் எடுத்து எய்தாரே அம்புவில்லை
அம்பாலே சேவல் தனைப்பிடித்துச் சீதை பாலகர் வேட்டையாடி

சேவலைப் பிடித்தல்லோ பாலகர்கள் சீதையிடம் நோக்கி
வழிநடந்தார்
மலையும் மலங்காவும் தன்னைவிட்டு வால்மீகர் மண்டபம்
தானோக்கி
தாயாரிருக் கும்மிட மதிலே சுவாமி பாலகர் இருபேரும்
சீதா தேவியை அடிதொழுது சிம்மா சனத்திலே அரசிருந்தார்

## சேவல் முனி வேண்டுதல்

121. அப்போது அந்தச் சேவல்முனி அழுதானே சீதை முகனோக்கி
என்தாயே வீர லச்சுமியே என்பெரு மாளுட தேவியரே
கைலாச வீட்டில் பிறந்தவளே கறைக்கண்ட னாருட தங்கையரே
சேவலல்ல தாயே சேவலல்ல சேவல் முனியல்லோ யென்பேரு
என்னைக்கட் டவிழ்த்துத்தாயே விட்டுவிடு கனியெறிந்
தோனுடதேவியரே
நானும் யென்குடி யானவரும் இறைபகுதி தந்து குடியிருப்போம்
என்று சொன்னானே சேவல்முனி இரக்கம் வந்துவீர லச்சுமியும்
கட்டவிழ்த்துச் சேவல் தன்னைவிட்டாள் கனியெறிந் தோனுட
தேவியரும்
அப்போது அந்தப் பாலகர்கள் அன்ன லச்சுமிக்கு
ஏதுசொல்வார்

## சேவல் முனியின் நிலை உணர்தல்

122. என்தாயே மகாலச் சுமியே சேவலை ஏனம்மா கட்டவிழ்த்தாய்
என்று பாலகர் சொன்னபோது என்பெரு மாள்தேவி
ஏதுசொல்வாள்
சேவலல்ல மகனே சேவலல்ல சேவல்முனி யல்லோ அவர்பேரு
என்மகனே அய்யா குசலவனே என்று சொன்னாள்மகா
லச்சுமியும்
சீதா தேவியை அடிதொழுதார் சுவாமி பாலகர் இருபேரும்
சேவல் முனிவர் வாய்திறந்து சுவாமி பாலகரிடத் தில்சொல்வார்
என்னுடை யாதொரு மலைதனிலே மிருகங்கள் சில்லறை
மெத்தவுண்டு
என்னுட வனத்துக்கு வேட்டையாட வாருமைய்யா சுவாமி
குசலவரே
என்று சேவல்முனி சொன்னபோது என்பெரு மாளுட
பாலகர்கள்

## சேவல் முனியுடன் செல்லுதல்

123. சீதா லச்சுமி யிடமதிலே சுவாமி பாலகர் விடைவாங்கி
வால்மீகர் மண்டபம் தானோக்கி வாராரே யந்தப் பாலகர்கள்
மண்டப மானதுதன் னில்வந்து மாமுனி யையவர்
அடிதொழுதார்
அடிதொழுது பாலர்நிற் கும்போது அருள்முனி யவர்ஏது
சொல்வார்
வாரும்பிள் ளாயெந்தன் சீடர்களே வந்த வரலாறு
சொல்லுமென்றார்
மாமுனி யானவர் கேட்டபோது லச்சுமி பாலகர் ஏதுசொல்வார்
சேவல் முனியுட வனமதிலே சிறந்தவேட் டைகளாட வேணும்
வரம்தா ருமென்று கேட்டபோது மாமுனி யானவர்
வரங்கொடுத்தார்
வேட்டையாடிப் பாலர் வாருமென்று விடைகொடுத் தாரந்த
மாமுனியும்

## வேட்டையாடுதல்

124. வால்மீகர் மண்டபம் தன்னைவிட்டு வாழும் வனத்திலே
வேட்டையாட
சேவல் முனியுட வனமதிலே சிறந்த வேட்டை களாடுகிறார்
காடை கருவாலி முயல்வுடும்பு கலையும் புல்வாய் கரடியுடன்
கயிலாச மலைகோ புரத்தில் கடுக பன்றிகள் கொன்றிடுவார்
ஆளிசிங் கம்குலை யானைகளை அரிராமர் பாலகர்
கொல்லுவாராம்
அம்புச் சரங்களைத் தானெடுத்து அரிராமர் பாலகர்
வேட்டையாட
வனத்தில் கொன்றதோர் மிருகமெல்லாம் வானமலை போலே
வயறாத
பிணவா டையுட நாற்றமது பிரம கயிலாசம் மூட்டிடுமாம்
கயிலாசந் தன்னில இருந்தவள்தான் கன்னி புமையவள்
பார்வதியும்
சானகி மண்டப மானதிலே வரிசையுடன் பாலர் தானிருந்தார்
அலைகடலில் பொழுதடைந்த பின்பு அச்சுத ராமருட
பாலகர்கள்
தந்த சுத்திதானும் செய்து சுவாமி திருமால் பொட்டுமிட்டு
திருச்சூர்ண நாமமும் தான்சாத்தி சுவாமி பாலகர்தா னேவந்தார்
அப்போது அன்ன லச்சுமியாள் அந்தப் பாலகரிரு பேருக்கும்

மாயன் பாலக ரிருவருக்கும் மங்கை லச்சுமி அமுதூட்டி
அன்று ராத்திரி வேளையிலே அசலவன் குசலவர்
பள்ளிகொண்டார்

## மீண்டும் வேட்டை

125. மறுநாள் உதயக் காலத்திலே மாயன் பாலகர் இருபேரும்
தந்த சுத்தி தானும்செய்து சுவாமி பாலகர்தா னேவந்தார்
அப்போது அன்ன லச்சுமியாள் அமுதுபடைத் தாளேயிரு
பேருக்கும்
உண்டு பசியாறி பாலகர்கள் குசலவர் அசலவர் ஏதுசொல்வார்
சேவல் முனியுட வனமதிலே சிறந்த வேட்டைகளா டவேணும்
வேட்டையா டத்தாயே விடைதருவாய் என்று பாலகர்
கேட்டபோது
அப்பா என்னுட கண்மணியே அரிரா மருட பாலகர்களே
சேவல் முனிவனம் வேட்டையாடி சீக்கிரத்தில் மகனே
வாருமென்றாள்
சானகி மண்டபம் தன்னைவிட்டு வாறாரே யந்தப் பாலகர்கள்
வால்மீகர் மண்டபம் தன்னில்வந்து மாமுனி யையடி தொழுதார்
அப்போது அந்த மாமுனியும் அவரும் வாழ்த்தியே
விடைகொடுத்தார்
வால்மீகர் மண்டபம்தன் னைவிட்டு வாறாரே யந்தப்
பாலகர்கள்
வனங்க ளென்றதோர்வன மும்விட்டு சேவல் முனிவனம்
வேட்டையாட

## கயிலாயத்தின் மாற்றம்

126. கயிலாச மலைதன்னி லிருந்தவள்தான் கன்னி யுமையவள்
பார்வதிதான்
ஆதீஸ்பர பராயீஸ் பரனே ஆண்டவரே சுவாமி கர்த்தாவே
நாமளிருக்கும் கயிலாச மலையதுதான் பிணநாற் றமாகவே
நாறுதென்றாள்
வனத்தில் வேட்டையாடும் பாலர்களை வதைக்க வதைக்கவே
உயிர்பிடித்து
சுருக்காய்க் கொண்டிங்கே வரவேசொல்லும் என்று பார்வதி
சொன்னபோது

## பாலர்களைப் பிடித்துவரச் சொல்லல்

127. அப்போ தந்த யீஸ்வரனும் ஆண்ட வரும்ஏது செய்தார்
காலதூ தரைவர வழைத்து கறைக்கண்ட னாரும் ஏதுசொல்வார்
வாரும் பிள்ளாயடா காலதூதா வார்த்தை நானொன்றுசொல்லக்
கேளும்
கயிலாச மலைகோ புரத்தில் கடுக வேட்டையாடும் பாலர்களை
துடிக்கத் துடிக்கவே உயிர்பிடித்து சுருக்காய்க் கொண்டிங்கே
வாருமென்றார்

## காலதூதர் வருகை

128. பரம சிவனாரும் சொன்னபோது ஏம காலதூதர் மூபேரும்
வீச்சு வலையோடு பாசக்கயிர் விரைவாய்ச் சூலமும்
கையிலெடுத்து
பாசத் தடியோடு செப்புக்குடம் பாங்குட னேயவர் கையிலெடுத்து
கண்ட கோடாலி வெட்டருவாள் கால தூதர்கள் கையிலெடுத்து
கயிலாச மலைதன் னைவிட்டு கால தூதர்கள் மூபேரும்
வனங்க ளென்றதோர்வன மும்விட்டு வாறாரே யந்தக் காலதூதர்
சேவல்முனி யுடவனத் தைநோக்கி சிறந்த காலதூதர் ஓடிவாறார்

## சேவல்முனி அறிவுறுத்தல்

129. குறியிடியது முழங்கினாப்போல் கோபத் துடனவர் வாறபோது
அப்போ தந்தச் சேவல்முனி காலதூதர்கள் முன் னேவந்து
கால தூதர்கள்ளைக் கண்ணில்கண்டு கடுக ஏதுசொல்வான்
சேவல்முனி
எங்கே போறீர்கால தூதர்களே என்று கேட்டாரே சேவல்முனி
அப்போ தந்தக் காலதூதர் ஆதர வாகவே ஏதுசொல்வார்
வனத்தில் வேட்டையாடும் பாலர்களை வதைக்க வதைக்கவே
உயிர்பிடித்து
பரமசிவம் கொண்டுவர வும்சொன்னார் என்றுசொன் னாரந்தக்
காலதூதர்
கால தூதர்கள் சொன்ன போது கடுக ஏதுசொல்வான்
சேவல்முனி
யாரு குடியைத்தான் கெடுப்பதற்கோ ஆண்டிபேச் சைக்கேட்டு
யிங்குவந்தீர்
ஒருயிலை மேலே பள்ளிகொண்ட உலகளந் தோனுட
பாலகர்கள்

மாது லச்சுமி பிள்ளைகள்தான் வனத்தில் வேட்டைக
ளாடுகிறார்
என்வனத்தில் வேட்டை யாடுகிறார் என்று சேவல்முனி
சொன்னபோது

## காலதூதர் திரும்பிச் செல்லுதல்

130. பெருமாள் பாலகர் யென்றபோது பெருமூச் செறிந்தாரே
காலதூதர்
என்பெரு மாளுட பிள்ளையென்றால் நம்மாலே
யென்னசெய்யக்கூடும்
திரும்ப நடந்தானே குலைகாலன் தெய்வக் கயிலாச
மலையைநோக்கி
கயிலாச மலைதன் னில்வந்து கறைக்கண்ட யீஸ்பரர் யிடமதிலே

## பாலர் நிலை கூறல்

131. ஆதீஸ்பர னாரே மகதேவர் ஆண்டவரே சுவாமி
சொல்லுகிறோம்
ஒம்முடைய தொருமைத் துன்ராம் உலகளந் தோனுட பாலகராம்
மாது லச்சுமி பிள்ளைகளாம் வனத்தில் வேட்டைக ளாடுகிறார்
மார்க்கண் டனைஉயிர் பிடிக்கப்போய் மாய கிருட்டிணனும்
வந்துவிட்டார்
பள்ளிகொண் டோனுட பிள்ளையென்றால் பரமசிவனே
நானென்ன செய்வேன்
என்றுசொன் னாரந்தக் காலதூதர் ஏதுசொல் வாரந்தப்
பரமசிவம்
நம்முடைய தங்கை லச்சுமியாள் நாராயண மூர்த்தி
தேவியர்தான்
வனவாச மதில்வந் ததென்ன அறிந்து வரவேணும் பார்வதியே
என்று அவர்களும் பேசிருக்க ஏற்ற அயோத்திமா னகர்தனிலே
என்பெரு மாளரி கோபாலரை ஏழைப் பங்காளனை
ஏதுசொல்வார்
அம்பலச் சந்திக்குப் போகலாமோ அயோத்தி நாட்டையும்
ஆளலாமோ
தங்க முடியாது தரிக்கலாமோ தாரணியை வைத்து ஆளலாமோ
ராசாக்கள் முகம் பார்க்கலாமோ இருக்கணுமோ இந்தப்
பூமியிலே
என்று சொல்லியே பரமசிவம் என்பெரு மானும் ஏதுசெய்தார்

## சிவன் அந்தணராகி அயோத்திக்குப் புறப்படுதல்

132. கயிலாச மலைதன் னைவிட்டுக் காண்ட வனங்களும்
சோலைவிட்டு
ஆறு வனமும் தான்கடந்து அயோத்தி யாபுரி வருகையிலே
வேதப் பிராமணன் வடிவெடுத்து விரைவாய் வாறாரே
யீஸ்பரனார்
புத்தகம் கையில் பிடித்து பொன்னெழுத் தாணியுடன்
தெண்டு கமண்டலம் கையிலெடுத்து சித்தரைப் போல்
வழிநடந்தார்
அயோத்தி யாபுரிதன் னில்வந்து ஆதி பரமேஸ் பரனார்
எட்டுத்திக் கிலும்பார்த்து வந்தோம் எவராகிலும் சாத்திரம்
கேட்பாரில்லை
வேதப் பார்ப்பானும் சொன்னசொல்லை வெண்ணையுண்
டோனும்கேட் டுக்கொண்டார்
வாருமைய்யா வேதப் பார்ப்பானே வந்து சாத்திரம்
சொல்லுமைய்யா
அச்சுத ராமரும் சொன்னபின்பு அருகே வந்துவேதப்
பார்ப்பானும்
தார்வேந் தாவுன் முகம்தான் தார மிழந்து வாடுவானேன்
தார மிழந்த மனைதனிலே சாத்திரங் கள்சொல் லலாமோ
மனையாட் டியில்லா மனைதனிலே மறையோ ரமுது
புசிக்கலாமோ
பட்டத்துத் தேவி யில்லாமல் பார்வேந்தா முகம்வாடு வானேன்
என்றுகேட்டா ரேவேதப் பார்ப்பானும் என்பெருமாள் மாயன்
ஏதுசொல்வார்

## இராமன் அந்தணரிடம் தன் வரலாறு கூறல்

133. ஆண்டுபதி னாலுவரு டமட்டும் அதிக வனவாசம்
போனோமையா
வனவா சமதில் இருக்கையிலே வந்துதையா புள்ளி மானதுதான்
மான்வந் துமேவிளை யாட மங்கை லச்சுமிகண் ணில்கண்டு
மான்பிடித்துத் தாரு மென்று எந்தனி டத்திலே தான்கேட்டாள்
கேட்ட வுடனந்தச் சீதையர்க்குக் கிருப்பையுடனே
நான்மாட்டேனென்றேன்
மாட்டே னென்று சொன்னபோது மங்கை லச்சுமி தானழுதாள்
அப்போது அய்யா சோசியரே அந்தமானை நான்பிடிக்
கப்போனேன்

மான்பி டித்துவரு மளவும் மன்னனிளை யோனைக்கா
வல்வைத்தேன்
மன்னனி ளையோனைக் காவல்வைத்து மான்பிடிக்க
நான்போனேனையயா
மான்பிடிக்க நான்போன போது மாய்கைச் சத்தமொன்று
தான்கேட்டு
மான்பிடிக்கப் போன எந்தனக்கு வனத்தில் அவகேடு
வந்ததென்று
காத்திருந் ததொரு இளையோனை எந்தன் பிறகாலே
அனுப்பிவைத்தாள்
மன்ன னிளையோனும் வந்தபோது வல்லரக்கன் பாவி
ராவணனும்
கள்ளத் தனமாக வந்தல்லவோ கடத்திக் கொண்டுபோனான்
சீதையரை
இராவணச் சங்காரம் போர்முடித்து லச்சுமியைச் சிறைதிருப்பி
வந்தேன்.

## நகர்சோதனை கூறுதல்

134. அயோத்தி நாட்டிலே நாங்கள்வந்து அரசிருக் கிறகா லத்திலே
ஏழை பரதாழ்வான் என்றுசொல்லி ஏய்த்துப் போட்டானே
சமுசாரிகள்
சமுசாரி மார்களை வரவழைத்துத் தாலிமுதல் நானும்வாங்
கிக்கொண்டேன்
அப்படி யிருக்கிற காலத்திலே அயோத்தி மானக ரானதிலே
நகர்சோதனை பார்க்க வென்று நாங்க ளிருபேரும்
போனோமையா
அயோத்தி மாநகர் ஊர்வெளுக்கும் அழுக்கெடுக்கும்
சாதிமாடவண்ணான்
என்னை யவனுமே வசையாய்சொல்லி அவன்பெண் சாதியைத்
தானடித்தான்
அந்தச் சொல்லைநான் காதில்கேட்டு அரண்மனைக்குத் தானே
வந்தேன்
காலு கைகளும் சுத்திபண்ணி கன்னி வாய்களும் கொப்பளித்து

## இராவணன் படம் பற்றிக் கூறுதல்

135. அரண்மனைக்குத் தானே வந்து பஞ்சணை யிலேநா னிருந்தேன்
பஞ்சணையிலே நானிருக் கும்போது படலமா னதைக்கண்
டெடுத்தேன்
லச்சுமியை நானும் வரவழைத்து படலம் ஏதென்று கேட்டேன்
நேரே முகாந்தரம் சொல்லாமல் நின்றுவிட் டாளந்தச் சீதையரும்
செத்திறந்து போன ராவணனைத் திரும்பப் படத்திலே
எழுதலாமோ
மாண்டிறந்து போன ராவணனை மறுத்துப் படத்திலே
எழுதலாமோ
பட்டிறந்து போன ராவணனைப் படல மானதில் எழுதலாமோ

## சீதையை வெட்டிய நிலை கூறுதல்

136. அரக்கன் உருவதைக் கண்டல்லவோ ஆயிழைச்
சீதையைவெட்டச்சொன்னேன்
வண்ணான் சொன்ன வசையாலே மன்னனிளை யோனைவெட்
டச்சொன்னேன்
அரக்கன் உருவதை எழுதினதோர் அன்ன லச்சுமியைவெட்
டச்சொன்னேன்
என்னுடைய சொல்மா றாமல் ஏந்திழைச் சீதையை
வெட்டிவந்தான்

## வருந்திக் கூறுதல்

137. சீதை யிறந்ததோர் நாள்முதலாய்ச் சிங்கா சனமரசு செய்யவில்லை
லச்சுமி யென்ற பெண்ணைப்போல நாட்டிலே யும்பெண்
கிடையாது
சானகி யென்றபெண் ணைப்போலே தரணி தன்னில்பெண்
பிறந்திடுமோ
செத்திறந்து போன லச்சுமியைத் திரும்ப வுயிரோடே
எழுப்பவேணும்
சீதா தேவியை யல்லாமல் தேசத்தை யரசாள மாட்டேன்
மாயவ ராமரும் சொன்னபோது மறுத்தேது சொல்வார்
பார்ப்பானும்
செத்திறந்து போன லச்சுமியாள் திரும்ப வந்துமே பிறப்பாளோ
மாண்டிறந்து போன லச்சுமியாள் மறுபடியும் வந்து
பிறப்பாளோ

## அந்தணர் வேள்வி செய்யச் சொல்லுதல்

138. வாரும்பிள் ளாய்மன்னா ரெகுராமா வார்த்தை
நானொன்றுசொல் லக்கேளும்
மாண்டிறந்து போன லச்சுமியை மறுத்தெழுப் பவேவேணு
மானால்
வேள்வி யொன்றுதான் வளர்த்ததுண்டால் வீர லச்சுமியைக்
கண்டிடலாம்
திருவேள்வி யதுவளர்த் ததுண்டால் சீதா தேவியைக்
கண்டிடலாம்
திருவேள்வி யதுவளர்த் ததுண்டால் சீதா தேவியைக்
கண்டிடலாம்
என்று சொல்லியே சோசியரும் யிதமாய் நடந்தாரே
கயிலைநோக்கி

## வேள்வி தொடங்குதல்

139. அப்போ தந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்
இளைய பெருமாளே தம்பியரே சோசியர் சொல்படி
வேள்விசெய்வாய்
அரிநெடு மாலுட சொல்படியே அழக னிளையோனும்
வேள்விசெய்தார்
அன்பத் திரண்டடி யகலத்திலே அறுபத்தி மூன்றடி நீளத்திலே
ஆழத் தாழவேஒமடு குண்டம் அகலம் பெறவெட் டுவாராம்
ஏறப்படி யோடே யிறங்கப்படி இருபத் தேழுபடியும் வைத்தார்
இருபத் தேழுபடி தனக்கும் இருபத் தேழுகும்பம் வைத்தார்
இருபத்தேழு கும்பத்துக்கும் இழை முறுக் கியேகாப் புங்கட்டி
வேள்வியை நன்றாய் அலங்கரித்து விரைவாக மரம்வெட்
டுவாராம்
சந்தன மரம்நல் தேக்கு சாம்பிராணி மரம்வெட் டுவாராம்
கல்லிடை யிலேமுளைத் திருக்கும் காரி யயிலது வெட்டுவாராம்
வன்னி பின்னை மரமும் வருக்கைப் பிலா மரமும்
ஆத கத்தி தோதகத்தி அழகா னமஞ்ச ணத்தி
நீடி யதோர்வேள் வியிலே நீர்வேம் பமர மதுவும்
சாணு யொருமுழம் போட்டு தரித்த டுக்கினார் வேள்வியிலே

## வேள்விப் பொருள்கள்

140. வேள்வியிலே விறக டுக்கி விரைவாய்த் தெய்வார் அனலூத
வெள்ளானைத் துருத்தி கொண்டு விரைவாய்த் தெய்வார்
அனலூத
காரானைத் துருத்தி கொண்டு கடுகத் தெய்வார் அனலூத
வளர்த்த திருவேள் வியிலே வாசனைப் பண்டங்கள்
போடுவாராம்
கற்பூரக் கட்டி யொருதுலாம் போட்டார்
கனக சாம்பிராணி யொருதுலாம் போட்டார்
மஞ்சள் பொடியிலொரு கோட்டை போட்டார்
மணக்கின்ற வில்லைப் பொடிகொண்டு போட்டார்
கொத்தோ டேமாம் பழத்தையும் போட்டார்
குலையோ டேவாழைப் பழத்தையும் போட்டார்
எள்பொரி நெல்பொரி வேள்வியில் போட்டார்
ஏற்றதோர் சந்தனத்தை வாரி யிரைத்தார்
எண்ணெய்க் குடத்திலே தொண்ணூறு மிட்டார்
எலுமிச்சம் பழத்திலே எழுநூறும் போட்டார்
நெய்க்குடம் பால்குடம் வேள்வியில் விட்டார்
நாரத்தங் காயிலே நானூறும் போட்டார்
மல்லிகை பிச்சிப்பூ வேள்வியில் சிதற
மரிக்கொழுந் தானது வேள்வியில் போட்டார்
அன்று விரிந்ததோர் முல்லைப் பூவை
அழகான வேள்விக் குழியிலே போட்டார்
வளருதைய்யா திருவேள்வி வானமட்டும் பூமிமட்டும்

## தெய்வப் புரவி தோன்றுதல்

141. யானைத் தலைபோலே மஞ்சணையை திரட்டி எறிந்தாரே
வேள்வியிலே
தேங்காய் தரத்திலே மஞ்சணையைத் திருவேள் வியில்விட்
டெறிந்தார்
ராமர் வளர்த்த வேள்வியிலே நலமுடனே யந்தப் பரமசிவம்
தெய்வப் புரவி பிறவிசெய்ய தெற் குமுகமாக
யிருந்துகொண்டார்
கண்கள் இருபக கமதாய் நெற்றி யிலேசுட் டியுமாய்
காலு நாலுக்கும் வெள்ளியுமாய் கழுத்துக் கயறதுதங் கத்தாலே
காதிரண் டும்பொன் னாலே கடுவா ளமதுதங் கத்தினால்

கழுத்துக் கயறதுதங் கத்தாலே கண்ட பேர்களும் தான்பதற
அசுவக் குதிரையைப் பிடித்தேறினால் ராமருக்குப்
பெண்கொடுக்கவென்று
நெற்றி யில்திரு வெழுத்துமாக நிமலனா ரும்பிறவி செய்தார்
திருமால் வளர்த்த வேள்வியிலே தெய்வப் புரவிதான்
பிறந்திடுமாம்
மகதே வர்திரு வருளால் வந்து பிறந்ததே புரவியது
சீதை பிறக்கின்ற வேள்வியிலே தெய்வப் புரவிதான்
பிறந்திடுமாம்.

## குதிரையை அனுமனிடம் ஒப்படைத்தல்

142. பிறந்த குதிரையைத் தான்பிடித்து வெண்ணையுண்
டோனும்பார்க்கும்போது
பட்டயத்து வாச கத்தைப் பார்த்து பெருமாளும் ஏதுசொல்வார
என்னுடைய தம்பி லச்சுமணா திருநெற்றி வாசகம் கண்டாயோ
என்று சொல்லியே கோபாலர் என்பெ ருமாளும் ஏதுசெய்தார்
அனுமானை யவர்வர வழைத்து அரிநெடு மாலும்
ஏதுசொல்வார்
வாரும் பிள்ளாயடா வாளனுமான் வார்த்தை
நானொன்றுசொல் லக்கேளாய்
கட்டு மிடத்திலே குதிரைகட்டி கட்டுடனே அனுமான்பார்த்
துக்கொள்வாய்
என்று பெருமாளும் சொல்லிடவே இயலனு மானும்
ஏதுசெய்தான்
அப்போது துரைபோ ரனுமான் அரிநெடு மாலுட சொல்படியே
பகலிலே குதிரை மேய்த்து இரவெல்லாம் குதிரை கெட்டி
இப்படி யாகவே பலநாளும் ஏவல்கட் டாகப்பார்த்
துக்கொள்வான்.

## குதிரை காணாமல் போதல்

143. ஒருநாளை யத்தின மானதிலே உறங்கிவிட் டானந்தப்
போரனுமான்
கட்டின யிடத்தில் குதிரையது கார்வண்ணர் புரவியைக்
காணாமல்
அந்தர மாய்க்குதி ரையது அறுத்துக் கொண்டுதான்
போய்விடவே
தண்ட காருண்ய வனம்நோக்கி வருகுதல் லோம்தெய்வப்
புரவியது

## குதிரையைப் பிடிக்கச் சொல்லுதல்

144. அப்போ குசலவர் அசலவரும் சேவல்முனி வனம்வேட் டையாட
வேட்டையாடிப் பாலர் வரும்போது கண்ணில் கண்டாரே
குதிரைதன்னை
என்னுடைய தம்பி அசலவனே இன்னா பார்தம்பி
குதிரையைத்தான்
யாருடைய குதிரையிதோ நம்மைத் தேடியே வருகுதடா
இந்தக் குதிரையைப் பிடித்துவாடா என்னுடைய தம்பி
அசலவனே
என்று குசலவன் சொன்னபோது அசலவன் குதிரையைப்
பிடிக்கவந்தான்
முன்னேபோ னால்குதிரை கடிக்கிறதும் பின்னே வந்தாக்கால்
எரிகிறதும்
குதிரை எரிவதைக்கண் ணில்கண்டு குசலவர் சுவாமியும்
தான்போனார்
குசலவர் சுவாமியும் போனபோது குதிரை யானது நின்றிடுமாம்
கண்டு பழகின குதிரையைப்போல் கடுகக் குதிரைதான்
நின்றிடுமாம்
குதிரை யானதுநிற் கும்போது குசலவர் குதிரையைத்தான்
பிடித்தார்

## குதிரை பற்றிக் கூறுதல்

45. சிரீராமர் யென்று சொல்லி படலமெழுதி யிருக்குது அசலவனே
ஆனாலும் தம்பி அசலவனே இந்தக் குதிரையைவிட
வும்வேண்டாம்
குதிரை தேடியிங்கே வந்தபேரைக் கொல்லவேணும் தம்பி
அசலவனே
என்று சொல்லியந்தப் பாலகர்கள் தெய்வுக் குதிரையின்முன்
பில்வந்தார்
கண்டு பழகின குதிரையைப்போல் பணிந்து குதிரைதான்
நின்றிடுமாம்
குதிரைக் கடிவாளம் தனைப்பிடித்து குசலவர் சுவாமியும்
சொல்லுவாராம்
வாறதெல்லாம் தம்பி வரட்டுமென்று மாயவ ராமருட
பால்கர்கள்
நம்முடைய குதிரை யானதினால் நம்மைத் தேடியே வந்துதடா
பின்னுக்குத் தம்பி ஏறிக்கடா என்று சொல்லியந்தக் குசலவனும்

## சீதையிடம் சேர்த்தல்

146. சீதா தேவியை மனதிலெண்ணி தெய்வக் குதிரைமே
லேறலுற்றார்
குதிரை முகவாரைத் தான்பிடித்துக் குறட்டாலே கொண்டு
தானடித்தார்
கணகண வென்றுகனைத் துக்கொண்டு மலையைச் சுத்தியே
தாண்டிடுமாம்
வாயிலே வெள்ளனுரையும் கக்க வனத்தைச் சுத்தியே
தாண்டிடுமாம்
வனம திலேவிளை யாடி வால்மீகர் மண்டபம் தானோக்கி
வனங்க ளென்றதோர் வனங்கடந்து மாயன் பாலகர் இருபேரும்
சானகி தேவியுடன் மண்டபத்தில் கொண்டு கெட்டினார்
பாலகர்கள்
குதிரை யானதைக் கெட்டிவைத்துக் கொடியிடைச் சீதையை
யடிதொழுதார்

## குதிரையை விட்டுவிடச் சொல்லுதல்

147. அப்போது வீர லச்சுமியும் அன்ன சூடாமணி ஏதுசொல்வாள்
என்மகனே அய்யா குசலவனே இந்தக் குதிரையை
யேன்பிடித்தாய்
எந்த ராசாக்கள் குதிரையிதோ திசைதப்பி யிங்கே வந்துதடா
தேச ராசாக்கள் குதிரையிதோ துரோகி களுடன் குதிரையிதோ
மாமுனி யுடகுதி ரையிதோ வைகுண்ட வாசகர் குதிரையிதோ
குதிரையாலே பங்கப் பட்டபேர்கள் கோடி ராசாக்கள்
மெத்தவுண்டு
குதிரை விசாச்சியம் பொல்லாதது குதிரையை வனத்திலே
விட்டுவிடு
என்று சொன்னாள்மகா லச்சுமியும் ஏதுசொல் வாரந்தக்
குசலவரும்

## புரவி வந்த செய்தி

148. என்தாயே மகாலச் சுமியே எனைவளர்த் ததோர்மா தாவே
கட்டுமிடத் தில்களவு செய்யவில்லை சூதுசெய்து நாங்கள்
வரவுமில்லை
பூட்டா னதைமுறிக் கவில்லை பொய்களவு நாங்கள்
செய்யவில்லை

மதிலேறி நாங்கள குதிக்கவில்லை வானவர் புரவிய
யவிழ்க்கவில்லை
எங்கள் குதிரை யானதினால் எங்களி டத்திலே வந்துதம்மா
என்று சொல்லியந்தப் பாலகர்கள் இளமயில் சீதையை
யடிதொழுதார்
அப்போது வீரலச் சுமியாள் அந்தப் பாலகரி ருபேருக்கும்
சீனி சிங்கமோடு பால்பழமும் திரட்டிக் கொடுத்தாளே
பாலகர்க்கு.

## வேட்டைக்குச் செல்லுதல்

149. உண்டு பசியாறி பாலகர்கள் திரும்ப வனத்திலே வேட்டையாட
தாயா ரிடத்திலே விடைவாங்கி சுவாமி பாலகரி ருபேரும்
மாமுனி மண்டபம்தன் னில்வந்து மாயன் பாலகரி ருபேரும்
வேட்டையாட விடைதா ரும்மையா என்றடி தொழுதார்
பாலகர்கள்
வேட்டையாடிப் பாலர் வாருமென்று விடைகொடுத் தாரே
மாமுனியும்
விடைவாங்கிப் பாலர் இருபேரும் தெய்வக் குதிரையின்
மேலேறி
வால்மிகர் மண்டபம் தன்னைவிட்டு தண்ட காருண்யவன
மும்விட்டு
சேவல் முனியுட வனமதிலே திருமால் பாலகர் வேட்டையாட்.

## அனுமன் தவித்தல்

150. வாழும் அயோத்தியா புரிதனிலே மாயவர் தூதுவன்
போரனுமான்
கட்டின யிடத்தில் குதிரைதன்னைக் கார்வண்ணர் புரவியைக்
காணாமல்
என்னசெய் யப்போறேன் இனிமேலும் என்பெருமாள் நம்மைப்
பிழைக்கவொட்டார்
என்று சொல்லியந்தப் போரனுமான் இயலனுமான் நின்று
பரிதவித்தான்.

## அனுமன் குதிரையைத் தேடுதல்

151. தெய்வக் குதிரையின் அடிபார்த்து திருமால் தூதுவன்
தேடுவானாம்

செடிகள் செடிகளாய்த் தேடித்தேடி சிரீராமர் புரவியைக்
காணாமல்
மலயும் மலைக்காவும் தான்தேடி மாயவர் புரவியைக் காணாமல்
கண்டயிட மெல்லாம்தே டித்தேடி கால்கள் சளைத்தானே
போரனுமான்

## இராமரிடம் குதிரையைக் காணோம் என்று கூறுதல்

152. அயர்ந்து முகவாடி போரனுமான் அரிராம
சுவாமியைத்தானடைந்து
தன்னாலே அனுமான் தான்சடைத்து சுவாமி நாயகா
அரிகரி ராமா சரணமைய்யா அச்சுத ராமரேசொல்லக்கேளும்
அடியேன் நானுமே தூங்கிவிட்டேன் அறுத்து கொண்டுடே
விட்டதையா

அடியேன் நானுமே முழித்துப் பார்த்தேன்
ஒருஇடமும் குதிரையைக் காணுதில்லை
குதிரையைக் காணோ மென்று சொல்ல

## இராமரின் ஆணை

153. கோபால ராம ரும்கோ பமதாய்
மறுதே சத்தைப் பார்த்தா யோடா
வம்பப் பயலே நீபோ ரனுமான்
ஏழு எட்டு நாளைக் குள்ளே
தெய்வப் புரவி வந்துசேரா விட்டால்
நாலுகோட் டைவாச லுக்கும் நாலு சந்தாகக் கிழித்துவைப்பேன்

## அனுமன் குதிரை கண்டு பாலகர்களிடம் வினவுதல்

154. என்று பெருமாளும் சொல்லிடவே இயலனுமான் நின்று
பரிதவித்தார்
அஞ்சி பதறியே போரனுமான் அதிக வனவாசம் தானோக்கி
மலைக ளென்றதோர் மலைகளெல்லாம் வாளனு மான்வன்
தேடிவாறான்
வாவிகள் சோலைகள் தன்னைவிட்டு மாயவர் தூதுவன்
தேடிவாறான்
சேவல் முனியுட வனமதிலே தெய்வக்குதி ரையினடி
யைக்கண்டான்
குதிரை யடிபார்த்து போரனுமான் கோபாலர் தூதுவன்
வாறபோது

அடிபார்த்து அனுமான் வாறபோது அரிநெடு மாலுட
பாலகர்கள்
குதிரைமீது பாலகர் ஏறிக்கொண்டு சேவல்முனி வனம்வேட்டை
யாடும்போது
தெய்வப்புரவியையனுமான் பார்த்து திருமால்தூ துவன்கோபங்
கொண்டான்
சுருக்காய் அனுமானும் ஓடிவந்து குதிரை முகவாரைத்
தான்பிடித்தான்
என்னடா சிறுபா லர்களே எங்கள் குதிரையை யேன்பிடித்தீர்

## குசலவர் அனுமனை அடித்தல்

155. என்று அனுமானும் சொன்னபோது என்பெரு மாளுட
பாலகர்கள்
அனுமானைப் பார்த்துநகைத் துக்கொண்டு அப்போது குசலவர்
ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி அசலவனே குரங்கும் குதிரைதான் ஏறிடுமோ
குரங்கும் நம்மோடே செயித்திடுமோ குரங்குக்கும் தம்பி
குதிரையுண்டோ
குதிரைக்குடை யவன்குதிரை கேட்டால் கொடுத்துவிடத்
தானேவே ணும்தம்பி
என்று சொல்லியந்தக் குசலவனும் என்பெருமாள் பாலர்
ஏதுசெய்தார்
குதிரைக் குறட்டாவைக் கையிலெடுத்து கொடுத்தாரே யனுமான்
செவிடதிலே

## அனுமன் தப்பி ஓடுதல்

156. அடித்த நல்ல அடியோடே அரிரா மருட தூதுவனும்
மேலே எடுத்தபுயம் நெரிந்து வாளனுமா னும்கலங்கி நின்றான்
அப்போது அந்த வாளனுமான் பாலரிரு பேரையும்பார்க்
கும்போது
வனத்தில் சீதையை வெட்டினாரோ வெட்டாமல் வனத்தில்
விட்டாரோ
என்ன காரண மென்றுசொல்லி எண்ணி யெண்ணியே
கவலைகொண்டான்
அடித்த யடிபொறுக்க மாட்டாமல் அந்தரம் தன்னிலேபதுங்
கிப்போனான்

இனிமேல் வனத்திலேநின் றோமானால் இப்போது நம்மைக்
கொன்றிடுவான்
இவனைவிட்டுத் தப்பிப்போ னோமானால் இடரு
நமக்கொன்றும் வராது
எங்கள் குதிரைதான் வேண்டாமையா என்று அனுமானும்
ஓடிவாறான்

## அனுமன் இராமரை அடைதல்

157. சேவல் முனிவனம் தன்னைவிட்டு திருமால் தூதுவனன்
ஓடிவாறான்
வாழும் அயோத்தியா புரிதனிலே வாளனு மானும்
வந்தல்லவோ
சிங்காசன மேடை யானதிலே சிரீராம சுவாமியும் அரசிருக்க
வைகுண்ட மூர்த்தியும் அரசிருக்க வாளனு மானும்சொல்
லுவானாம்
மாயா வுதாரனே கோபாலா தெய்வப்பெரு மாளேசொல்
லக்கேளும்

## தன்னை அடித்த பாலகரைப்பற்றிக் கூறுதல்

158. சேவல் முனியுட வனமதிலே குதிரை தேடிநான் போகும்போது
நம்முடைய தெய்வக் குதிரைதன்னை இரண்டு பாலகர்
தான்பிடித்து
வனத்தில் வேட்டை களாடிநின்றார் பாலகர்கள் இரண்டு
பேர்களுந்தான்
உம்மைப் போலொரு பாலகர்தான் உமதுதம்பியைப்
போலொரு பாலகர்தான்

## அனுமன் குசலவர் அடித்ததைக் கூறுதல்

159. திருச்சூர்ண நாமமும்சாத் தியிருக்கிறார் செங்கையில் வில்பிடித்
திருக்கிறார்
பச்சை நிறமுள்ள பாலகர்கள் பள்ளிப் பிள்ளைபோ
லிருக்கிறார்
தெள்ளு மணிபோலே பாலர்களைக் கண்டு அடியேனும்
நான்திகைத்து
அப்போது அங்கே நான்ஓடி குதிரை முகவாரைத்
தான்பிடிக்கும்

எங்கள் குதிரையை யேன்பிடித்தீர் என்று அதட்டிநான்
இழுத்தேனையா
அப்போது அந்தப்.பாலகர்கள் அடித்தாரே என்னைக்
குறட்டாலே
அடித்த அடியோடே ரெகுராமா அந்தரம் தன்னிலேபதுங்
கிப்போனேன்

## அனுமன் தன் திறம் கூறுதல்

160. மலையெடுத்தேன் ராமா கடலடைத்தேன் லச்சுமிக்குக்
கணையாழி நான்கொடுத்தேன்
இலங்காபுரி யெல்லாம் தீயெரித்தேன் இராவணனை
வெட்டிமார் பிளந்தேன்
லக்கண்ணை ரத்தம் பொட்டுமிட்டேன் இந்திர செயித்தோடு
போர்கள் செய்தேன்
மருத்து வாமலை பிடுங்கிவந்தேன் மயில்ரா வணனை
மார்பிளந்தேன்
ஒருநாளும் யிந்த அறை பட்டதில்லை உலகளந்த தெய்வப்
பெருமாளே
பாலகர்க்கு அடியேன் நான்பயந்து பச்சை நெடுமாலே
ஓடிவந்தேன்

## இராமர் இலக்குவனை வினவுதல்

161. என்று அனுமானும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
என்னுடைய தம்பி லச்சுமணா இளைய பெருமாளே தம்பியரே
வனத்தில் சீதைய வெட்டினாயோ வெட்டாமல் தான்தம்பி
வந்தாயோ
நம்முடைய பிள்ளை யானதினால் அனுமான் அறையது
தானும்பட்டான்
வேறே யொருவர் கையினாலே அனுமான் அறையது
படவுமாட்டான்
என்று பெருமாளும் சொன்னபோது இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்

## இலக்குவன் சீதையை வெட்டினேன் எனல்

162. ஒம்முடை யாதொரு சொல்படியே உலகளந் தோனேநான்
வெட்டிவந்தேன்
சீதா தேவியுட கற்பினையோ தெய்வப் பெருமாளே
அறியமாட்டேன்
அறுத்த தலையது பொருந்தினதோ அச்சுத ராமரே
அறியமாட்டேன்

## இராமன் ஐயுற்று அனுமனை அனுப்புதல்

163. என்று இளையோனும் சொன்னபோது என்பெருமாள் மாயன்
ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி லச்சுமணா வெட்டாமல் வனத்திலே
விட்டாலும்
ஒருபிள்ளை தானே உண்டுதம்பி ரெண்டு பிள்ளையென்று
சொல்லுகிறான்
வாரும் பிள்ளாயடா வாளனுமான் இன்னும் ஒருதரம்
நீபோவாய்
நம்முட குதிரையைப் பிடிக்கிறதும் விடமாட் டேனென்று
சொல்கிறதும்
அறிந்துவாரும் பிள்ளாய் போரனுமான் அரிய நெடுமாலும்
சொன்னபோது

## அனுமன் போக மறுத்தல்

164. என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வானந்த
வாளனுமான்
போகமாட்டேன் சுவாமி போகமாட்டேன் போனால் நானிங்கே
வரவுமாட்டேன்
இனிமேல் நானங்கே போகமாட்டேன் திரும்பி நானிங்கே
வரவுமாட்டேன்
அடியேன் ஒருபோதும் போகமாட்டேன் என்றடி தொழுதானே
போரனுமான்.

## அனுமன் அங்கதனுடன் சேவல்முனி வனம் செல்லல்

165. அருகில் நின்றதோர் அங்கதனும் அனுமானைப் பார்த்து
ஏதுசொல்வான்

இப்படிக்கு ஏண்டாய் புத்திகெட்டாய் நான்வறே னடாமைத்
துனனே
என்று சொன்னானந்த அங்கதனும் ஏதுசொல் வானந்த
வாளனுமான்
என்னுட மைத்துனா அங்கதனே பட்ட பாடுநீ அறியமாட்டாய்
பிள்ளைகள் அப்போது சொன்னசொல்லு பெருமூச் செறியுதே
எந்தனுக்கு
காட்டில் குதிரையை நினைக்கும்போது கால்கள் பதறுதே
அங்கதனே
பட்ட பாடுகளும் அறியாமல் பச்சமுகில் வண்ணர்
அனுப்புகிறார்
நம்மள் இருபேரையும் கொல்வதற்கு நமன் அங்கே இருக்கிறார்
அவனை உன்கண்ணில் காட்டிவிட்டு அடுத்த வனத்திலே
நின்றுகொள்வேன்
குதிரையை உன்கண்ணில் காட்டிவிட்டு கொடிய வனத்திலே
நின்றுகொள்வேன்
ஆகட்டு மென்று அங்கதனும் அரிநெடு மாலுட சொல்படியே
வாலி மகனுமே முன்னடக்க வாளனு மானும் பின்னடக்க
வனங்க ளென்றதோர் வனங்கடந்து சேவல் முனிவனம்
தானோக்கி
அனுமான் அங்கதன் வாறபோது மாயன் பாலகர் இருபேரும்
சேவல் முனிவனம்வேட் டையாடும்போது திருமால் தூதுவன்
கண்ணில்கண்டு
அப்போது துரை போரனுமான் அங்கதனைப் பார்த்து
ஏதுசொல்வான்
நம்முடைய தெய்வக் குதிரையது அதோ வருகுதுபார் அங்கதனே
குதிரை கேட்டுநீ வாங்கிவாராய் என்று அனுமானும்
இருந்துகொண்டான்.

## அங்கதனைக் குசலவர் அடித்தல்

166. நல்ல தென்று அங்கதனும் நகைத்துக் கொண்டானே
அனுமானை
அப்போது அந்த அங்கதனும் பாலகர் கிட்டே வந்துநின்று
என்ன டாசிறு பாலர்களே எங்கள் குதிரையை யேன்பிடித்தீர்
என்று அங்கதன் கேட்டபோது ஏதுசொல் வாரந்தக் குசலவரும்
முன்னே வந்த குரங்குக்குத்தான் மூப்பன் குரங்கு இதுவல்லவோ

முன்னே வந்த குரங்குக்குத்தான் முழுக்காப் பானது
கொடுத்துவிட்டோம்
இந்தக் குரங்குக்கும் கொடுக்கவேணும் என்னுடைய தம்பி
அசலவனே
குதிரைக் குடையவன் குதிரைகேட்டால் கொடுத்து விடத்தானே
வேணும்தம்பி
என்று சொல்லியே குசலவரும் எடுத்துரைத் தாரே அசலவர்க்கு
குதிரைக் குறட்டாவைக் கையிலெடுத்து கொடுத்தாரே அங்கதன்
செவிடதிலே
அடித்த அடியோடே அங்கதனும் அந்தரந் தன்னிலே
பதுங்கிப்போனான்
அப்போது குசலவர் அசலவரும் அரிநெடுமால் பாலர்
ஏதுசொல்வார்
அங்கதனை யவர்தான் பிடித்து குதிரைக் கடிவாளத்திலே
கெட்டிவைத்தார்

## அனுமானைக் கட்டி வைத்தல்

167. அங்கதன் படுகிற பாட்டைக்கண்டு அனுமான் எழுந்து
ஓடலுற்றான்
அப்போது அந்தப் பாலகர்கள் அனுமார் பேரிலே
குதிரைவிட்டார்
வாளனு மானைத் தான்பிடித்து குதிரைக் காலிலே
கட்டிவைத்தார்
அப்போது அந்தப் பாலகர்கள் சேவல் முனிவனம் வேட்டையாட

## இருவரையும் கட்டவிழ்த்துவிடல்

168. அனுமான் அங்கதன் இருபேரையும் தாறுமாறாச் செடிகிழித்
திடுமாம்
பின்னும் இரக்கம் வந்துகுசலவர்க்கு ஏதுசொல் வாரந்த
அசலவர்க்கு
குரங்கு வலிதம்பி பொல்லாதது குரங்கு வலிநமக்கு வந்துவிடும்
இனிவாற தெல்லாம் வரட்டுமென்று அனுமான் அங்கதனையும்
அவிழ்த்துவிட்டார்.

## இருவரும் தப்பியோடி நடந்ததை இராமரிடம் கூறல்

169. இனிப்பிழைத் தோம்பிழைத் தோமென்று அனுமான் அங்கதனும்
ஓடிவாறான்
கான வனங்களும் சோலைவிட்டு கல்லாறு புனலாறும் விட்டு
அயோத்தி மாநக ரானதிலே அரிநெடு மாலுட முன்பில்வந்தார்
சிங்காசன மேடை முன்பில்வந்து தெய்வப் பெருமாளை
அடிதொழுதார்
அச்சுத ராமரே கோபாலா அனுமான் சொன்னதில்
குற்றமில்லை
ஒம்மைப் போலே யொருபாலகர்தான் உமது தம்பியைப்போ
லொருபாலகர்தான்
செங்கையிலே வில்லு பிடித்திருக்கிறார் திருச்சூர்ண நாமம்
சாத்தியிருக்கிறார்
தெள்ளுமணி போலே பாலகர்கள் தெய்வக்குதி ரையின்மேல்
வேட்டையாடுகிறான்
அப்போது அடியேன் நான்ஓடி குதிரை முகவாரைத்
தான்பிடித்தேன்
எங்களை யவர்தான் பிடித்து குதிரைக் காலிலே
கெட்டிவைத்தார்
வனமதிலே வேட்டை யாடி வந்தாரே யந்தப் பாலகர்கள்
எங்களைச் செடியது தான்கிழித்து திரேகமெல் லாம்ரத்தம்
ஓடுதையா
பின்னுமிரக் கம்வந்துமே பாலகர்க்கு எங்களைக் கட்டவிழ்த்து
விட்டாரையா
இனிப்பிழைத் தோம்பிழைத் தோமென்று ஓடிவந்தோம் சுவாமி
உங்களிடம்
அவர்கள் பட்டதோர் பாட்டையெல்லாம் அங்கதன் சொல்லியே
தானமுதான்

## இராமர் வினவும் இலக்குவன் விடையும்

அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி லச்சுமணா இளைய பெருமாளே தம்பியரே
அனுமான் சொன்னதோர் சொல்படியே அங்கதனும் தம்பி
சொல்லுகிறான்

அனுமான் அங்கதனைச் செயித்தவன்தான் அப்பேர் பட்டதோர்
பாலகர்தான்
யாரு டையபா லர்களோ அழகாக பாலர் இருக்கிறாராம்
வனத்தில் சீதையை வெட்டினாயோ வெட்டாமல் தானேதம்பி
விட்டாயோ
உள்ளபடி சொல்லு லச்சுமணா ஒளியாம லெந்த னிடமதிலே
என்று பெருமாளும் கேட்டபோது இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்
வனத்திலென்னை வெட்டச் சொல்லிவிட்டு விட்டாயோ
வென்று கேட்கலாமோ
ஒம்முடைய சுவாமி சொல்படியே உலகளந் தோனேநான்
வெட்டிவந்தேன்
செங்கை நெடுமாலே கோபாலா சீதா தேவியுட கற்பினாலே
அறுத்த தலையது பொருந்தினதோ அறிய மாட்டேனே
கோபாலா

## இராமர் படைகளைத் திரட்டக் கூறல்

171. என்று இளையோனும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கொபாலர்
ஆனாலும் தம்பி லச்சுமணா நம்முட தூதனை அடித்ததினால்
நாமள் இருபேரும் போகவேணும் சேனைப் படைகளைச்
சேகரிப்பாய்
என்று சொன்னரே கோபாலர் இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்
நம்முடைய போரனு மானை இன்னும் ஒருதரம்
அனுப்பவேணும்
என்று இளையோனும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்

## மீண்டும் அனுமன் மறுத்தல்

172. வாரும் பிள்ளாயடா வாளனுமான் வார்த்தை நானொன்று
சொல்லக்கேளாய்
இன்னும் ஒருதரம் நீபோய்தான் மூன்று வார்த்தை
நீகேட்டுவாராய்
எங்கள் குதிரையை விடுகிறாயா இராமருக்குப் பெண்கொடுக்
கிறாயா

எங்களுடன் போருக்கு வாராயா என்று கேட்டுநீ வரவேணும்
என்று சொன்னாரே கோபாலர் ஏதுசொல் வானந்த
வாளனுமான்
போகமாட்டேன் சுவாமி போகமாட்டேன் போனால் நானிங்கே
வரவுமாட்டேன்
முன்னே ஒருதரம் நான்போய் முழுக்காப் பானது
வாங்கிவந்தேன்
பின்னு மொருதரம் நாங்களும்போய் பெருத்த அறையது
பட்டுவந்தோம்
இனிமேல் பாலகர் கண்ணால்கண்டால் என்னையும் அங்கே
கொன்றிடுவார்
போகமாட்டேன் சுவாமி போகமாட்டேன் போனால் நானிங்கே
வரவுமாட்டேன்

## மூன்று வார்த்தை கேட்கச் சொல்லல்

173. என்று சொன்னானே போரனுமான் ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
பாலகர் கிட்டே போகவேண்டாம் அடுத்த வனத்தில்
நின்றுகொண்டு
மூன்று வார்த்தைநீ கேட்டுக்கொண்டு சீக்கிரம் தன்னிலே
நீவருவாய்
என்று பெருமாளும் சொன்னபோது இயலனு மானும்
வழிநடந்தான்

## அனுமான் வனம் செல்லல்

174. அயோத்தி யாபுரி தன்னைவிட்டு வாளனு மானும் வழிநடந்தான்
இஞ்சி வனமும் தான்கடந்து இலுமிச் சம்தோப் தன்னைவிட்டு
தண்ட காருண்ய வனமதிலே தானே வந்தானே போரனுமான்
உச்சிமலை மேலே ஏறிக்கொண்டு உத்துப் பார்த்தானே
வனங்களெல்லாம்

## அனுமான் குதிரை கேட்க பாலகர்கள் தர மறுத்தல்

175. சீதா லச்சுமி பாலகர்கள் தெய்வப் புரவியின்மே
லேறிக்கொண்டு
குதிரைமீ தில்பாலகர் ஏறிக்கொண்டு சிறந்த வேட்டைக
ளாடுகிறார்

வேட்டையாடிப் பாலகர் வாறபோது இயலனு மானும்
ஏதுசொல்வான்
வாரு மையாசிறு பாலர்களே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்
எங்கள் குதிரையை விடுகிறாயா ராமருக்குப் பெண்கொடுக்
கிறாயா
எங்கள் குதிரையை விடாவிட்டால் எங்களுடன் போருக்கு
வாராயோ
என்று அனுமானும் கேட்டபோது ஏதுசொல் வாரந்தப்
பாலகர்கள்
உங்கள் குதிரையை விடுவதில்லை ராமருக்குப் பெண்கொடுப்
பதில்லை
சண்டை போருக்கு வாறதுண்டால் சலுதி யாகவே வாருங்கடா
என்று பாலகர் சொன்னபோது இயலனு மானும் வழிநடந்தான்
வனங்க ளென்ற வனங்களெல்லாம் வாளனு மானும்
தான்கடந்து
அயோத்தி மாநக ரானதிலே அரிகரி ராமர் முன்பாக
வாளனு மானும் வந்துநின்று மாயா உதாரனை யடிதொழுதான்

## அனுமான் நடந்ததைக் கூறல்

176. ஒம்முடைய சுவாமி சொல்படியே உலகளந் தோனேநான்
போனேனையா
தெய்வக் குதிரைமே லேறிக்கொண்டு சிறந்த வேட்டைக
ளாடிநின்றார்
அந்த வனத்திலே நான்போய் அச்சுத ராம்ரே கேட்டேனையா
எங்கள் குதிரையை விடுகிறாயோ ராமருக்குப் பெண்கொடுக்
கிறாயோ
எங்களுடன் போருக்கு வாராயோ என்று கேட்டேனே
கோபாலரே
அப்போது அந்தப் பாலகர்கள் ஆதர வாகவே ஏதுசொல்வார்
ஒங்கள் குதிரையை விடுவதில்லை பெண்ணும் நாங்கள்
தருவதில்லை
சண்டை போருக்கு வாறதுண்டால் சலுதி யாகவே வாருங்கடா
என்று சொல்லிவிட்டார் பாலகர்கள் எங்கள் பெருமாளே
கோபாலா

## இராமரின் சேனைகள் புறப்படுதல்

177. என்று அனுமானும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தக்
கோபாலர்
ஆனாலும் தம்பி லச்சுமணா நம்முட தூதனை அடித்ததினால்
நாமள் போருக்குப் போகவேணும் சேனைப் படைகளைச்
சேகரிப்பாய்
என்று பெருமாளும் சொன்னபோது இளைய பெருமாளும்
ஏதுசெய்தார்
எழுபது வெள்ளம் வானரத்தை இமைக்கு முன்னேயவர்
சேகரித்து
ஆவிந்தன் கோவிந்தன் சாம்புவனும் வாலி மகனந்த அங்கதனும்
செட்டி தட்டார்கள் ஒருகோடி துலக்கர் மலுக்கர் ஒருகோடி
இடைக் குலத்தோரும் வெள்ளாளரும் ஏற்ற வடுகரைச்
சேகரித்தார்
கன்னா டியர்மரட் டியர்கள் கம்ப ளத்தார் ஒருகோடி
இத்தனைப் படைகளும் சேகரித்து இளைய பெருமாளும்
ஏதுசொல்வார்
எழுபது வெள்ளம் சேனைகளே என்னுடைய அண்ணா
சேகரித்தேன்
என்று இளையோனும் சொன்னபோது ஏதுசெய் தாரந்தக்
கோபாலர்
போர்கள் செய்யவே வேணுமென்று பூமி யளந்தோனும்
தேரிலேற
பரதாழ் வானோடு சத்துருக்கன் மன்ன னிளையோனும்
தேரிலேற
சேனைப்படை யெல்லாம் ஒருபோல திடுதி டென்று
தான்எழுப்பிடுமாம்
சித்திரை மாதத்திலே சுழிக்காற்று வீசி னாப்போல்
அதிர வேட்டுச் சத்தங்களும் அண்ட மீரேழும் பொடிந்ததுபோல்
போரான ராமர் படை இருக்கு தையா ஒருமுகமாய்

## சேனைகள் வனங்கடந்து செல்லல்

178. வாகா னராமர்படை வருகு தையாஒரு முகமாய்
திண்ப முரசுகள் திமிலம்கொட்ட பம்பை வீணைகள்
அறையச்சொன்னார்
அரம்பையர் நாட்டியம் ஆடிவர அரிவை யர்கள்கும்மி பாடிவர

மத்தாளத் தோடே கைத்தாளம் வான ரங்களும் குரவையிட
வாழும் அயோத்தி யாபுரிகடந்து கோட்டை வாசலும்
தான்கடந்து
வனங்க ளென்றதோர் வனங்கடந்து சேவல் முனிவனம்
தானோக்கி
பாளையம் வருகிற திமிலோசை பன்னிரண்டு காதம்
கேட்குதல்லோ

## படை வருமுன் பாலகர்கள் சீதையை அடிதொழல்

179. அப்போது குசலவர் அசலவரும் அரிராமர் பாலகர்
கண்ணில்கண்டு
என்னுடைய தம்பி அசலவனே இன்னா பார்தம்பி
பாளையத்தை
எந்தத் தேசத்து ராசாக்களோ நம்மள் பேரில்படை
கொண்டுவாறார்
படைகள் தம்பி யிங்கே வருகும் முன்னே
நம்முடைய தாயார் சீதையிடம் விடைவாங்கித் தம்பி
வருவோமடா
என்று சொல்லியந்தக் குசலவனும் சுருக்காய் குதிரைதான்
தன்னைத்தட்டி
சேவல் முனிவனம் தன்னைவிட்டு வனங்க ளென்றதோர்
வனமுவிட்டு
வால்மீகர் மண்டபம் தன்னில்வந்து
குசலவர் அசலவர் இருபேரும் கொடியிடைச் சீதையை
அடிதொழுதார்
என்தாயே அம்மா லச்சுமியே இளமயிலே தாயே
சொல்லக்கேளும்
எந்தத் தேசத்து ராசாவோ எங்கள் பேரில்பட வந்திருக்கு
அம்பும் வில்லும்தாயே கெதியுமில்லை ஆயுத பாணிகள்
ஒன்றுமில்லை

## சீதை மனம் வருந்தி குதிரையை விடச்சொல்லல்

180. என்று பாலகர் சொன்னபோது ஏதுசொல் வாளந்த லச்சுமியும்
முன்னமே ஒன்னிடம் சொல்லலையோ என்மகனே அய்யா
குசலவனே
குதிரையை நீயும் விட்டுவிட்டு குசலவா யிங்கே வாருமென்றேன்
என்பேச்சை நீகேட் டாயில்லை என்மகனே எந்தன் கண்மணியே

எந்தத் தேசத்து ராசாக்களோ இப்போது படைகூட்டி வந்துதான்
அம்பு வில்லுகள் ஒன்றுமில்லை பாலகர்க்கு ஒருவர்
துணையுமில்லை
படைபோர் செய்யயிங்கே ஆளுமில்லை பாலகர்க்கு ஒருவர்
துணையுமில்லை
என்று சொல்லியே லச்சுமியும் ஏந்திழை யாளம்மன்
பரிதவித்தாள்
பரிதவித்தாள் சீதை கவலைவைத்தாள் பத்தினி யாள்முகம்
வாடிவிட்டாள்.

•

## அடிதொழுது மாமுனியிடம் வரம்பெற்றுப் புறப்படுதல்

181. பதறாதே பதறாதே என்மகனே பள்ளிகொண்டோன் உனக்குத்
துணைவருவார்
என்று சொல்லி மகாலச்சுமியாள் ஏந்திழை யானவள்
ஏதுசொல்வாள்
மாமுனி வரிடத் திலேபோய் வரம்வாங்கிப் போங்களென்று
சொல்லி
மகாலச் சுமிபா லர்களை மாமுனி யிடத்துக் கூட்டிப்போனாள்
மாய வருட பாலகர்கள் மாமுனியை வந்தடி தொழுதார்
அடிதொழுத அந்தப் பாலகர்க்கு அவரும் வாழ்த்தியே
விடைகொடுத்தார்
பாணங்களைத் தான்வாங்கிப் பச்சமுகில் வண்ணர் பாலகர்கள்
பைங்கொடி சீதையை யடிதொழுது பாலகர்கள் நிற்கும்
வேளையிலே
அப்போது மகாலச் சுமியும் அந்தப் பாலகர் இருபேருக்கும்
சீனி சிங்கமோடு பால்பழமும் திரட்டிக் கொடுத்தாளே
பாலகர்க்கு
உண்டு பசியாறி பாலகர்கள் சீதா தேவியை யடிதொழுதார்
அடிதொழுத பாலகர்க்கு அவளும் வாழ்த்தியே
விடை கொடுத்தாள்
குதிரைமீதில் பாலர் ஏறிக்கொண்டு வால்மீகர் மண்டபம்
தன்னைவிட்டு

## பாலகர்கள் குதிரையில் செல்லல்

182. வனங் ளென்றதோர் வனங்கடந்து வாறாரே யந்தப் பாலகர்கள்
சேவல் முனியுட வனம்திலே சீதை பாலகர் தானேவந்தார்
அப்போது அந்த வாளனுமான் அரிநெடு மாலுடன்
ஏதுசொல்வான்
எங்கள் பெருமாளே கோபாலா ஏழைப் பங்காளா
சொல்லக்கேளும்
நம்முடைய தெய்வக் குதிரைதன்னை அதோ பாலக ரேறி
வாறார்

## இராமர் பாலகரிடம் வினவல்

183. என்று அனுமானும் சொன்னபோது ஏழைப் பங்காளனும்
ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி லச்சுமணா இளைய பெருமாளே தம்பியரே
நம்முட குதிரையைப் பிடித்ததுதான் அனுமான் சொன்னதில்
குற்றமில்லை
நம்மள் குலம்போல தோணுதடா குலம்கேட்டுப் போரது
செய்யவேணும்
என்று பெருமாளும் சொல்லிக்கொண்டு ஏதுசொல் வாரந்தப்
பாலருடன்
வாருங்கள் நீங்கள் பாலர்களே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்
நீங்க ளிருக்கிறது எந்தஊரு என்று கேட்டாரே கோபாலர்
தாய்தகப் பன்பேர் சொல்லுமென்று தரணி யளந்தோனும்
கேட்டபோது

## இருவரும் போர் தொடுத்தல்

184. அப்போது அந்தப் பாலகர்கள் அச்சுத ராமருக்கு ஏதுசொல்வார்
ஊரும் பேரும்தான் கேட்பதற்கோ உற்ற களத்திலே யிங்குவந்தீர்
குலம்கேட்டுப் பெண்யெடுப்பதற்கோ கூட்டி வந்தீர்கள்
யிந்தப்படை
குதிரையை ஒருபோதும் விடுவதில்லை ஓடிப்போங் கள்உங்கள்
ஊர்தனக்கு
அஸ்திரம் வருகுது ராசாவே ஓடிப்போங் கள்உங்கள் ஊர்தனக்கு
என்று பாலகர் சொன்னபோது ஏதுசெய் தாரந்தக் கோபாலர்
ஐந்து முனைக்கோடி அம்பெடுத்து அச்சுத ராமரும்
சரந்தொடுத்தார்
மழைமாரி சரமாரியாக மாயவ ராமரும் சரந் தொடுத்தார்

## அம்பின் வளைவு

185. வருகிற தொருபாண மெல்லாம் மாயவர் பாலரைக்
கண்டபோது
குசலவர் அசலவர் முன்னேவந்து குப்புற அடித்துமே
விழுந்திடுமாம்
குசலவர் விடுகிற பாணமெல்லாம் கோபால மூர்த்தி
யானவர்க்கு
திருமுடி யிலேபூ வாகச் சிதறி விழுந்திடும் கோபாலர்க்கு
இப்படியாய்ப் போர்கள் செய்தல்லவோ ஒருவர்க்
கொருவர்தான் தோர்வையில்லை
ஒருகோ தண்ட மணியடித்தால் ஒருகோடிப் படைதா விழக்கும்
இந்தப் போரது ஆனதிலே இவர்கள் விடுகிற சரபாணம்
ஏழு நாழிகை யாகுமட்டும் இடைவிடா மல்மணி யடித்திடுமாம்
இப்படிப் போரது செய்தல்லவோ இருபேர் படையது
தோர்வையில்லை
எய்து சடைத்தல்லவோ கோபாலர் என்பெரு மாளும்
தானிருந்தார்
வாடவில்லை யந்தப் பாலகர்கள் மயங்கவில்லை சற்றும்
பதறவில்லை
அப்போது அந்தப் பாலகர்கள் அரிராமர் பேரிலே
சரந்தொடுத்தார்
அக்கினி அஸ்திரம் கையிலெடுத்து குசலவர் சுவாமியும்
தொடுத்துவிட்டார்

## அம்பு கூட்டில் அடைபடல்

186. அந்தப் பாணமும் வில்லைவிட்டு அக்கினிக் கொழுந்துடன்
வருகுதிங்கே
வருகிற பாணத்தை யெட்டிப்பார்த்து மாயா வதாரனும்
பரிதவித்தார்
பாணம் சுரூபத்தை அடக்கிக்கொண்டு பள்ளிகொண்
டோனைவந்து நமஸ்கரிக்க
அக்கோப மாக வந்தபாணம் சுவாமி அம்புறாக்
கூட்டிலேஅடைபடுமாம்

## இராமர் சாபமிட்டு இராமபாணம் தொடுத்தல்

187. பாணம் வந்து அடைபட்டபோது பச்சமுகில் வண்ணர்
கோபாலரும்
மூன்று முனைக்கோடி அம்பெடுத்து முக்கண்ணர் சுவாமியும்
தொடுத்துவிட்டார்
இராம பாணத்தைக் கையிலெடுத்து இராமலிங்கப் பூசை
தான்தொழுதார்
பாலகர் சிரசிற்குச் சரியாய்வைத்து பள்ளி கொண்டோனும்
ஏதுசொல்வார்
வாரு மடாசிறு பாலர்களே வார்த்தை நானொன்று
சொல்லக்கேளும்
உன்னைப் போருக்கு விட்டுப்போட்டு உங்கள் தாய்தகப்பன்
இருக்கிறாரே
என்னுடன் போருக்கு வந்தபேர்கள் யாரொ ருவரும்
பிழைக்கமாட்டார்
எங்கள் குதிரையை விட்டுப்போட்டு ஓங்கள் ஊருக்குப்
போங்களடா
என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வாரந்தப்
பாலகர்கள்
குதிரையை நாங்கள் விடுவதில்லை ஒன்னால் ஆகுமட்டும்
பாருமென்றார்
என்று பாலகர் சொன்னபோது என்பெரு மாளும்
கோபங்கொண்டு
இராம பாணத்தைக் கையிலெடுத்து நாராயண மூர்த்தி
தொடுத்துவிட்டார்
வருகுது பார் கிடுகிடென்று மண்ணும் விண்ணும் தானதிர
வாய்பிளந்து பாணம் சீறிக்கொண்டு வருகுதே யந்த ராமபாணம்

## இராம பாணமும் வந்து கூட்டில் அடைதல்

188. வாய்பிளந்து வந்த பாணமது மாயவர் பாலகர் என்றறிந்து
குசலவர் அசலவர் தன்னைச்சுத்தி கல்லும் கருமலை
தன்னைச்சுத்தி
கல்லும் கருமலை தன்னைச்சுத்தி கார்வண்ண ராமருட
பாணமது
அரிரா மருட பாணமது அந்தரந் தன்னிலே தான்பறந்து
திருப்பாற் கடலிலே தீர்த்தமாடி சுவாமியம்புறாக் கூட்டிலே
அடைபடுமாம்

## குசலவரைப் பிடிக்க வருதல்

189. இராம சுவாமியும் கண்ணில்கண்டு லச்சு மணர்க்கு
ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி லச்சுமணா பாணத் திலிவனை
வெல்லப்போகாது
ஒருவனுக்கும் பொய்க்காத பாணமது இவனுக்குப் பொய்த்துப்
போச்சுதடா
உயிரோடே அவனைப் பிடிக்கவேணும் உற்ற கழுவிலே
போடவேணும்
வளைத்துப் பிடித்தந்தப் பாலகரை வாழும் அயோத்தியில்
கொண்டுபோய்
வாழும் சனமெல்லாம் தானறிய வாய்த்த கழுவிலே
போடவேணும்
என்று பெருமாளும் சொன்னபோது இளைய பெருமாளுடன்
பரதாழ்வான்
வளைத்துப் பிடிக்கவே வேணுமென்று வாளனு மானுடன்
சுத்திவந்தான்
உச்சியிலே சிலர்கையை வைத்து ஓடி வந்துமே பிடிக்கவந்தான்
குசலவர் அசலவர் இருபேரையும் பிடிக்கச் சுத்தியே
தான்வளைந்தார்

## பாலகர் சீதையிடம் வருதல்

190. பாளையம் கிட்டகிட்ட நெருங்கும்போது பாலர் இருபேரும்
ஏதுசொல்வார்
என்னுடைய தம்பி அசலவனே பாளையம் யிங்கே
வருகுமுன்னே
நம்முடைய தாயார் சீதையிடம் விடைவாங்கித் தம்பி
வருவோமடா
என்று சொல்லியந்தப் பாலகர்கள் சீதா லச்சுமியை
மனதிலெண்ணி
பாளையம் கிட்ட நெருங்குமுன்னே யுத்தப் படுகளம்
தன்னைவிட்டு
தாயார் வீர லச்சுமியைத் தானே வந்தவர் அடிதொழுதார்

## சீதை மணிமாலை தருதல்

191. அடிதொழுது பாலர் நிற்கும்போது ஆயிழை யாள்வீர
லச்சுமியும்
கற்பு மணிமாலை தான்கழற்றிக் கனியெறிந் தோன்தேவி
ஏதுசொல்வாள்
எனக்கு ராமர்துரோ கம்செய்தாலும் ராமருக்கு நான்துரோ
கம்செய்தாலும்
கற்பு மணிமாலை போதுமென்று கனியெறிந் தோனும்
சொன்னதுண்டு
உங்களய்யா ராமர் கையினாலே இந்தமாலை என்கழுத்தில்
போட்டதுண்டு
என்று சொல்லி மகாலச்சுமியும் ஏந்திழை யானவள்
ஏதுசொல்வாள்
கற்பு மணிமாலை தந்திரங்கள் கனியெறிந் தோன்தேவி
சொல்லுவாளாம்
என்மகனே அப்பா குசலவனே கற்பு மணிமாலை கண்டவர்கள்
கண்ணில் கண்டதோர் பேர்களெல்லாம் களத்தில் மயங்கியே
விழுந்திடுவார்
பாளையம் மோகித்து வரும்போது படுகளத்திலே நின்று
கொண்டு
அசலவன் யிடதுகண்ணைப் பொத்தச்சொல்லி வலத்தேசுத்
தியிடத்தே வீசிப்போடு
தம்பி கண்ணையும் பொத்திக்கொண்டு தன்னுட கண்ணையும்
பொத்திக்கொண்டு
எறிந்து விடுஎன் மகனே இந்த மணிமாலை தன்னைச்சுத்தி
வந்த வந்த படைகளெல்லாம் மயங்கிப் போவார்கள்
யென்மகனே

## இருவரும் போர் செய்தல்

192. என்று சொல்லியே ல்ச்சுமியும் என்பெரு மாள்தேவி
விடைகொடுத்தாள்
குதிரை மீதில்பாலர் ஏறிக்கொண்டு வால்மீகர் மண்டபம்
தன்னைவிட்டு
சேவல் முனியுட வனமதிலே சீதை பாலகர் தானேவந்தார்
அப்போது அந்தப் பாலகர்கள் வந்தாரே போர்க்கள மானதிலே
போர்கள் செய்துகொண்டு நிற்கையிலே பூமி யளந்தோனுட
படைகளெல்லாம்

பிடிக்க வந்துமே வளையும்போது குசலவர் அசலவர் இருபேரும்
கற்பு மணிமாலை கையிலெடுத்து சீதா லச்சுமி சொல்படியே
அசலவன் கண்ணையும் பொத்தச்சொல்லி குசலவன் மாலை
வீசலுற்றான்

## மாலைவீசி மயங்கச்செய்தல்

193. வந்து வளைந்ததோர் பாளையத்தில் வலத்தேசுத் தியிடத்தே
வீசிவிட்டான்
கற்பு மணிமாலை ஒளிவதைத்தான் கார்வண்ணர் பாளையம்
கண்ணில்கண்டு
வந்து வளைந்ததோர் படைகளெல்லாம் மகாலச் சுமிகற்
பினாலே
வந்து வளைந்ததோர் படைகளெல்லாம் மயங்கிப் போனாரே
போர்க்களத்தில்
எழுபது வெள்ளமும் மயங்கிப்போச்சு இளைய பெருமாளும்
மூர்ச்சையானார்
பரதாழ் வானோடு சத்துருக்கன் பள்ளி கொண்டோனும்
மூர்ச்சையானார்
அப்பொது குசலவர் அசலவரும் அரிநெடுமால் பாலர்
ஏதுசொல்வார்
என்னுடைய அண்ணா குசலவனே நம்முடைய தோர்கை.
மாலையாலே

## பாலகர்கள் கிரீடங்களை எடுத்துக்கொண்டு புறப்படல்

194. வந்த வந்த ராசாக்களும் மயங்கிப் போனாரே களமதிலே
மாண்டதொரு அண்ணா பாளையத்தில் மயக்கம் யிருந்தாக்கால்
குசலவனே
தாயார்க் கடையாளம் கொண்டுபோவோம் என்று
சொல்லியந்தப் பாலகர்கள்
மயங்கின பாளையத்தைப் பார்க்கும்போது ராசாக்கள்
தரித்ததோர் கிரீடங்களைக்
கிரிட.ங் களைத்தா னெடுத்துக் குதிரையில் மூட்டையாய்க்
கட்டிவைத்து
அசலவர்க்கு ஒருபுரவி பார்த்து அவர்கள் இருபேரும்
வருகையிலே
வாளனு மானுடன் சாம்புவனும் அடிக்கடி யவர்மூச் செறிந்து

இவர்கள் வருவதைக் கண்ணில்கண்டு ஏற்ற நெடுமூச்சு
தானேவிட்டார்
பாலர் இருபேரையும் கண்டபோது பம்மிப் படுத்தாரே
களமதிலே
இந்தக் கோபத்தில் கண்டதுண்டால் இருபே ரையும்கொன்
றிடுவார்
பின்னே ஒன்றும்நாமள் எண்ணவேண்டாம் பெரும்புலி யல்லோ
யிருபேரும்
எத்தனைத் தேசங்கள் பார்த்தாலும் இவர்களைப் போலேநான்
கண்டதில்லை

## அனுமான், சாம்புவான் இருவரையும் பிடித்துவரல்

195. என்று சொல்லியே வாளனுமான் ஏது செய்தானே களமதிலே
மனதில் கவடாக வாளனுமான் மானிடவர் போலே
தான்கிடந்தான்
இவர்கள் விடுகிற மூச்சைக்கண்டு என்பெருமாள் பாலர்
ஏதுசெய்தார்
அப்போது குசலவர் அசலவரும் அனுமார் சாம்புவரைத்
தான்பிடித்து
குதிரைக் காலிலே கட்டிவைத்து குதிரையில் சவாரி
ஏறிக்கொண்டு
வால்மீகர் மண்டபம் தானோக்கி வாறாரே யந்தப் பாலகர்கள்
யுத்தப் படுகளம் தன்னைவிட்டுத் தண்ட காருண்ய வனமதிலே
தண்ட காருண்ய வனமதிலே சானகி மண்டபம் தன்னில்வந்தார்

## சீதை அனுமானைப் பார்த்தல்

196. மாயன் பாலகர் இருபேரும் மகாலச் சுமியை யடிதொழுதார்
என்தாயே அம்மா லச்சுமியே எனைவளர்த் ததோர் மாதாவே
ஒன்னுடைய தாயே கிருபையினால் உற்ற மாலையால்
மயக்கிவிட்டோம்
வந்த வந்த படைகளெல்லாம் மயங்கிப் போனாரம்மா
களமதிலே
பொன்மணிக் கிரீடம் எடுத்துக்கொண்டு ஒன்னுட அவஸ்திரம்
தன்னில்வந்தோம்
அப்போது வீர லச்சுமியாள் அனுமானைச் சீதை
கண்ணில்கண்டாள்

அனுமான் சாம்புவரைக் கண்டபோது ஆயிழைச் சீதையும்
தானழுதாள்
அனுமாரே யிதுவென்ன காரணமோ அய்யோ மகனே
என்அனுமாரே
இலங்கைப் பெருங்கடல் தாண்டினதோர் பலன்கள் எங்கேதான்
போச்சுதடா
எந்தன் பாலகர்க் கடங்கிவந்தாய் என்றுசொல்லிச் சீதை
பரிதவித்தாள்

## அனுமான் கூறுதல்.

197. அப்போது அந்த வாளனுமான் அன்ன லச்சுமிக்கு
ஏதுசொல்வான்
இராமசுவாமி நந்த கோபாலர் அசுவதி யாகம் செய்யவென்று
குதிரையிலே வீரப் பட்டம்கட்டி வையகத்திலே குதிரை விட்டார்
விட்ட குதிரையைத் தான்பிடித்துப் பாலகர்கள் கட்டிக்
கொண்டாரம்மா
அடியேனும் குதிரை தனைத்தேடி குதிரையை வந்து
கேட்டேனம்மா
அப்போது யிந்தப் பாலகர்கள் அடித்தாரே என்னைக்
குறட்டாலே
அலறி யம்மா நான்ஓடி அச்சுத ரிடத்திலே சொன்னேனம்மா
சொன்ன பொழுதிலே ரெகுராமர் சுவாமி நாயகர் ஏதுசெய்தார்
ராமசுவா மியோடு லச்சுமணர் நல்ல பரதாழ்வான் சத்துருக்கன்
எழுபது வெள்ளம் சேனையோடு இருபத்தி நாலு
படைத்தலைவர்
ஆவிந்தன் கோவிந்தன் சாம்புவனும் வாலி மகனந்த அங்கதனும்
வாலி தம்பி சுக்கிரீவன் எதிர்த்துச் சண்டை செய்தாரம்மா
ஒன்னுடைய தாயே கற்பினாலே உலகளந் தோனும்
மயங்கிப்போனார்
எழுபது வெள்ளமும் கொன்றார்கள் இளைய பெருமாளும்
மூர்ச்சையானார்

## சீதை பாலகர்களிடம் புலம்புதல்

198. எங்களைப் பிடித்தவர் கட்டிக்கொண்டு உன்னிடத்தில் கொண்டு
வந்தாரம்மா
என்று அனுமானும் சொன்னபோது இளமயில் சீதையும்
பரிதவித்தாள்

அங்கம் பறக்குதே ரெகுராமா ஆத்துமம் சோருதே எந்தனக்கு
இனிமேல் நானென்ன செய்யப்போறேன் என்றுசொல்லிச் சீதை
தானழுதாள்
தந்தை தன்னைக் கொல்வதற்கோ எந்தன் வயிற்றிலே நீபிறந்தாய்
வில்லுமுனையில் கொல்லும் ராசாக்கள் வல்லமையாய்க்
கொல்லத் துணிந்தீர்கள்
முன்செய்த தீவினையோ முதல்செய்த பொல்லாங்கோ
பின்செய்த தீவினையோ பிழைகள் யிப்படி சேர்ந்ததுதான்
இன்னும் வனத்திலே யிருப்பதற்கோ எழுதி விட்டாரே
பிரமதேவன்
நம்மள் ராசாவைக் கொல்வதற்கோ நான்வளர்த் தேன்பா
லர்களே
நானும் பூமியில் இருக்கணுமோ நாடோ லம்யிட ஆனேனே
எந்தன் வாணாளைப் போக்கிடுவேன் என்று சீதையும்
சொன்னபோது

## தாயாரின் துயர்கண்டு மனம் வருந்துதல்

199. தாயார் படுகிற துயரம்கண்டு சுவாமி பாலகர் இருபேரும்
அய்யா வென்றுதாயே அறிந்தோமானால் அடிதொழு துமேநின்
றிடுவோம்
அய்யாவை நாங்கள் கொன்றதினால் அன்னமே தாயே
யிருப்பதில்லை
ஆற்றிலே நானும் தான்விழுந்து அன்னமே நானும்
யிறந்துபோவேன்
என்று குசலவன் சொன்னபோது என்பெருமாள் தேவி
பரிதவித்தாள்
பாதாள லோகம் போனதொரு அய்யா வால்மீகரைக்
காணோமே
முன்னே செய்த பாவமிதோ இன்னமும் சுவாமிக்கு யிடராச்சே
என்று சீதையும் நினைக்கும்போது இயல்முனி வரும்தா னறிந்து

## வால்மீகி வருதல்

200. அனுமானைச் சீதை கண்ணில்கண்டு அழுது திகைத்துமே
வாடுகிறாள்
திடுக்கென்று வால்மீகர் எழுந்திருந்து செய்தி அறியவே
வேணுமென்று

வருணனிடத்திலே சிலவு பெற்று பாதாள லோகம் தன்னைவிட்டு
தண்ட காருண்ய வனமதிலே தானே வந்தாரே வால்மீகரும்

## வால்மீகியிடம் சீதை நடந்ததைக் கூறல்

201. என்மகளே சீதா லச்சுமியே என்னை நினைத்ததைச் சொல்லுமென்றார்
என்று வால்மீகர் கேட்டபோது ஏதுசொல் வாள்மகா லச்சுமியாள்
தந்தை தன்னைக் கொல்வதற்கோ கோடி வித்தைகள் சொன்னீரையா
பாதாள லோகம் போனபின்பு பாலகர்கள் ரெண்டு பேர்களுந்தான்
வந்த படையோடு பாலகர்கள் வகையுடனே சண்டை செய்தாரையா
சண்டை நெருங்கி வரும்போது பாலகர்கள் யிங்கே ஓடிவந்தார்
ஓடி வந்ததொரு நிலைமைகண்டு உலகளந்தோன் வந்தசெய்தி அறியாமல்
கற்பு மணிமாலை தான்கழற்றி பாதகத்தி நான்கையில் கொடுத்தேன்
கொடுத்த வுடனேதான் பாலகர்கள் கோபால ராமருடன் போர்கள் செய்தார்
போர்கள் செய்துகொண்டு நிற்கையிலே குசலவன் மாலைசுற்றி வீசிவிட்டான்
கற்பு மணிமாலை ஒளிவுகண்டு கனியெறிந் தோனும்மயங்கிவிட்டார்
இளைய பெருமாளும் மயங்கிவிட்டார் எழுபது வெள்ளமும் மயங்கிப்போச்சு
அப்போது குசலவர் அசலவரும் அந்தப் படுகளம் சுற்றிப்பார்த்து
ராசாக்கள் பூண்டிருந்த கிரீடங்களை எடுத்துக்கொண்டு யிங்கே வந்தாரையா
மாணிக்கக் கிரீடம் தானெடுத்துப் பாலகர்கள் கொண்டு வந்தாரையா
அனுமான் சாம்புவன் யிருபேரையும் கட்டிக் கொண்டுயிங்கே வந்தாரையா

## சீதை இராமரை எழுப்ப நினைத்தல்

202. என்பாவம் இன்னும் தீரவில்லை எனக்கு யிடந்தந்த மாமுனியே
இனிமேல் நானென்ன செய்யப்போறேன் என்றுசொல்லிச் சீதை
தானழுதாள்
முத்துப் போலே கண்ணீரை முகமெல்லாம் அம்மை
சோரவிட்டாள்
பவளம் போலே கண்ணீரைப் பக்க மெல்லாம் சோரவிட்டாள்
அரிராம சுவாமியை எழுப்புதற்கு அய்யா வேயினி வரவேணும்
அசல வனுடவர லாற்றை அருள்முனியே நீர்தான்
சொல்லவேணும்
அமர்களத் துக்குப் போவோம்வாரும் என்று சீதையும்
சொன்னபோது
அஞ்ச வேண்டாம் வீரலச்சுமியே அமர்களத்தைப் பார்க்கப்
போவோம்
மூர்ச்சையாய் விழுந்த ராமர்தன்னை அன்னமே தாயே
பார்க்கவாரும்
என்று சொன்னாரே வால்மீகரும் இளமயிலாள் வீர லச்சுமியும்
அய்யா வென்றுசீதை சொன்னபோது அந்தப் பாலகர்
இருபேரும்
குசலவர் அசலவர் இருபேரும் குதிரையைக் கையிலே
தான்பிடித்து

## வனம் சென்று இராமர் நிலைகண்டு புலம்பல்

203. வால்மீக ரோடு லச்சுமியும் மங்கை பத்திர காளியுமாய்
வால்மீகர் மண்டபம் தன்னைவிட்டு தண்ட காருண்ய
வனங்கடந்து
வந்தாளே போர்க்கள மானதிலே மன்னன் சனகரன்
திருமகள்தான்
சிரீராமருட மயக்கம் கண்டு மயங்கித் தயங்கியே லச்சுமியும்
பூமியில் விழுநதல்லோ லச்சுமியும் புலம்புவாள் சிரீராமர்
பேரில்
அய்யோ நானினி என்னசெய்வேன் அங்கம் பறக்குதே
ரெகுராமா
அங்கம் பறக்குதே ரெகுராமா ஆத்துமம் சோருதே கோபாலா
இராவணன் கும்ப கர்ணனைத்தான் செயித்த வலுமைதான்
எங்கேபோச்சு

ஆலில் நித்திரை செய்ததுபோல் அமர்களத் திலேதூங் குகிறீர்,
படுத்தறி யாய்யிளை யோனே படுத்துத் தூங்குகிறீர் களமதிலே
முகங்க ளெல்லாம் தான்சிவந்து மூர்ச்சை யானீரோ லச்சுமணா
வனத்தில் பதினாலு வருடமட்டும் வருடாதொரு நித்திரையோ
களத்தில் படுத்துமே தூங்குதற்குக் கட்டிலும் பஞ்சி மெத்தையோதான்
குசல வனுட வாளினாலே மயங்கி விழுந்தீரோ இளையோனே
என்று சொல்லி மகாலச்சுமியாள் ஏந்திழை யானவள் தானழுதாள்
வாருமையா சுவாமி வால்மீகரே வைகுண்ட நாதரை எழுப்புமையா

## குசலவன் மாலையைச் சுழற்றி வீசுதல்

204. என்று லச்சுமியும் சொன்னபோது ஏதுசொல் வார்ந்த வால்மீகரும்
அப்போது அந்த மாமுனியும் குசலவர் அசலவர்க்கேது சொல்வார்
கற்பு சூடாமணி மாலைதன்னை இடத்தே சுற்றிவலத்தே வீசுமென்றார்
அருள்முனி யவர்சொன்ன போது அதிசீக் கிரத்தில் குசலவனும்
அசலவன் வலதுகண்ணைப் பொத்தச்சொல்லி குசலவன் யிடது கையாலே
மயங்கி விழுந்ததோர் பாளையத்தில் இடத்தேசுத்தி வலத்தே வீசிவிட்டான்

## இராமர் விழித்தெழுதல்

205. கற்பு மணிமாலை ஒளிவதுதான் மயங்கின பாளையத்தில் ஊடுருவி
ஆலிலையில் துயின்றெழுந் தாற்போல் அச்சுத ராமரும் முழித்தெழுந்தார்
பரதாழ் வானோடு சத்துருக்கன் மன்னனிளை யோனும் முழித்தெழுந்தார்
சேனை படையெல்லாம் முழித்தெழுந்து சிரீராம சுவாமியை யடிதொழுதார்
மகாலச்சுமி பால கர்கள் வந்தடி தொழுதாரே ராமரைத்தான்
ஏறிட்டுப் பார்த்தாரே ரெகுராமர் எங்கள் பெருமாளும் ஏதுசெய்தார்

## இராமர் வினவுதல்

206. ஒருபிள்ளைக் கிரண்டு பிள்ளைகண்டு உலகளந்தோன்
முகம்மாற வைத்தார்
அப்போது வீர லச்சுமியாள் அன்னை சூடாமணி
ஏதுசொல்வாள்
எங்கள் பெருமாளெ கோபாலா எந்தன் கற்புநிலை
அழிந்ததுண்டால்
இந்தப்பிள்ளை சுவாமி உமக்கெதிரோ என்றடி தொழுதாளே
லச்சமியாள்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்
சூரிய குலவம் சத்தில் ஒருபிள்ளை தர்னே உண்டுபெண்ணே
பிள்ளை ரெண்டு உனக்கேது என்று பெருமாளும் கேட்டபோது

## சீதையின் விடை

207. அப்போது மகாலச் சுமியாள் அன்னை சூடாமணி
ஏதுசொல்வாள்
உலகளந் தோனுக்குப் பிறந்தபிள்ளை குசலவன்தான் சுவாமி
இவனொருவன்
தெர்ப்பையிலே சுவாமி பிறந்தவன்தான் அசலவ னென்று
யிவனொருவன்
அருள்முனி யிடத்திலே கேளுமென்று அன்ன லச்சுமியும்
சொன்னபோது
அப்போது வால்மீகர் ஓடிவந்து அச்சுத ராமருக்கு
ஏதுசொல்வார்

## வால்மிகர் அசலவனின் பிறப்பை எடுத்துரைத்தல்

208. அசலவன் பிறந்த பிறப்தை அரிநெடு மாலுடன் சொல்லுவாராம்
ஓம்முடைய பாலன் குசலவரை தொட்டிலில் ராமா
கிடத்திவிட்டு
லச்சுமி தண்ணீர் கோரப்போனாள் நாராயண மூர்த்தி
கேளுமினி
கெங்கை கோரப்போன லச்சுமியாள் கிளிமொழி யாளும்
திரும்பிவந்து
திரும்பி வந்துமே பாலகரைச் சீதா லச்சுமி கொண்டுபோனாள்

தொட்டிலை ராமா வந்துபார்த்தேன் சீதை கொண்டு
போனதுதெரியாமல்
கடுவாய் புலியது கொண்டுபோச்சோ காட்டானை சிங்கம்
கொண்டுபோச்சோ
கன்னியர் சீதைக்கு என்னசொல்வேன் என்று சொல்லியே
நான்பயஃந்து
கையில் கிடந்ததோர் தெர்ப்பைதன்னைக் கழற்றித்
தொட்டில்போட்டாட்டிவிட்டேன்
கறைக்கண் டனாருட செயலாலே இந்தப்பிள்ளை ராமா
உண்டாச்சி
கெங்கை கோரப்போன லச்சுமியாள் இந்தப்பிள்ளை ஏதென்று
தான்கேட்டாள்
பிள்ளை கொண்டு போனதுதெரியாமல் பொன்மகளே தாயே
நான்பயந்து
கடுவாய் புலியது கொண்டுபோச்சோ காட்டானை சிங்கம்
கொண்டுபோச்சோ
தெர்ப்பை கொய்துபோட் டாட்டிவிட்டேன் வந்து பிறந்ததையா
யொருகுழந்தை
ஒம்முடைய தொருபால கர்க்கு குசலவ னென்று பேருமிட்டு
அசலாக வந்த பிள்ளைக்குத்தான் அசலவ னென்று பேருமிட்டு
அப்போது மகாலச் சுமியை' அச்சுத ராமரே
வளர்க்கச்சொன்னேன்
வாணுத லாளந்தச் சீதையரும் மங்கை நல்லாளும்
ஏதுசொல்வாள்
ஒருபிள்ளைக் கிரண்டு பிள்ளைகண்டால் உலகளந்தோன்
என்னை ஒப்பமாட்டார்
என்று சொன்னாளே லச்சுமியும் எடுத்துரைத் தேன்நான்
கோபாலா

## சீதை தன் நிலை கண்டு வருந்துதல்

209. நானும் பத்திர காளியுமாய் இராம ரிடத்திலே
சொல்வோமென்று
அன்ன லச்சுமியே நீவளர்ப்பாய் என்று சொன்னேனே
கோபாலரே
என்று சொன்னாரந்த வால்மீகரும் ஏதுசொல்வார் நந்த
கோபாலர்

ஏற முகமது பார்க்கவில்லை ஏறிட்டு மொழிசொல்ல வில்லை
மனம்ச ளைத்து கோபாலர் மாயவர் இருக்கிற வேளையிலே
பார்த்தாளே சீதா லச்சுமியாள் பள்ளிகொண் டோனுட
செய்தியெல்லாம்
பாலரிரு பேரையும் கையில்பிடித்து பத்தினி சீதையும்
ஏதுசொல்வாள்
என்பேரிலே சுவாமி குற்றமில்லை என்றடி தொழுதாளே
லச்சுமியாள்

## இராமர் சீதை முகம் பாராமை

210. லச்சுமி விழுந்ததைக் கண்ணில்கண்டு கிழக்கு முகமாகத்
திரும்பிக்கொண்டார்
பாலரிரு பேரையும் கையில்பிடித்து பைங்கொடிச் சீதையும்
கிழக்கே வந்தாள்
கிழக்கே வந்துசீதா லச்சுமியும் கோபாலர் காலிலே
தான்விழுந்தார்
கிழக்கு முகமாக இருந்தவர்தான் தெற்கு முகமாகத்
திரும்பிக்கொண்டார்
கிழக்கே சுத்தியம்மன் தெற்கேவந்து கோபாலர் சுவாமியை
யடிதொழுதாள்

தெற்கு முகமாக இருந்தவர்தாம் மேற்கு முகமாகத்
திரும்பிக்கொண்டர்
தெற்கே சுத்திசீதை மேற்கேவந்து சிரீராம சுவாமியை
அடிதொழுதாள்
மேற்கு முகமாக இருந்தவர்தான் வடக்கு முகமாகத்
திரும்பிக்கொண்டார்
மேற்கே சுத்தியம்மன் வடக்கேவந்து வேதாந்த மூர்த்தியை
யடிதொழுதாள்
இராம சுவாமியும் கோபமதாய் நடுகத் தலையதைக்
கவிழ்த்துக்கொண்டார்
பார்த்தாரே யந்த மாமுனியும் பள்ளிகொண் டோனுட
செய்தியெல்லாம்
என்னகுற்றம் செய்தாள் சீதையரும் இப்படி இருக்கிறீர்
ரெகுராமா

## வால்மீகியிடம் தீக்குளிக்கச் சொல்லுதல்

211. என்று சொன்னாரந்த வால்மீகரும் என்பெரு மாளும்
ஏதுசொல்வார்
எத்தனை தான்முனி சொன்னாலும் என்மனது சற்றும் ஏறாது
இலங்கையில் தீமெழுகித் தந்ததுபோல் இன்னு மொருதரம்
மெழுகித்தந்தால்
சேர்த்துக் கொள்வேனான் மாமுனியே என்று பெருமாளும்
சொன்னபோது
அப்போது வீர லச்சுமியாள் அன்னை சூடாமணி
ஏதுசொல்வாள்
இன்னமும் என்பாடு துலைலயலையோ எனக்கு யிடந்தந்த
மாமுனியே
வேள்வி செய்யுமையா ரெகுநாயகா என்று லச்சுமியும்
சொன்னபோது
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்

## இராமர் வேள்விக்குழி வெட்டச்செய்தல்

212. என்னுடைய தம்பி லச்சுமணா இளைய பெருமாளே
சொல்லக்கேளாய்
வேள்வி செய்வாய்தம்பி லச்சுமணா என்று
இளைய பெருமாளோடு பரதாழ்வான் எழுபது வெள்ளமும்
வேள்விசெய்ய
அச்சுத ராமருட சொல்படியே அழகனிளை யோனும்
தானெழுந்து
வேள்வி செய்யவே வேணுமென்று வேள்விக் குழியது
வெட்டுவாராம்
ஐம்பத்தி ரெண்டடி அகலத்திலே அறுபத்தி மூன்றடி நீளத்திலே
ஆழத் தாழவே ஓமகுண்டம் அகலம் பெறவே வெட்டுவாராம்
ஏறப்படி யோடே யிறங்கப்படி இருபத்தி ஏழுபடியும் வைத்தார்

## வேள்விக்கு மரங்களை வெட்டுதல்

213. இருபத்தி யேழுபடி தனக்கும் இருபத்தேழு கும்பம் வைத்தார்
இருபத்தி யேழு கும்பத்துக்கும் இழைமுறுக்கியே காப்புங் கட்டி
வேள்வி யிலேவிற கடுக்க விரைவாக் மரம்வெட் டுவாராம்
சந்தன மரம் நல்தேக்கு சாம்பிராணி மரம்வெட் டுவாராம்
வன்னி பின்னை மரமும் வருக்கைப் பலாமரமும்

ஆத கத்தி தோதகத்தி அழகான மஞ்சணத்தி
நாங்கு மரமோடு கோங்குமரம் நல்ல இலுப்பையும்
வெட்டுவாராம்
தேக்கு மரத்தோடே செண்மணத்தி சந்தண மரம்வெட் டுவாராம்
கல்லிடை யிலேமுளைத் திருக்கும் காரி உயிலது வெட்டுவாராம்
அத்தி யோடே ஆலரசி அழகனி ளையோனும் வெட்டுவாராம்
இத்தனை மரங்களும் தானேவெட்டி இளைய பெருமாளும்
ஏதுசெய்தார்
சாணு ஒருமுழம் போட்டுத் தரித்து அடுக்கினார் வேள்வியிலே

## வேள்வித் தீ மூட்டல்

214. வேள்வியிலே, கட்டை தானடுக்கி விரைவாய் அனலது
மூட்டவென்று
அப்போது அன்ன லச்சுமியாள் அரிநெடு மாலுடன்
சொல்லுவாளாம்
என்பெரு மாளே கோபாலா ஏழைப் பங்காளா சொல்லக்கேளும்
வைப்புத்தீகற் புத்தீ ரெண்டுஉண்டு வைகுண்ட மூர்த்தியே
அறியவேணும்

## சீதை கற்பின் நிலை கூறல்

215. கற்பழிந்து அடியாள் போனதுண்டால் கட்டையில் தீயது பற்றாது
எந்தன் கற்பது அழியாவிட்டால் கட்டையில் தீயது பற்றிடுமே
வெண்ணையுண்ட தெய்வப் பெருமாளை வீர லச்சுமியும்
அடிதொழுது
அப்போது வீர லச்சுமியாள் அன்னை சூடாமணி ஏதுசெய்தாள்

## பாலகர்களைப் பிடித்துக்கொண்டு வேள்வியில் கால் வைத்தல்

216. குசலவனை ஒருகையில் பிடித்து அசலவனை யொருகையில்
பிடித்தாள்
அச்சுத ராமரை மனதிலெண்ணி கறைக்கண்டனார் தங்கை
லச்சுமியாள்
வேள்விக் கருகாக வந்துநின்று வெண்ணை யுண்டோன்தேவி
சொல்லுவாளாம்
ஆகாச வாணியே நீசாட்சி பூமா தேவியே சாட்சியென்றாள்
சந்திர சூரியரைச் சாட்சிவைத்து சானகியாள் வீர லச்சுமியும்
கொண்டையிலே வாடா மலரணிந்து பீதாம்பரப் பட்டு
கொய்துடுத்து

பெரிய மாம்பட்டுத் தோளிலிட்டு வேள்வியை மூன்றுதரம்
சுற்றிவந்தாள்
கறைகண்ட யீஸ்பரரை மனதிலெண்ணி கட்டையிலே சீதை
காலை வைத்தாள்

## கட்டையில் தீ பற்றல்

217. கற்புத் தீயது குமுகுமென்று கட்டையில் தீயது பற்றிடுமாம்
யீஸ்பர னாருட செயலாலே வளர்ந்திடும் அக்கினி
கோபங்கொண்டு
அட்டதிக்குக் காத வழிதூரம் ஆட்கள் அண்டவே போகாது
இப்படி அக்கினி வளரும்போது இளைய பெருமாளும்
ஏதுசெய்தார்

## வாசனைத் திரவியங்கள் போடல்

218. மாயவ ராமரை அடிதொழுது வாசனைப் பண்டங்கள்
போடுவாராம்
கற்பூரக் கட்டியொரு துலாம்போட்டார் கனகசாம்
பிராணியொரு துலாம்போட்டார்
மஞ்சள் பொடியிலொரு கோட்டைபோட்டார் மணக்கின்ற
வில்லைப்பொடி கொண்டுபோட்டார்
எண்ணைக் குடத்திலே தொண்ணூறும்விட்டார் எலுமிச்சம்
பழத்திலே எழுநூறும் போட்டார்
நெய்க்குடம் பால்குடம் வேள்வியில்விட்டார் ஏற்றதோர்
சந்தணத்தை வாரியிறைத்தார்
பழுத்த மஞ்சணையொரு துலாம்போட்டார் பன்னீரானது
ஒருசாடி விட்டர்
நாங்கெண்ணை கோங்கெண்ணை நறுநெய்யும்விட்டார் நல்லகுந்
திரிக்கம்பொடி கொண்டுபோட்டார்
கொத்தோடே மாம்பழத்தையும் போட்டார் குலையோடே
வாழைப் பழத்தையும் போட்டார்

## வேள்வித் தீ வளரல்

219. அப்போது லட்சுமி கற்புத்தீயால் அக்கினி பகவானும்
தான்பயந்து
மாணிக்க மாலையைக் காணிக்கையாய் மாயவர் பாதத்தில்
கொண்டு வைத்தார்

மங்கை கற்பது தான்தெரிய வானமட்டும் வேள்வ தான்வளர
அப்படி வளர்கிற வேள்வியிலே அன்ன லச்சுமியும்
இறங்கவென்று

## அசலவன் கருகுதல்

220. தங்கத் தயிலங்கள் கொண்டுவந்து தலைமெழுகி வீர லச்சுமியும்
வேள்விக் குழியிலே தானிறங்கி வெண்ணை யுண்டோன்தேவி
தீமெழுக
கெங்கையில் நீராடி வந்ததுபோல் மாது லச்சுமி தீமுழுக
தெர்ப்பையினால் பிறந்த அசலவனும் அந்த வேள்வியில்
கருகிப்போனான்

## சீதை, குசலவன் வெளிவரல்

221. தீமுழுகி மகா லச்சுமியும் திருமால் தேவியும் வெளியில்வந்தாள்
அன்ன லச்சுமியும் குசலவனும் அரிராம சுவாமியை
அடிதொழுதார்
கண்ணில் கண்டுமே கோபாலர் கனியெறிந் தோனும்
ஏதுசொல்வார்
ஒன்னுட பேரிலே குற்றமில்லை என்னுட பேரிலே குற்றமுண்டு

## சீதாராமர் வீற்றிருக்கும் நிலை

222. என்று சொல்லியே கோபாலர் சீதை யிடமாகத் தான்சேர்ந்தார்
சீதா தேவியும் அரசிருக்க தெய்வக் கன்னிமார் குரவையிட
தேவ தேவியும் அரசிருக்க தெய்வக் கன்னிமார் குரவையிட
தேவ துந்துபி முழங்கிநிற்க தவில்முர சுகள்கொட் டிவர
அனுமார் அடியினைத் தாங்கிநிற்க அங்கதன் வெண்சாமரை
கள்வீச
சாம்புவன் சோபனம் பாடிநிற்க வீடணன் தோத்திரம்
செய்துநிற்க
எழுபது வெள்ளம் சேனையடிபணிய இளைய பெருமாளும்
சந்தோசமாய்
மாயவ ராமரும் சந்தோசமாய் மாமுனி வரோடு ஏதுசொல்வார்
என்குருவே அய்யா மாமுனியே வாரும் அயோர்த்திக்குப்
போவோம்வாரும்

## அசலவனை எழுப்பித்தர வேண்டல்

223. அப்போது அந்தக் குசலவனும் அச்சுத ராமரிடம்
ஏதுசொல்வான்
என்னுடைய அய்யா ரெகுராமா ஏழைப் பங்காளா
சொல்லக்கேளும்
அசலவனை எழுப்பித் தாருமையா அயோத்தி நாட்டுக்குப்
போவதற்கு
என்று குசலவன் சொன்னபோது என்பெரு, மாளும்
ஏதுசொல்வார்

## இறப்பு பற்றிய விளக்கம்

224. என்மகனே அப்பா குசலவனே செத்தவர்கள் நாட்டில்
பிழைத்ததுண்டால்
ஆகாச வாணிதான் தாங்குவாளோ பூமா தேவிதான்
பொறுப்பாளோ
அருமை மகனே குசலவனே அயோத்தி நாட்டுக்குப்
போகவேணும்
என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வானந்தக்
குசலவனும்

## குசலவன் வர மறுத்தல்

225. அசலவனை எழுப்பித் தராவிட்டால் அயோத்தி நாட்டுக்கு
வருவதில்லை
அசலவன் இறந்ததோர் வேள்வியிலே அடியேன் விழுந்துமே
இறந்துபோவேன்
என்று குசலவன் சொன்னபோது என்பெரு மாளும்
சந்தோசமாய்
அசலவன் யிறந்ததோர் சாம்பல்தன்னை அரிராம சுவாமியும்
கையிலெடுத்து

## அசலவன் உயிர்பெற்றெழல்

226. தண்ணீர் தெளித்தந்தக் கோபாலர் தாமோ தரனும்
உருப்பிடித்தார்
வைகுண்டம் சேர்ந்த அசலவனும் வந்து பிறந்தானே வேள்வியில்
பிறந்த தொருஅச லவனும் என்பெரு மாளை யடிதொழுதான்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்

வால்மீகரே அய்யா மாமுனியே வாரும் அயோத்திக்குப்
போகவேணும்
அருமை மகனே குசலவனே அயோத்தி நாட்டுக்குப்
போகவேணும்
இளைய பெருமாளே தம்பியரே ஏற்றஅயோத் திக்குப்போக
வேணும்
என்று சொல்லியந்தக் கோபாலர் என்பெரு மாளும்
ஏதுசெய்தார்

## இராமர் அயோத்திக்குப் புறப்படல்

227. பொற்ப வாகனத்தேர் தனிலே பூமியளந் தோனும் லச்சுமியும்
வால்மீகர் மாமுனி தேரிலேற குசலவர் அசலவர் தேரிலேற
பரதாழ் வானோடு சத்துருக்கன் மன்ன னிளையோனும்
தேரிலேற
எழுபது வெள்ளம் சேனைப்படை இருபத்தி நாலு
படைத்தலைவர்
வாளும் அயோத்தியைத் தானோக்கி வானர சேனைகள்
வழிநடக்க
சேவல் முனியுட வனமும்விட்டு மருக ஒருவனம் தான்கடந்தார்
வனங்க ளென்றதோர் வனங்கடந்து வாளும் அயோத்தியா
புரிதனிலே
அயோத்தி யாபுரி தன்னில்வந்து அரிராம சுவாமியும் லச்சுமியும்

## அயோத்தியைச் சேர்தல்

228. தங்கச் சிம்மாசன மானதிலே தானிருந் தாரே இருபேரும்
ஐம்பத் தாறுதேச ராசாக்களும் அச்சுத ராமரை யடிதொழுதார்
அறுபத்தி மூன்றுபேர் மந்திரிமார் அரிய நெடுமாலை
யடிதொழுதார்
அப்போது அந்தக் கோபாலர் அனுமான் அங்கதனை
வரவழைத்து

## அயோத்தியை அலங்கரித்தல்

229. அயோத்தி அலங்காரம் செய்யுமென்று அரிராம சுவாமியும்
சொன்னபோது
வாழைக் கரும்புகள் நாட்டுவாராம் மல்லிகை பிச்சிப்பூத்
தூக்குவாராம்

சாந்தாலே தரைமெழுகி சந்தணத் தாலே கோலமிட்டார்
கண்ட கண்ட யிடங்களெல்லாம் கஸ்தூரியால் கோல மிட்டார்
வெடிவாண மதுமுழங் கிவர வெங்கல டம்மாணம் கொட்டிவர
சங்கீ தங்களும் பாடிவர தவில் முரசுகள் ஊதிவர
நட்டுவார்கள் வட்டம் பிடித்துவர நாடக சங்கீதம் பாடிவர
அரம்பையர் நாட்டியம் ஆடிவர அச்சுத ராமரும் ஏதுசொல்வார்

## முடி சமைத்தல்

230. என்னுடைய தம்பி லச்சுமணா இளைய பெருமாளே
சொல்லக்கேளும்
குசலவர்க்குத் தங்கமுடி சமைக்க கூட்டி வாரும்தம்பி மாந்தையரை
அண்ணர் ரெகுராமர் சொன்னபோது அழைத்து வந்தாரே
இளையோனும்
என்னுடைய மகன் குசலவர்க்கு ஏற்ற கிரீடம் சமையுமென்றார்
என்னுடைய தம்பி லச்சுமணா எடுத்துக்கொடு தம்பி தங்கமதை
என்றுபெரு மாளும் சொன்னபோது இளைய பெருமாளும்
ஏதுசெய்தார்
கருவலப் பிறைதான் திறந்து கடுக தங்கமது தானெடுத்தார்
எடுத்த தங்கத்தைக் கீழேவைத்து இளைய பெருமாளும்
அதைப்பூட்டி

## வால்மீகரிடம் முடியை அளித்தல்

231. தங்கமா னதைக்கையில் கொடுத்துத் தானே கிரீடம்தான்
சமைக்கச் சொன்னான்
அப்போது அந்த மாந்தையர்கள் அழகு கிரீடம் தான்சமைத்தார்
இளையவனை யொருபக்கம் வைத்து இந்திரனை யொருபக்கம்
வைத்து
தேவாதி தேவர்கள் குரவையிட தெய்வ மடவார்கள் பூச்சொரிய
நட்டுவர்கள் வட்டம் பிடித்துவர நாடக சங்கீதம் பாடிவர
வால்மீகரை ராமர் வரவழைத்து தங்க முடியதைக்
கையில்கொடுத்தார்

## குசலவர்க்குப் பட்டம்கட்ட அடிதொழல்

232. வால்மீகர் முனிதானே வந்து தங்க முடியதைக் கையில்வாங்கி
குசலவர் சுவாமியுட சிரசிலே தங்கக் கிரீடத்தைக்
கொண்டுவைத்தார்

இளைய பெருமாளுட கையாலே இளவரசுப் பட்டம்
தானும்கட்டி
அப்போது அந்தக் குசலவரும் அடிதொழு தாரே வால்மீகரை
பரதாழ் வானோடு சத்துருக்கன் இளைய பெருமாளையும்
அடிதொழுதார்
ராம சுவாமியுடன் லச்சுமியைக் குசலவர் சுவாமியும்
அடிதொழுதார்
தேச ராசாக்களை யடிதொழுது குசலவர் சுவாமியும்
தானிருந்தார்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்

## குசலவர்க்கு அறிவுரை கூறல்

233. அருமை மகனே குசலவனே சிவனை யொருநாளும் மறக்காதே
என்னையே எப்போதும் மறக்காதே எந்தனக்குக் காலம்
சரியாச்சி
ஏழைப் பரதேசிகளை இடுக்கங்கள் செய்யாதே குசலவனே
நானிருந்து அரசாண் டதுபோல் ஆண்டிருப் பாய்நீ என்மகனே
என்று பெருமாளும் லச்சுமியும் குசலவர்க்கு நல்ல புத்திசொல்லி
ராம சுவாமியும் லச்சுமியும் சிங்கா சனத்திலே அரசிருந்தார்
வைகுண்டர் வீடு போகவென்று மாயவ ராமரும்
மனதிலெண்ணி
அங்கதன் சுக்கிரீவனை வரவழைத்து அரிநெடு மாலும்
சொல்லுவாராம்

## இராமர் வைகுண்டம் போக நினைத்தல்

234. எந்தனக்குக் காலம் சரியாச்சி வைகுண்டர் வீடு போவதற்கு
வாரும் பிள்ளாயடா சுக்கிரீவா ஒன்னுட தேசத்தை
ஆண்டிருப்பாய்
என்று பெருமாளும் சொன்னபோது அங்கதன் சுக்கிரீவன்
இருபேரும்
அச்சுத ராமரை யடிதொழுது கிசுகிந்தாபுரி போய்ச் சேர்ந்தார்

## வீடணனை அழைத்தல்

235. இராவணன் தம்பி வீடணனை இராம சுவாமியும் வரவழைத்து
இலங்கைத் தம்பியடா வீடணா வைகுண்டர் வீடுநான்
போகவேணும்

எந்தனக்குக் காலம் சரியாச்சி இலங்கைத் தம்பியடா வீடணா
இலங்கை எழுநூற்றுக் காதமெல்லாம் என்னுடைய தம்பி
அரசாள்வாய்
என்று பெருமாளும் சொன்னபோது ஏதுசொல் வாரந்த
வீடணன்
எங்கள் பெருமாளே கோபாலா ஏழைப் பங்காளா சரணமைய்யா
இரணிய சங்காரம் முடித்தோனே மாவலி யைச்சிறை
வைத்தோனே
கஞ்சனை நெஞ்சைப் பிளந்தோனே கண்ணர் பெருமாளே
சரணமைய்யா.

## வீடணன் இராமரின் பெருமை கூறல்

236. பூதகியை ஊனைக் கொண்டவரே புண்ணிய மூர்த்தி
சரணமைய்யா
பிட்டுக்குச் சரியாய் மண்சுமந்து பிரம்பாலே அடிபட் டவரே
தாடகை சங்காரம் செய்தவரே தவமுனி வேள்வி காத்தவரே
மலடாகச் சூலி யிருப்பவளுக்கு மாயமாய்ப் போய்பிள்ளை
பிறப்பவரே
உரியில் வெண்ணைதிருடி உண்டவரே உத்தமனே நந்த
கோபாலா
தாளும் தவநிலையில் பிறந்தவரே தசரதர் மைந்தனே
சரணமைய்யா
ஆய்ப்பாடி ராமா சரணமைய்யா அச்சுத ராமரே
சொல்லக்கேளும்
இலங்கா புரிக்குநான் போனதுண்டால் என்பெருமாளை
நினைக்க மாட்டேன்

## வரம் கேட்டலும் வரம் தரலும்

237. அடியேனை ராமர்காத்து வந்ததுண்டால் அறிந்து கொள்வேன்
நான்கோபாலா
ஒன்னை யெப்போதும் காத்துக்கொள்கிறேன் என்று ஒருவரம்
தாருமைய்யா
மூன்று நாளைக்கு ஒருநேரம் மாயவரே எனக்குத் துணைவருவீர்
ராமா ராமாவென்று நினைக்கும்போது மாயவரே எனக்குத்
துணைவருவீர்
இந்த வரமெனக்குத் தரவேணும் என்றடி தொழுதானே
வீடணனும்

அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் சந்தோசமாய்
இந்த வரம்தம்பி உனக்குத்தந்தேன் இலங்கா புரியரசாண்
டிருப்பாய்
என்று திருமாலும் சொன்னபோது வீடணன் இலங்கைக்குப்
போய்ச்சேர்ந்தான்
எழுபது வெள்ளம் வானரத்தை என்பெரு மாளும் ஏதுசெய்தார்
தேவாதி தேவர்களாய்ப் பிறவிசெய்து சிங்கா சனத்திலே
கொலுவிருந்தார்
அப்போது அந்தப் போரனுமான் அனுமான் முகமது
சளைத்துநின்றான்
நமக்கு ஒருவரம் தந்தாரில்லை என்று தூதுவன்
சளைத்துநின்றான்.

## இராமர் அனுமானை அழைத்தல்

238. அனுமான் நிற்கிற நிலைமைகண்டு அச்சுத ராமரும்
அதையறிந்தார்
அந்நேர மந்தக் கோபாலர் அனுமானை யவர்வர வழைத்து
என்ன என்னதோர் வரங்கள்வேணும் என்னோடே சொல்லு
போரனுமான்
என்று திருமாலும் கேட்டபோது இயலனு மானும் சந்தோசமாய்
நீர்எங்கே தான்இருந்தாலும் உமது சீர்ப் பாதம்தாங்கி
நிற்கவேணும்
இந்த வரமது எனக்குவேணும் என்றடி தொழுதானே
போரனுமான்
என்பெரு மாளும் சந்தோசமாக இயலனு மானிடம்
ஏதுசொல்வார்
வைகுண்டர் வீட்டிலே யிருந்தாலும் வாசல் காத்தனுமான்
நீயிருப்பாய்

## அனுமாருக்கு வரந்தரல்

239. கறைக்கண்டர் கயிலையில் இருந்தாலும் வாசல் காத்தனுமான்
நீயிருப்பாய்
என்றைக் கும்சிரஞ் சீவியாய் என்பாதம் தன்னிலே நீயிருப்பாய்
இந்த வரமது உனக்குத்தந்தேன் என்று அனுமானைத்
தான்வாழ்த்தினார்
அப்போது அந்தக் கோபாலர் அரசி ருக்கிற வேளையிலே

## இராமரின் செயல்கள்

240. வெண்ணையுண்ட தெய்வப் பெருமாளும் வைகுண்டர் வீடு
போகவென்று
மாயன் தம்பிமாரை மனதிலெண்ணி மாய னரிகரி கோபாலர்
பரதாழ வானை வரவழைத்து பாத மாகவே மிதித்துக்கொண்டார்
சத்துருக் கனைவர வழைத்து சுழித்துக் கொண்டாரே சக்கரமாய்
லச்சுமியை ராமர் வரவழைத்து சுழித்துக் கொண்டாரே
நெஞ்சதிலே
அனுமானை ராமர் வரவழைத்து மந்திர வாளாகப்
பிடித்துக்கொண்டார்
இளைய பெருமாளை வரவழைத்து ஏறிக் கொண்டார்
கெருடவாகனமாய்
இராமசுவாமி நந்த கோபாலா நாராயண மூர்த்தி ஏதுசெய்தார்

## கயிலாசத்திலிருந்து தேர் வரல்

241. வைகுண்டர் வீடு போவதற்கு மாயவ ராமரும் தானிருந்தார்
சிவனை நினைத்துமே கோபாலர் சிவத்திலி ருந்தாரே அந்நேரம்
தெய்வக் கயிலாசம் தன்னிலிருந்து வருகுதல்லோ பொற்ப
வாகனத்தேர்
பொற்ப வாகனம் தனைக்கண்டு தெய்வக் கயிலாசம்
போகவென்று
திரைக்குள் ளிருந்தார் கோபாலர் செங்கை நெடுமாலும்
லச்சுமியும்
பொற்ப வாகனத்தேரி லேறும்போது குசலவர் அசலவர்
கண்ணில்கண்டு
வைகுண்டம் அய்யா போறாரென்று கைகுவித் தாரந்தப்
பாலகர்கள்
புண்ணிய மூர்த்தி வைகுண்டத்துக்குப் போய்ச்சேர்ந் தாரே
கோபாலர்

## பாலகர்கள் அரசாளல்

242. அய்யா இருந்ததோர் தலங்களெல்லாம் அரிநெடு மாலுட
பாலகர்கள்
கோவில் கட்டிக்கொடி மரமும்நாட்டி தேரும் திருவிழா
நடத்துவாராம்
ராமர் இருந்தர சாண்டதுபோல் குசலவர் அசலவர் இருபேரும்

ஆறிலொரு கடமை வாங்கி அசையாத மணியுங் கட்டி
கூறி லொன்றும் குறையாமல் குவலயத்தை யரசாண் டிருந்தார்
அரசாண் டிருந்தாரே பாலகர்கள் வாழும் அயோத்தியா
புரிதனிலே
வடகயி லாசம் போகவென்று வருகுதல்லோ பொற்ப
வாகனத்தார்
தேவாதி தேவர்கள் குரவையிட தெய்வ மடவார்கள் பூச்சொரிய

## இராமர் கண்டனாரை யடிதொழல்

243. பொன்மாரி பூமாரி தான்பொழிய பொற்கொடி மாதர்கள்
குரவையிட
அரம்பையர் நாட்டியம் ஆடிவர அந்தரக் கன்னிமார் குரவையிட
வைகுண்டப் பெண்கள் குரவையிட மாயவ ராமரும் லச்சுமியும்
கயிலாசம் தன்னில் வந்தல்லவோ கண்ட னாரையடி தொழுதார்
வந்தீரோ எந்தன் மைத்துனரே என்று சொல்லியந்தப் பரமசிவம்
அப்போது அந்தக் கோபாலர் அச்சுத ராமரும் ஏதுசொல்வார்
இராவணனுக்குக் கொடுத்த வரத்தாலே நலமுடனே சிறைமீட்டி
வந்தேன்
தேவர்களையும் சிறையில் வைத்தான் தேவர்சிறை எல்லாம்தான்
மீட்டி
ஈஸ்பரனே கயிலாசம் வந்தேனிப்போ என்று திருமாலும்
சொன்னபோது
பார்வதியும் பரம சிவனாரும் ராமர் லச்சுமிக்கு ஏதுசொல்வார்
தேவர் சிறையெல்லாம் மீண்டதினால் தெய்வப்பிரா
னென்னுபேர் கொடுத்தார்
பேர்கொடுத்தார் பரம சிவனாரும் பெருமா ளும்ஏது சொல்வார்

## வைகுண்டத்திற்குப் புறப்படல்

244. வைகுண்டர் வீடு ஆனதற்கு இளையோனே தம்பி
போவோமென்றார்
பொற்ப வாகனத்தேரை வரவழைத்துப் பூமியளந் தோனும்
லச்சுமியும்
மகாலச்சுமி தேரிலேற தெய்வ மடவார்கள் குரவையிட
சிவனார் கயிலாச மலையும்விட்டு வைகுண்ட லோகம்
தானோக்கி
வருகுதல்லோ பொற்ப வாகனத்தேர் வைகுண்ட ராமரும்
வாறாரென்று

இராம சுவாமியும் லச்சுமியும் வைகுண்டர் வீட்டிலே
தானேவந்தார்
வைகுண்ட ராமரும் வந்தாரென்று வைகுண்டர் வீடு
அலங்கரித்தார்
வாழைக் கரும்புகள் நாட்டுவாராம் மல்லிகை பிச்சிப்பூத்
தூக்குவாராம்

## இராமருக்குச் சிங்காதனம் அமைத்தல்

245. கதலிக் குலைகளை நாட்டுவாராம் கமுகம் பாளைகளைத்
தூக்குவாராம்
பட்டுப் பட்டாழித் தூக்கிடுவார் பன்னீராலே எங்கும்
சொரிந்திடுவார்
மரகதத் தாலே பந்தலிட்டு மாணிக்கத் தாலே விளக்கேற்றி
ராமருக்குச் சிங்கா சனமதுதான் ரத்தினத்தாலே அழுத்து
வாராம்
தங்கச் சிம்மாசன மானதிலே பூவாலே யெங்கும் பந்தலிட்டார்
வைகுண்ட ராமரும் வாந்தாரென்று முப்பத்து முக்கோடி
தேவரெல்லாம்
முப்பத்து முக்கோடி தேவரெல்லாம் முனிவ ரிஷிகளும்
அடிதொழுதார்
அரம்பையர் நாட்டியம் ஆடிவர அந்தரக் கன்னிமார் குரவையிட
சந்திர சூரியர்வந் தடிபணிய சானகியாள் வீர லச்சுமியை
வள்ளி தெய்வானை வந்தடிபணிய வைகுண்டர் வீடு ஆனதிலே
அரிகரி ராமரும் லச்சுமியும் அழகு சிங்காசனத்தில் அரசிருந்தார்
பார்வதி யும்ஈஸ் பரனும் பாவினை யாகவே வீற்றிருந்தார்

## அரி, அரன், அயன் வாழ்த்தல்

246. வாழ்க வாழ்க திருவாழ்க விக்கின யீஸ்பரனும் தான்வாழ்க
பார்வதியை யிடமாக வைத்த பரம சிவனும் தான்வாழ்க
லச்சுமியை நெஞ்சில் தரித்த ராம சுவாமியும் தான்வாழ்க
நாவில் உதிக்கும் சரஸ்வதியும் நான்முகனும் தழைத்து வாழ்க

## சிரீராமரும் தேவியும் வாழ்த்தல்

247. ஆகாச வாணியரும் பூமாதேவி நன்றாய்த் தழைத்து வாழ்க
செங்கை யிலேவில் முடித்த சிரீராம சுவாமியும் தழைத்துவாழ்க
சந்திரர் கள்சூரி யர்கள் மேன்மேலும் பெருகி வாழ்க
இந்திர செயித்தை வென்றதொரு இளைய பெருமாளும்
தழைத்துவாழ்க

## குசலவர், குதிரை வாழ்த்து

248. குசலவர் அசலவர் இருபேரும் குவலயத்தில்
நன்றாய்ப் பெருகிவாழ்க
திருவேள்வி யில்தான் பிறந்த தெய்வக் குதிரைதான்
தழைத்துவாழ்க
அயோத்தி யிலுள்ள வர்கள் அனைவரும் நன்றாய்த்
தழைத்துவாழ்க
எழுபது வெள்ளம் சேனைகளும் எல்லோரும் நன்றாய்த்
தழைத்துவாழ்க

## குரு, தாய்தகப்பன் வாழ்த்தல்

249. வாழ்க வாழ்க எந்தனுட குருயெப் போதும் தழைத்துவாழ்க
அரியென் றெழுத்தோதி வைத்த அண்ணாவி நன்றாய்த்
தழைத்துவாழ்க
இக்கதையை என்னைப் படிக்கவைத்த என்தாய் தகப்பர்
தழைத்துவாழ்க
எழுதிப் படித்த வர்கள் எக்காலமும் நன்றாய்த் தழைத்துவாழ்க

## கதை கேட்டதன் பலன்

250. பாடும்போது கேட்ட வர்கள் பவுசையுடன் நன்றாய்த்
தழைத்துவாழ்க
ஆல்போல் தான் தழைத்து அருகுபோல் வேரூன்றி
மூங்கில் போலன்ன சுத்தம் முசியாமல் தான்வாழ்க
அக்கம் பக்கம் உள்ளவர்கள் அனைவரும் நன்றாய்த்
தழைத்துவாழ்க
ராமாவென்ற சொல்லைக் கேட்டவர்கள் மாநிலத்தில் நன்றாய்ப்
பெருகி வாழ்க
குசலவர்கள் கதையைக் கேட்டவர்கள் கோத்திர மெல்லாம்
தழைத்துவாழ்க
லச்சுமி படுந்துயரம் அறிந்தவர்கள் நன்றாய்த் தழைத்து வாழ்க!

குசலவர் சுவாமி கதை முற்றிற்று
அரிஓம் நன்றாகக் குருவே துணை

# இணைப்பு — 1

## பயன்பெற்ற நூல்கள்

1. *'அபிதான சிந்தாமணி'*, ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி, 1981.

2. *'ஆங்கில-தமிழ் அகராதி'*, ஏ. சி. செட்டியார், சென்னைப் பல்கலைக்கழகம், 1965.

3. *'இந்துமத இணைப்பு விளக்கம்'*, க. ஆறுமுக நாவலர், தொண்டன் காரியாலய வெளியீடு, 1963.

4. *'ஏட்டில் எழுதாக் கவிதைகள்'*, செ. அன்னகாமு, சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சை, 1960.

5. *'கண்ணீர் வயல்கள்'*, முகமதலி ஜின்னா, சாரதி பதிப்பகம், சென்னை, 1980.

6 *கதைப்பாடல்-சில அணுகுமுறைகள்'*, கருத்தரங்கக் கட்டுரை, டாக்டர் பூ. சுப்பிரமணியம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 26-2-88.

7. *'கம்ப இராமாயணம்'*, யுத்த காண்டம், நமச்சிவாய முதலியார், நிரஞ்சன விலாஸ அச்சு யந்திரசாலை, சென்னை, 1905.

8. *'கம்ப ராமாயண வசனம்'*, இரண்டாம் பகுதி, சு. இ. இராமசாமிப் புலவர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, சென்னை, 1956.

9. *'கலைக்களஞ்சியம்'*, தொகுதி-2, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955.

10. *'கலைக்களஞ்சியம்'*, தொகுதி-4, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

11. *'சுவடிப் பதிப்பில் — சில அணுகுமுறைகள்'* கருத்தரங்கக் கட்டுரை, டாக்டர் பூ. சுப்பிரமணியம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 6-11-87.

12. *'தண்டியலங்காரம்'*, சுப்பிரமணிய தேசிகர் உரை; சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971.

13. *'தமிழ்ப் பேரகராதி'*, தொகுதி - 1, பகுதி - 1, சென்னைப் பல்கலைக்கழகம், 1982.

14. 'தமிழ் பேரகராதி', தொகுதி-5, பகுதி-1, சென்னைப் பல் கலைக் கழகம், 1982.

15. 'தமிழ்ப் பேரகராதி', தொகுதி-3, பகுதி-1, சென்னைப் பல் கலைக் கழகம்.

16. 'தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு', டாக்டர் ச. வே. சுப்பிர மணியன், பதிப்பாசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979.

17. 'தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்', சோமலெ, நேஷ னல் புக் டிரஸ்ட், புதுதில்லி, 1981.

18. 'தமிழக நாட்டுப் பாடல்கள்', மு. வை. அரவிந்தன், லட்சுமி பதிப்பகம், சென்னை, 1965.

19. 'தமிழர் நாட்டுப் பாடல்கள்', நா. வானமாமலை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1977.

20. 'தமிழிர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்', டாக்டர் க. காந்தி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

21. 'தமிழில் கதைப் பாடல்கள்', டாக்டர் அ. நா. பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

22. 'தமிழில் வில்லுப்பாட்டுகள்', தி. சி. கோமதிநாயகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1979.

23. 'திருக்குறள் சொற்பொருள் 'அகரவரிசை', கழக வெளியீடு, சென்னை, 1969.

24. 'தொல்காப்பியம்', பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1971.

25. 'நாட்டுப்புறப் பாடலும் பண்பாடும்', அந்தனிஜான், அழ கரசன், கழக வெளியீடு, சென்னை, 1977.

26. 'நாட்டுப்புற இயல் — ஓர் அறிமுகம்', சு. சண்முகசுந்தரம், இலக் கிய மாணவர் வெளியீடு, சென்னை, 1975.

27. 'நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம்', புலவர் இரா. சுரேந்திரன், தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1981.

28. 'பதிப்புப் பார்வைகள்', டாக்டர் அ. விநாயகமூர்த்தி, பால முருகன் பதிப்பகம், மதுரை, 1983.

29. 'மலடியும் மழலையும்', நாட்டுப்புறவியல் ஆய்வு, நா. இளங்கோ, மீனா புத்தக நிலையம், விழுப்புரம், 1985.

30. 'மனை நூல்', டாக்டர் பூ. சுப்பிரமணியம், பதிப்பாசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

31. 'வான்மீகி ராமாயண வசனம் யுத்த காண்டமும் உத்தர காண்டமும்', பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் சுவாமிகள், ரத்தினம் அச்சகம், சென்னை, 1962.

# இணைப்பு - 2

## சொல்லடைவு

### இடப்பெயர்கள்



### சாதிப்பெயர்கள்



### உறவுமுறைப் பெயர்கள்

**பொதுப்பெயர்கள்**



**இறைப்பெயர்கள்**



**இராமன்**

## விலங்குப் பெயர்கள்



## பறவைப் பெயர்கள்



## உணவுப்பொருட் பெயர்கள்

## வழக்காற்றுப் பெயர்கள்



## வடமொழிப் பெயர்கள்



முருகன்

பொருட்பெயர்கள்



எண்ணுப்பெயர்கள்

## இணைப்பு 3

# குசலவர் வாக்கியம்

## இராமஜெயம்

தெ ... திரவியங்கள் குவித்து
சீக்கிரமாய் ஓமந்தான் துவச்சிசெய்ய லுற்றார்
அக்கினியை யிருவர்பெற்ற தழகோமத் தட்டில்
சுபமங்கிலியர் கொண்டுவந்து சோபனங்கள் பாட
விக்கினங்கள் வாராமல் வேண்டிவரந் தொழுது
விருப்பமுள்ள தேங்காயை உடைத்தவரும் பணிந்தார்
அக்கினியைத் தீமூட்டி அடைந்தமுனி தேவாள்
அபிராம ரெழுந்திரென்று....
செனகரைப்போல் தான்கண....
அங்குமணி யெடுக்கவென்று அ....
வேணவெண் தனங்கொடுண்டும்....
ஆனையின்மே லெங்குமணி அலங்....
மேளமுடன் தாரைவீணை நாதசுர முழங்க
வேடிக்கையாய்த் தேரேறி வீதிவரும் அத்தை
ஸ்ரீராமர் தான்கண்டு சிந்தைமன மகிழ்ந்து
ஸ்ரீவருதர் தனையழைத்து ஸ்ரீராமர் உரைப்பார்
(தம்பி) வாய்த்தபுகழ் செனகராச மாதருடன் வாறார்
மணித்தேங்காய் கைகொடுத்து வரவழைத்து வாரும்
ஸ்ரீராமர் யேவலுமே ஸ்ரீவருத ரோடி
செம்பொன்மாலை ஒளிதிகழத் திருக்கையினால் கூப்பித்
தீர்க்கமுடன் செனகராசரைத் திருத்தேரைவிட் டிறக்கி
சிறுத்தேங்காய் கையில்கொடுத்துச் சென்ற....
வான்வரு மிந்திரரும் நான்மறை....
மங்களமாய் மாதருடன் மாளிகை....
அன்புடனே ஆசனம்பவிட்டு அள....
அபிராமர் தம்பியுடன் அழகாகப் பணி....
அடவுடனே நால்வர்வந்து அழகாக.... (1)
தீர்க்கமுடன் வாழ்வீரென்று செனக....

தாம்பூலம் வெகுகோடி சந்தணங் கஸ்தூரி
பாங்காகப் பாஞ்சாலர் பலரோதிக் கொடுத்தார்
ஸ்ரீராம ருளமகிழ்ந்து திருக்கையிலே வாங்கி
ஸ்ரீராமர் தம்பியுடன் சிங்காதன மிருந்தார்
தேன்மொழியாள் சீதையரும் தாதியுட நடந்து
செனகருடன் திருந்தடியை சென்னிறங்கிப் பணிந்தாள்
சீதையரும் பணியலுமே செனகர்கண்டு மகிழ்ந்து
(அமமா) தீர்க்கசுபமங் கலியோமென்று செனகர்மன மகிழ்ந்து
மைத்திலியாள் சீதையரும் மாதர்வைப்போய் பணிந்தாள்
மைந்தர்பதி னாறும்பெற்று மகிழ்ந்திருப்பீ ரம்மா
மாங்கிலியந் தழைத்தேறி வாழ்ந்திருப்பீ ரம்மா
மலர்குழலை முகந்துகொண்டு மாதாயெடுத் தணைத்தாள்
பூரித்துள்ள மனிமகிழ்ந்து புகழ்பெரிய ராமர்
பொற்பூவைப் பாதம்வைத்துப் பணிந்துநமஸ் கரித்து
மணமாலை சந்தணமும் வாய்த்தமணிப் பட்டும்
அழகான பொற்தட்டுக் குள்ளாக வைத்து
இலையுடனே வெள்ளடக்காய் யேலங்கஸ் தூரி
இன்பமான ராமர்எதிர்க் கைக்கொடுத்து நின்றாள்
சுவாமிகயல் புறாதனகண் மலரெனகஸ்தூரி பொட்டென
கருணையென்ற வார்காதில் கனத்தகுண் டலமின்ன
கண்டமாலை ஒளிதிகழ கனகயிடை மின்ன
முன்கைமூ தாரிகடகம் மோதிரங்கள் மின்ன
மணிவிரலி லாழிமின்ன மகிழ்ந்துமுடி குலுக்கி
வந்தமறை யோர்கள்தம்மை கையெழுத்தும் அழகென
மகாலட்சுமி யுறைந்தமணி மார்பிலழ கென....
மணவாள ராகவரைக் கண்டுமன மகிழ்ந்து
(அம்மா) கலியாண ராகவரைக் கணவனென்று அடைய
காரிழையே எத்தவங்கள் செய்தீரோ அம்மா! (2)

மைதிலியே சீதையரே மணமாலை சூட
மால்ராமர் பாக்கியங்கள் பண்ணாரோ அம்மா
மலர்ந்தமுடி பந்தலிலே மகிழ்ந்துதலை குனிந்து
மால்ராமர் காணாதே மறையநின்றாள் மாது
ஸ்ரீராம ரைப்பயந்த கோசலைமா தாவும்
செங்கதிரோன் உதித்தாற்போல் செகமேழும் விளங்க
செழுமணிப்பூம் பந்தலிலே வந்தபடி கேட்டுச்
சீருடைய அரண்மனையில் சுமித்திரையை அழைத்து

செம்பவழ வாய்திறந்து தீர்க்கமுட னுரைப்பாள்
(மாதே) களிப்புடைய செனகராசர் கலியாணி தேவி
காட்சியுள்ள மண்டபத்துக் கருணையினால் வந்தார்
சித்திரகூட மண்டபத்தில் சென்றழைத்து வாரும்
செம்பொன்மணி ரத்தினங்கள் சீர்பெறவே போடும்
பாலுடனே பழங்கள்முத்து பொன்னரிசி கலந்து
பாதந்தனி லேசொரிந்து பட்டாலே துடைத்து
அழகுமணி ஆதினத்திலே பொற்பூவுஞ் சொரிந்து
அரசரக மாதர்தனை யிருமென்று சொல்லும்
கோசலையா ளுரைக்கலுமே சுமித்திரையுங் கேட்டு
காட்சியுள்ள மண்டபத்தில் தாதியரை அழைத்து
தாதிகளிப்புடை யசெனகராசர் கலியாணி தேவி
காட்சியுள்ள மண்டபத்தில் சென்றழைத்து வாரும்
செம்பொன்மணி ஆதினங்கள் சீர்பெறவே போடும்
பாலுடனே பவழமுத்து பொன்னரிசி கலந்து
பாதந்தனி லேசொரிந்து பட்டாலே துடைத்து
அழகுமணி ஆதினத்தில் பொற்பூவுஞ் சொரிந்து
அழிந்தசெம்பொன் தளுகையிலே ஆரத்திக்காப் பெடுத்து
அரசரக மாதர்தனை யிருமென்று சொல்லும். (3)

சுபத்திரையா ளுரைக்கலுமே தாதியருங் கேட்டுப்
பணியப்பொன்னா லிழைத்த பட்டுமே கட்டி
சரூதிலிங்கத் தூண்நிறுத்திச் சந்தணத்தால் மெழுகி
பவழமணித் தானிரு பன்னீரால் தெளித்து
தூகிகாகத் தூக்குநகர் கண்ணாடி கட்டி
சித்திரம்போல் பொற்பதுமை .சேரநின்று பேசும்
ஸ்ரீராமர் சீதையுடன் பள்ளிகொள்ளும் உள்ளே
தூங்கா விளக்கெரிய வண்டு குழல்பாட....
சோதிரகு ராமரென்று அன்னம்வந்து மயங்க
ஸ்ரீராமர் சீதையுடன் பள்ளிகொள்ளு....
கல்யாணி தேவிதனைக் கேயழை யெண்ணு....
அங்கிருக்குந் தாதியர்கள் அனைவோர்க்குஞ் சொல்லி
செம்பொன்மணி மாலைகொண்டு சென்றெதிரே வந்தார்
மணமாலை தன்னையவள் மாதர்கையில் கொடுத்து
மணிக்கடகக் கையைப்பிடித்து வரவழைத்து வந்தார்
சிறுசதங்கைப் பாடகமும் சென்றொலிக்க நடந்து
செம்பொன்னா லாபரணங்கள் பொற்பதக்க மின்ன

வார்காதில் தோடசைய வாழியுடன் சுட்டி
மகுடமுடிச் சாலகமும் தகதகென்ன மின்ன
சாதிலிங்கப் பட்டனாசந் தங்கிப்பொன் மின்ன
தலைவாசல் தன்னையவள் தட்டாமல் நுழைந்தாள்
சீருடைய அரண்மனைக்குச் சேர்ந்துவரு மளவில்
தேவிமா ரெல்லோரும் சென்றெதிரே வந்தார்
பாலுடனே பவழமுத்து பொன்னரிசி கலந்தும்
பாதந்தனி லேசொரிந்து பட்டாலே துடைத்து
அழிந்தசெம்பொன் தளுகையிலே ஆரத்திக்காப் பெடுத்து
அரசரக மாதர்தனை யிருமென்று சொன்னார்
இலையுடனே வெள்ளடக்காய் ஏலங்கஸ் தூரி (4)

*(ஐந்தாவது ஏடு இடையில் காணப்படவில்லை)*

•

**சிவம்:**

கண்டமா னைப்பிடித்துத் தரச்சொன் னீரோ
(அம்மா) அன்புடைய தோழியரை அயோத்திநகர் விட்டு
அம்மானூர் பந்தாட வந்தாரோ அம்மா
சிராருடனே விளையாட ஆசைகொண்டாய் சீதா
(அத்தை) கலியாணி கிழக்கிலுமே காரிஸ்ழயாள் சீதை
....விட்டுத் தானிறங்கி வணங்கயெடுத் துரைப்பாள்
(அம்மா) அந்த—மானிருந்த அழகுநா மாருமறி யோமே
(இந்த) மண்டலங்கள் விலைபெறுமே மானிருந்த அழகு
பஞ்சவடிக் கரைதனிலே பர்ணசாலைக் கிடது
பக்கமாய் வந்தமானைப் பிடித்துத்தரச் சொன்னேன்
(அந்த) மால்ராமர் தான்கேட்டு மான்பின்னே நடக்க
ரெகுநாதர் நடக்கலுமே லட்சுமணர் கண்டு
(அண்ணா) அரக்கர்மெத்த சஞ்சாரம் யார்வளர்த்த மானோ
மானைநாம் பிடித்தமானால் வழறாவரு மென்றார்
(தம்பி) அரக்கருட வழறாவந்தா லழைத்தமானை் கொடுப்போம்
(அதன) மரணசண்டை வந்தால்நா மாரானு மெதிர்ப்போம்
மைதிலியே யிருமென்று மால்ராமர் நடந்தார்
நடந்ததொரு நாழிகைக்கி ராமருட சத்தம்
.... .... ..... .... .... .... ..,. .... .... ..... .

வெருடனே சண்டையோ எழில்பெரிய ராமர்
இளையபெருமாள் போயறியும் என்னாணை யென்றேன்
ஆணையென்ற வீரங்குகாவு மதிர்ந்துயெழுந் திருந்து
(அம்மா) அயன்வந்தெ திர்த்தாலும் அவிழும்ராம ரோடே
ஆர்பிழைத்துப் போவார்க ளறியீரோ சீதாய்
செனகருட மிதிலையிலே சிலையம்பை வளர்த்து
சீதையும்மை மாலையிட்டுச் சதியறி யீரோ
ஆருமக்குத் துணையைவைத்து அறியநான் போவேன்
மனஞ்சலித்து அவர்நடக்க மாயராட் சதனும் (6)

பழுத்தசந்நியா சியைப்போல் பர்ணசாலை வந்தான்
மாமுனியைக் கண்டுடனே மகிழ்ந்துநா னெழுந்து
எந்தவன மெங்கிருந்து யிங்குவந்தீ ரைய்யா
என்பங்கு தெய்வம்போல் எனக்குத்துணை யானீர்
மால்ராமர் லட்சுமணர் மான்பிடிக்கப் போனார்
வரந்தனியு மிங்கேயிரும் மாமுனியே யென்றேன்
மாமுனியே யென்றலுமே வந்தராட் சதனும்
பத்துமுடி யிருபதுகை பார்த்துநான் பயந்தேன்
உடல்நடுங்கி உளநடுங்கி ஓடிஒளித் தழுதேன்
மாயரக்கன் பாவியவன் மண்ணோடே பேர்த்து
வாழிலங்கு சோலையிலே வனசிறையில் வைத்தான்
அரக்கியரைக் காவல்வைத்து அவன்மகிழ்ந்து போனான்
செனகரைப்போல் ராட்சதரைச் சேர்த்துக்கட்டிக் கொண்டுவந்து
(உன்) கொப்பனாரைக் கொண்டுவந்தேன் சொல்வதென்ன சீதா
வம்பையெல்லாம் விட்டுவிட்டு வெத்திரா வணனே
மிண்டுநி சேராவிட்டால் வெட்டுதன்பார் வாளால்
வெட்டுதன்பார் உன்னெதிரே வீரமணி வாளால்
ஓங்கியவன் வாளுருவ ஓவென்று கூவி
மைதிலியே மகளேயென்று மண்ணில்விழக் கண்டேன்
ஐயா சனகர்யென் னருஞ்சிறையுங் கண்டு
அரக்கன்கையில் கட்டுமுண்டு ஆவியிறந் தாயோ
திக்கொருவ ரில்லாதே திகைத்துநான் புலம்ப
திருச்சடையாள் தான்கண்டு சிந்தைதள ராதே சீதாய்
அரக்கருட மாய்கையென்று அறியீரோ
அஞ்சாதே யென்றுசொல்லி ஆறுதலைச் சொன்னாள்
தாய்வந்தாள் தங்கைவந்தாள் தள்ளிவந்தேன் சீதாய்
வேடியவன் போய்நடப்பான் மீண்டுமவர் முன்னப்பார்

ராமரைப்போல் லட்சுமணரைப்போல் ராட்சதனைக் கொண்டுவந்து
வேடியவன் போய்நடப்பான் மீண்டுமவர் முளைப்பர் (7)

அனுமாருட புண்ணியத்தா லயோத்திவந்து சேர்ந்தேன்
(உங்க) ளனைவருட ஆசீர்வாதத்தால் அபிராமரைக் கண்டேன்
காரிகையாள் சீதைசொல்ல கலியாணி கேட்டு
(அம்மா) அரக்கருட லங்கையென்று ஆரறிவா ருலகில்
அனும்ாரான படியினாலே அறிந்துவந்து கண்டார்
அடையாளங் கொண்டுவந்து அவரவரைப் பணிந்தார்
அடையாளந் தான்வாங்கி அனுமானைப் புகழ்ந்து
தம்பியுடன் வானரங்கள் சகலசெனங் கூட்டி
சமுத்திரத்தை யணையாய்கட்டி சரமாரி தொடுத்து
வந்தெதிர்த்த ராட்சதரை மண்ணில்விழ அடித்து
மைதிலியை மீட்டுவந்தார் மால்ராம ரம்மா
(என்று) செனகர் சொல்லக் கேட்டிருந்தேன் சீதமா தேவி
மாதாவும் சீதையுமாய் மகிழ்ந்திருக்கும் போது
ஸ்ரீராமரைப் பயந்த கோசலைமா தாவும்
செங்கதிரோன் உதித்தாற்போல் செகமேழும் விளங்க
செழுமணிப்பூம் பந்தலிலே வந்தபடி கேட்டு
சீருடைய அரண்மனையில், சுமித்திரையை அழைத்து
செம்பவழ வாய்திறந்து தீர்க்கமுட னுரைப்பாள்
(மாதா) களிப்புடைய செனகராசர் கலியாணி தேவி
காட்சியுள்ள மண்டபத்தில் கருணையுடன் வந்தார்
செல்வமுள்ள தசரதனார் சிவலோகல் சேர்ந்தர்
சென்றொருநாள் வந்துதம்மைக் கண்டதில்லை யம்மா
சோதிர்கு ராமருட கலியாணந் தன்னில்
துக்கமென்று சொன்னாக்கால் வெக்கயிணி ரம்மா
தோதகத்தும் பட்டாலே மேலெங்கும் பூட்டி
பத்துலட்சம் பொன்பெற்ற பட்டுமேல் சாற்றி
பணியப்பொன் கணையாழி கைநிறையப் பூட்டி
சீருடைய சுமித்திரையைக் கைதனிலே பிடித்து (8)

தேன்மொழியாள் தாதியரும் பின்னடக்க நடந்தாள்
அபிராமர் தாய்மாரை வரவுகண்டு மாது
அழகுமணி ஆதனத்தில் கீழாக யிறங்கி
அரும்போடும் பொறீபூவும் போட்டவள் பணிந்தாள்
கலியாணி பணியலுமே கோசலையும்பார்த்து
(அம்மா) சீருடைய மிதிலையிலே செல்வமிதி லாவீர்

செனகருட திருத்தோளைப் பிரியாமல் வாழ்வீர்
கோசலையாள் வாழ்த்தலுமே கலியாணி யெழுந்து
(அம்மா) கட்டியதோர் பொற்காப்பு மாலைகுலை யாதே
கருத்துடைய லட்சுமணர் கூடவனம் போனார்
மன்னவரே ஸ்ரீராமர் வென்றுமனம் உருகி
மனச்சோகத் தானேயல்லோ வானடைஞ்சா ரம்மா
சித்தடியே சீதையரும் திரிந்தஅரண் மனையில்
சென்றும்மைக் காணுவது யெப்படியென் றிருந்தேன்
மாறியறியாப் பாலகர்கள் வனவாசம் போன
மனச்சோகத் தாலேயல்லோ வாராம லிருந்தேன்
சித்தடியாள் சீதையரும் திரிந்தவன வாசம்
தென்னிலங்கைச் சோலையிலே காத்தகுறை போதும்
அதிமுடுக்கு லட்சுமணரம் பும்வில்லுங் கொண்டு
வருத்தமுடன் காத்தாரே வாழுமஞ் சரம்மா
கலியாணி யுரைக்கலுமே கோசலையாள் கேட்டு
(அம்மா) ஊகித்தடியாள் சீதையிலும் யென்செல்வமக னரசோ
தேவிநீ உபசாரம் ஆருக்குரைத் தீரம்மா
கடிதான கைகேசி பெற்றவரத் தாலே
கல்நெஞ்சு கூனியுட கற்பனை யினாலே
மதிப்பான பாற்கடலில் உதித்ததொரு ராமர்
மகிமைசற்றும் அறியாமல் வரங்கேட்டுக் கொண்டார். (9)

மத்தளங்கள்பேரிகைகள் துந்துபிகள் முழங்க
மால்ராமர் சீதையரை மணம்பொருதிவரும் போது
மாபாவி கைகேசி மனசைமெத்த வெறுத்து
வனவாசம் போவானென்று வாழ்த்தினது மறியோம்
ஆட்சியான பந்தலிலே அரசுநிலை நிறுத்தி
காட்சியான பந்தலிலே காடைவிளக் கெரிய
கற்பூர் ஆரத்தி யெடுக்கதிஷ்டி கழித்தோம்
களிப்புடைய தசரதனார் காணாத காட்சி
கலியாணி மகாதேவி கண்குளிரப் பாரும்
அந்திநேரம் பந்தடிப்பாள் அன்னலூஞ்ச லாடுவாள்
அனந்தலுந் திருஷ்டிசிணம் அழகுபெற சாற்றுவாள்
எல்லை வீதி யோடுவாள் கொன்றுரத்தம் வாங்குவாள்.
யிலங்கைசுட்ட ராமருரா யிணையவள் பாற்பதி (1)

துலங்குமணி சூரனை சிலம்பினால் உணர்ந்தவள்
துலங்குபொன் விற்கையால் ரெண்டுபந் தடிப்பாளே (2)

கோலமெழு கொங்கைரெண்டு குளிர்ந்தசாந் தணைந்தவள்
மூலமே சரணமென்று மூன்றுபந் தடிப்பாளே (3)

பக்கவே பழுப்பது பழுப்பினாலே யுள்ளவள்
உரக்கநாலு பந்துகொண்டு உலாவியே யடிப்பாளே (4)

அன்னவர் கருங்குழலி ஆடுவர்ரா மாக்கிளி
அன்னம்போல நடைநடந்து அஞ்சுபந் தடிப்பாளே (5)

பஞ்சணைந்த மெத்தையின்மேல் பாடகஞ் சிலத்துளால்
ஆடதோட ரோடிவந்து ஆறுபந் தடிப்பாளே (6)

வில்லுறி முறியவே மேல்புருவங் கண்ணினால்
கண்ணினால் கனிபழங் கனிபழங் கனியவே
எண்ணியெண்ணி யெங்யெங்கி ஏழுபந் தடிப்பாளே (7)

கட்டிவிட்ட சேலையும் கனகனத்தா ளோசையும்
யிட்டமார்க் கசைந்திருக்க எட்டுபந் தடிப்பாளே (8)

பந்துக்காரி யவள்உரத்த தோழிமச் சினியொரு
பந்தை யிங்கேவைத்து ஒன்பதுபந் தடிப்பாளே (9)

பத்தில்லாத பத்தினி பழுதில்லாத் பாற்பதி
பத்துவாய் மரத்தின்கீழே பத்துபந் தடிப்பாளே (10)

ஸ்ரீராமசெயம். உண்ணாமலையம்மன் பந்தடிச்சொல்.

## பந்தடிச்சொல் முற்றும்

என்று 10 ஏடுகளைக் கொண்டுள்ள இந்தச் சுவடி அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. இராம சரிதத்தை விளக்கும் வகையில் அமைந்துள்ள இச்சுவடியில் பாடல்கள் முழுவதுமாகக் கிடைக்கப்பெற வில்லை. 'குசலவர் வாக்கியம்' என்று தலைப்பு தரப்பட்டுள்ளதே தவிர கிடைத்த ஏடுகளில் குசலவரைப் பற்றிய செய்தி காணப்படவில்லை என்பதையும் அறிய முடிகிறது.



